XI. **The Senathipathy :—**

Another flower of Chandra Gupta's Court is the Senathipathy, the loyal commander, in whom the king has not been disappointed. To the Senathipathy, "Obedience is the courtesy due to kings"; and he therefore remains loyal to all the wishes of the king. His regime is righteous and benign, and although he has every facility to taste the fruits of ambition, the crown never once attracts him in his life. He believes in astrology, and the hope given by experts in that science makes him confident of the king's return. His joy is unbounded at the return of the king, and such hearty welcome as the king receives at his hands, is but a rare factor in the history of the kings of those old troublous times.

He is sincere in his gratitude towards Vichitraviryan and Purushothaman, and although at first duty forbids him from approving the latter's love for Vasanthika, he is mainly instrumental in bringing about the lovers' marriage. We have already observed that any king can be proud to have such a servant.

XII. **The conclusion** :—The play as a whole is a marvel of dramatic force. It is rich in the variety of characters which are so dissimilar and yet each attractive in its own way. The play as has been styled in the title page, is a historical romance. It is fiction of a high order, woven into historical incidents and set in a background of history. For further details about the historical touches in the play, the reader is referred to the notes at the end of the book.

It needs no pointing out that, from beginning to end, the play has a tone of high moral purity. Besides, a strong undercurrent of optimism runs through the play; and the conclusion is in entire harmony with this optimism.

I would fain add a few more paragraphs on topics such as the unities, the treatment of the dramatic irony etc. But as this Introduction has already outgrown its originally-contemplated length, I wish to conclude it with an apology to the public that my shortcomings as a critic may kindly be overlooked.

RENUKA BHAVAN:
PUDUKKOTTAI,
*1st January 1919.*

**R. AMBASANKAR RAO.**

# நாடக பாத்திரங்கள்.



1. சந்திரகுப்தன் :— புஷ்பபுரத்து மன்னன். குப்த சக்கிரவர்த்தி.

2. வாத்ஸல்யன் :— ⎫ சந்திரகுப்தனுடைய
3. கமலாஸனன் :— ⎭ அமைச்சர்கள்.

4. ஜயபாலன் :— ⎫ கமலாஸனனுடைய
5. கருணாகரன் :— ⎭ நண்பர்கள்.

6. புருஷோத்தமன் :—வாத்ஸல்யனுடைய குமாரன்.

7. விசித்திரவீரியன் :—ஓர் நகரத்தான்.

8. துருவதேவி :— சந்திரகுப்தனுடைய இரண்டாவது மனைவி.

9. லீலாவதி :— துருவதேவியின் தோழி.

10. வாஸந்திகை :— சந்திர குப்தனுக்கு முதன் மனைவிபால் பிறந்த பெண்.

11. சுலக்ஷணை :— வாஸந்திகையின் தோழி.

சேனாதிபதி, வக்கீல், இராஜ குமாரன்,
ஜயிலதிகாரி, ஸர்தார், சேவகர்கள்
முதலியோர்.



நிகழிடம்: பெரும்பான்மை புஷ்பபுரத்திலும், சிறுபான்மை புஷ்பபுரத்தை யடுத்த உதயகிரி ரஸ்தாவிலும்.

குறிப்பு: புஷ்பபுரமென்பது பாடலீபுரத்தின் மற்றோர் பெயர்.



# 2-வது சந்திர குப்தன்.

(விக்கிரமாதித்யன்)



## அங்கம் I.

### களம். I. புஷ்பபுரம். ஓர் தெரு.

### காலம்—காலை.

---

(கமலாஸனன் பிரவேசித்தல்.)

**கமலாஸனன் :**—ஜயபாலா! ஜயபாலா!! எங்கே ஜயபாலனைக் காணோம்? அந்தச்செவிடன் ஏன் இன்னும் வரவில்லை? ஜயபாலா! ஜயபாலா!!

**ஜயபாலன் :**— (ஓடி வந்து கொண்டே) இதோ வந்து விட்டேன், இதோ வந்து விட்டேன். நான் வருவதற்குள் எதற்காக ஜயபாலா, ஜயபாலாவென்று நாழிகைக்கு நூறுதரம் கத்துகிறாய்? என்ன அவ்வளவு அவசரம்? உன்னுடைய காரியமென்றால் உனக்கெப்பொழுதும் அவசரம் தான்.

**கமலாஸனன்:**—என்ன அவசரமா? நான் தயார்செய்ய வேண்டியவெல்லாம் செய்துவிட்டேன். இனிமேல் நீ செய்யவேண்டியதுதான் பாக்கியிருக்கிறது. சரியான சமயத்தில் தான் உனக்கு வேறு ஏதாவது வேலையிருக்கும். நீ சற்றுமுன்பே வரக்கூடாதோ?

**ஜயபாலன் :**—நீ எப்பொழுதும் என்னைத்தான் குற்றஞ்சொல்வது வழக்கம். நீ மற்றவர்களையெல்லாம் அனுப்பி விட்டாயோ? உன் ஆட்கள் தந்திரமாகவும் சாமர்த்தியமாகவும் காரியத்தைமுடித்துவிட அவர்களுக்குவேண்டிய போதனைகளையெல்லாம் உபதேசித்திருக்கிறாயோ?

**கமலாஸனன்** :—அவையெல்லாம் உனக்கென்னகவலை? நான் ஒரு காரியத்தை யுத்தேசித்து அதற்காக என் ஆட்களையனுப்பினல் அக்காரியமும் கைகூடாமற்செய்து என்னையும் காட்டிக்கொடுக்கும்படியான அத்தகையமூடர்களையா நான் கட்டிக்கொண்டழுகிறேன்? அதைப்பற்றி நீ கவலைப்படவேண்டாம். நீ செய்யவேண்டியதைச் சாமர்த்தியமாய்ச்செய்து முடித்தாயானல் அதுவேபோதுமானது.

**ஜயபாலன்** :—சரி, இப்பொழுது நான் யாதுசெய்யவேண்டும்? சொல், கேட்போம்.

**கமலாஸனன்** :—என்ன செய்வதா? பேஷ்! அழகாயிருக்கிறது. இராமாயணம் முழுதும் கேட்டுவிட்டுக்கடைசியில் இராமர் சீதைக்கு எந்தவிதத்திற் சொந்தமென்று கேட்கிறாயே! என்ன ஜயபாலா, நீயும் நானுமாயிருந்து எல்லாம் கலந்துபேசி சூழ்ச்சி செய்திருக்க, இப்பொழுது யாது செய்யவேண்டுமா? பேஷ்!

**ஜயபாலன்** :—அதற்காகக்கேட்கவில்லை. நீ உன் ஆட்களிடம் என்ன சொல்லியனுப்பினாய்? அவ்வாறே என்னிடமும் சொன்னால் நானும் உனதிஷ்டப்படியே செய்யலாமன்றோ?

**கமலாஸனன்** :—ஜயபாலா, நீ என்ன என் வேலைக்காரனா? என்னைவிட சாமர்த்தியசாலியான உனக்கு இவையெல்லாம் நான் சொல்லியா தெரியவேண்டும்? உனக்குத்தெரியாததொன்றுண்டா?

**ஜயபாலன்** :—இல்லையில்லை. காரியமோ உன் காரியம். நாங்களெல்லோரும் உழைப்பது எதற்காக? ஏதோ உன் காரியம் கைகூட வேண்டுமென்று தானே? ஆகையால், நீ சொல்லுமாறு செய்தால்தான் ஓர் கால் அக்காரியம் கைகூடாவிட்டாலும் எங்கள் மேல் குற்றஞ்சாற்றமாட்டாய். அங்ஙனமின்றி, நான் என் வழிப்படியே காரியங்களைச்செய்தால்

என்றால் தான் அது கெட்டுப்போய் விட்டதென்று சொல்வாயல்லவா? அதனால் தான் கேட்டேன்.

**கமலாஸனன் :**—நீ பேசுவதைப்பார்த்தால் ஏதோ நான் எடுத்துக் கொண்டிருக்குங்காரியம் நமக்குச்சாதகமாக முடியாமல் ஒருவேளை பாதகமாய் முடியவுங் கூடும்போலிருக்கிறதே! என்ன ஜயபாலா, இதற்காகவா இவ்வளவு பிரயத்தனம்? இதற்காகவா இவ்வளவு கவலை! இதற்காகவா இவ்வளவு பணச்செலவு! இதற்காகவா இவ்வளவு சிரமம்? என்ன ஜயபாலா.

**ஜயபாலன் :**—அதிருக்கட்டும், நீ ஏதோ பணச்செலவைப்பற்றிப் பேசினாயே! இதுவரையில் நீ எனக்கு என்ன ஆயிரமாயிரமாகக்கொட்டியளந்து விட்டது? ஏதப்பா, இன்னும் நடக்க வேண்டியதெவ்வளவிருக்கின்றது! இப்பொழுதே நீ பணச்செலவைபுத்தேசித்தால் பின்னால் எனக்கென்ன செய்யப் போகிறாய்? நீ எழுதியனுப்பிய கடிதத்தில் வாத்ஸல்யனுடைய கையெழுத்தைப்போட்டனுப்பியபொழுது எனக்கு ஏதோ சொற்பதிரவியம் கொடுத்தாய். அவ்வளவுதானே எனக்காக நீ செலவழித்தது? இப்பொழுதே——

**கமலாஸனன் :**—என்ன ஜயபாலா, பணச்செலவென்றால் உனக்குக்கொடுக்கும் விஷயத்திலாசொன்னேன்? இல்லையில்லை. உனக்கு எத்தனை கோடிபொன் வேண்டுமென்றாலுங் கொடுக்கத்தயாராயிருக்கிறேன். ஆனால் இவ்வளவெல்லாம் செய்தானபிறகு காரியம் சாதகமாவதைப்பற்றி நீ சந்தேகித்தால் அது என் மனதைப்புண்ணாக்குமன்றோ? அதற்காகச்சொன்னேன். உனக்கு இப்பொழுதே வேண்டுமென்றாலும் ஓர்பை பொன் கொடுக்கின்றேன். இதோ எடுத்துக்கொள் (ஓர்பையைக்கொடுத்தல்) இது மாத்திரமல்ல என் எண்ணம் நிறைவேறிவிட்டால் உன்னை இந்த இராஜ்ஜியத்திலுள்ளவர்களெல்லோரும் கண்டுபொறாமைப்படும்படி அத்தகைய உந்நதப்பதவியில் வைப்பேனென்பதை மறந்துவிடாதே!

**ஜயபாலன் :**—(பணப்பையை எடுத்துக்கொண்டு) நீ பேசுவதைப் பார்த்தால் ஏதோ பணத்தைபுன்னிடமிருந்து அபகரித்துக்

கொள்வதற்காக நான் இவ்வாறு பேசினதாக நீ நினைத்துக் கொண்டிருக்கின்றாய் போலிருக்கின்றது! அப்படி யொன்று மில்லை, இந்தப்பணப்பையையும் நான் வேண்டாமென்று திருப்பிக்கொடுத்து விடுவேன். ஆனால், “தானாய் வந்த சிதேவியைக்காலாலுதைத்துத்தள்ளக்கூடா” தாகையால், இதை நான் வைத்துக்கொள்ளுகிறேன். ஆனால் நான் பேசியதெதற்காகவெனில். நாமொருகாரியத்திற் பிரவேசிக்கிறதற்கு முன் சாதகம் பாதகம் இரண்டையும் யோசித்துத்தான் செய்யவேண்டுமாகையாலும், சாமர்த்தியமாய் வேலையை முடித்துவிட உன் ஆட்களுக்கு நீ தகுந்த உபாயம் சொல்லியிருந்தால் அது சாதகமாய் முடியவும், இல்லாவிட்டால் பாதகமாய் முடியவுங்கூடுமாதலாலும், நீ அவர்களிடம் சொல்லியவாறே என்னிடமும் சொன்னால் காரியம் சாதகமாகுமா, பாதகமாகுமாவென்பதை யூகிக்கலாமென்றேகேட்டேன். அதற்கு நீ பிரமாதமாகக் கோபித்துக்கொள்ளுகிறாய். சரி அவையெல்லாமிருக்கட்டும். உன் ஆட்கள் கிளப்பிவிட்டிருக்கும் வதந்திகளை யெல்லோரும் நம்புமாறு செய்யவேண்டியது தானே என் வேலை?

**கமலாஸனன்:**—ஜயபாலா, நீ எவ்வளவு சமர்த்தன்! நீ அவ்வாறு பேசியதின் நோக்கம் இப்பொழுதன்றோ எனக்கு விளங்குகின்றது. நீ செய்யவேண்டியது உன் ஒருவனால் தான் செய்ய முடியும். வதந்திகளைப்பொது ஜனங்கள் நம்புமாறு என் மற்ற ஆட்கள் செய்து விடுவார்களாதலால், பிரதான நகரத்தோரும், உயர்குலத்தோரும் மற்றப்பிரபுக்களும் வதந்திகளை நம்புமாறு செய்யவேண்டியதுதான் உன் வேலை. ஆகையால் அதைச்சீக்கிரம் செய்தாயானால் எனக்கு மெத்த உபகாரமாயிருக்கும்.

**ஜயபாலன்:**—இதென்ன பிரமாதம்! எனக்கு இது ஒரு கஷ்டமா? இதோ அரை நிமிஷத்தில் என் வேலையை முடித்து விடுகிறேன். ஆனால்—

**கமலாஸனன்:**—என்ன ஆனாலென்று இழுக்கின்றாய்?

**ஜயபாலன் :**—ஒன்றுமில்லை. உன்னுட்களை இக்காரியத்திற்காக எப்பொழுதனுப்பினுய் ?

**கமலாஸனன் :**—நேற்றுக்காலையிலேயே அனுப்பி விட்டேன். அவர்களும் நேற்றைய தினமே வதந்திகளைக் கிளப்பிவிட்டார்கள்.

**ஜயபாலன் :**—அப்படியெனிற் சரி நானும் இவ்வதந்திகளைக் கேட்டு அவைகளில் முழுநம்பிக்கைகொண்டவன்போல் நடிக்கின்றேன். அப்பொழுது தான் நான் தாராளமாய்ப்பேச முடியும். நானும் அகப்பட்டுக்கொள்ள இடமிருக்காது

**கமலாஸனன் :**—அதெல்லாம் உன்சாமர்த்தியம். ஆனல் காரியத்தில் மாத்திரம் கண்ணுயிரு. இவ்விஷயத்தில் என்ன செலவழிந்தாலும் என்னிடம் தாராளமாய்ச்சொல் நான் வேண்டியதிரவியமளிக்கிறேன்.

**ஜயபாலன் :**—சரி—சரி—அதற்கென்ன பார்த்துக்கொள்வோம்! நான் சென்று வரட்டுமா?

**கமலாஸனன் :**—சரி, சென்றுவா. காரியத்தில் மாத்திரம் கண்ணுயிரு. நானும் சென்றுவருகிறேன்.

(**கமலாஸனன் சென்றுவிடல்.**)

**ஜயபாலன் :**—ஆ! நான் இன்று நரிமுகத்தில் விழித்தேன்போலும். இப்பையில் ஆயிரம் வராகனிருக்கும் போலிருக்கிறதே! இந்த மூடமந்திரியைச்சிநேகம் செய்ததும் என் அதிர்ஷ்டந்தான். இவனுடைய உதவியால்தான் நான் கோடீஸ்வரனுக வேண்டும் இப்பொழுதே இப்பையைக்கொடுத்தவன் தன் காரியம் சாதகமாய் முடிந்த பிறகு எவ்வளவு பணம் கொடுப்பான்! இந்தக்காரியம் எனக்கென்னபிரமாதமா?—ஆ, அதோ விசித்திரவீரியன் வருகிறுன். முதலில் அவனைத்தான் பிடிக்கவேண்டும். (**உரக்க**) விசித்திரவீரியரே, அனேக வந்தனம்.

(**விசித்திரவீரியன் பிரவேசித்தல்**)

**விசித்திரவீரியன் :**—ஜயபாலரே, வாரும் நல்லவேளையாய் "கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்த" தைப்போல் தாங்

களே வந்து விட்டீர்கள். நகரத்தில் ஜனங்களெல்லோரும் தெருக்களிலெல்லாம் கூடிக்கூடிப் பேசிக்கொண்டிருக்கிறார்களே! ஊரெல்லாம் ஏக அமளியாயிருக்கிறதே! யாது விசேஷம்?

**ஜயபாலன்** :—எல்லாம் இப்பொழுது உண்டாகப்போகிற யுத்தத்தைப்பற்றித்தான் பலர் பலவிதமாகப்பேசிக்கொண்டிருக்கிறார்கள். தங்கள் அபிப்பிராயமென்ன? இந்த யுத்தத்தில் நம் சேனை வெற்றியடையுமா?

**விசித்திரவீரியன்** :—யுத்தமாவது! வெற்றியாவது! என்ன தாங்கள் சொல்வது ஒன்றும் விளங்கவில்லையே! யுத்தமா? யாருக்கும் யாருக்கும் யுத்தம்?

**ஜயபாலன்** :—ஏது தாங்கள் ஆறு மாதகாலமாய் உறங்கிக்கொண்டிருந்து சற்று முன்பே விழித்துக்கொண்டு வந்தவரைப் போல் பேசுகிறீர்களே! விஷயங்களொன்றையுமே அறியீர்களோ?

**விசித்திரவீரியன்** :—நண்பரே, நான் கொஞ்சகாலமாக அயலூர்களிற் பிரயாணஞ்செய்துகொண்டிருந்தேன். நேற்றுச்சாயங்காலந்தான் இந்நகர் வந்தடைந்தேன். வரும்பொழுதே ஜனங்களெல்லோரும் கூடிக்கூடிப்பேசுவதைக்கவனித்தேன். ஆனால் அப்பொழுதே அதன் காரணத்தை விசாரிக்கவில்லை. காலையிலும் ஊரில் ஏகக்குழப்பமாயிருந்தபடியால் என்ன விசேஷமென்பதை விசாரிக்கலாமென்று வெளிக்கிளம்பினேன் நல்ல வேளையாய்த்தங்களைச் சந்தித்தேன் தங்களுக்குத்தெரியாமல் இந்நகரில் ஒருகாரியம் நடப்பதுண்டா? என்ன விசேஷம்?

**ஜயபாலன்** :—அப்படியா? பேஷ். இதைப்பற்றி விசாரிக்கச் சரியான ஆசாமியைப்பிடித்தீர். சொல்லுகிறேன் கேளும்.

(நொண்டிச்சிந்து)

**1.** நண்பரே நீர் கேளும்—இப்போழ்
தண்மையிலொருபோர் விளையுமையே;

2 மன்னனும் ருத்ரசிம்ஹன்—தீயோன்
இந்நகர் நோக்கிப்படையெடுத்து;

3. வீரியமுள்ள எங்கள்—வேந்தைப்
போரினில் வீழ்த்திடமனந்துணிந்தான் (நண்பரே.)

உஜ்ஜைனிமன்னனுன ருத்ரசிம்ஹன் இந்நகர் நோக்கிப்படையெடுத்து வரப்போகிறனும். அப்படி அவன் படையெடுத்துவரின் ஜயலக்ஷ்மி யார் மாட்டணுகுவளோ என்னவோ?

**விசித்திரவீரியன் :**—ருத்ரசிம்ஹன் திடீரென்று படையெடுத்து வரக்காரணம் யாது?

**ஜயபாலன் :**—இதையொருவன் யூகித்துக் கொள்ளக்கூடாதா? சிலவருடங்களுக்குமுன் நமதரசருக்கும் ருத்ரசிம்ஹனுக்கும் நடந்த போரில் ருத்ரசிம்ஹன் தோல்வியடைந்தானல்லவா? அப்பொழுது அவன் எப்படியாவது பழிக்குப்பழிவாங்குவதாகச்சபதம் செய்திருந்தான். அது முதல் இந்நோக்கத்துடன் ஒருவருக்குந் தெரியாமல் சேனையைத் திரட்டிக் கொண்டிருந்தான். இப்பொழுது தன் சேனை மிகுந்த வலிமையுடைத்தாயிருப்பதால் ஏதோ ஓர் எல்லைச்சச்சரவையே யுத்தத்திற்குக்காரணமாகக்கொண்டு இந்நகர் நோக்கிப்படையெடுத்துவர உத்தேசித்திருப்பதாகத் தெரியவருகிறது

**விசித்திரவீரியன் :**—நம்சேனையைப் புறங்கொடுத்தோடச்செய்ய அந்தச்சாக்கியன் அவ்வளவு பராக்கிரமசாலியா என்ன?

**ஜயபாலன் :**—அதென்னவோ, நானறிகிலேன். ஆனல், சிம்ஹமெனும் பெயர் அவனுக்கே பொருந்துமெனப்பலர் சொல்லுகிறர்கள் ரதகஜதுரகபதாதிகள் அணியணியாய் வகுக்கப்பட்டுள்ள அவன் சேனை போர்த்திறத்தில் மிகவும் சிறந்ததாம் மேலும், ருத்ரசிம்ஹனே படைக்கலப்பயிற்சிகளிற் சிறந்ததீரனும்.

**விசித்திரவீரியன் :**—எனினும், *சந்திரகுப்த மன்னர் அவனுக்கிளைத்தவரா? நமது நகர் அரண்வலியையும் தண்டின்வலியை

---

* Vide notes

புமுடைத்தாயிருக்கின்றது. நமது சேனையிலுள்ள ரதசாரதிகளெல்லோரும் அதிரதர்களாயுள்ளனர். நமது அரசரோ படைக்கலப்பயிற்சிகளில் இணையற்றவர். அப்படியிருக்க, நாம் ஏன் அகாரணமாய் அச்சப்படவேண்டும் ?

ஜயபாலன் :—எப்படியிருப்பினும் போரென்றால் அடிவயிறு கலங்குகின்றதே! மேலும் அனேக அரசர்கள் ருத்ரசிம்ஹனுதவிககாகத் தத்தம சேனுவீரர்களை யனுப்பவுங் கூடும். அங்ஙனம் நேரிடின், ருத்ரசிம்ஹனுடைய சேனை நம் சேனையைவிட அதிக வலிமையுடைத்தாகுமல்லவா ?

விசித்திரவீரியன் :—அந்நியர்களான இந்தச்சாக்கியர்களைப் பொது ஜனங்களும் மற்ற அரசர்களும் வெறுக்கிறார்கள். *சாக்கியர்கள் நடையுடைபாவனை எல்லாவற்றிலும் நாகரீகமற்றவர்களாக இருப்பதால், இத்தேசத்து அரசர்களிலொருவரேனும் அவர்களுக் குதவிபுரியார்களென்பது திண்ணம். மேலும், நமதரசருக் குதவிபுரியவும் எத்தனையோ அரசர்கள் தயாராயிருக்கிறார்கள். நமது அரசருடைய கீர்த்தியும் புகழும் சாமானியமானதா?

ஜயபாலன் :—நமதுசேனை வெற்றிபெற்று நமதுநாடு நிலைகுலையாமலிருக்கவேண்டுமென்பதுதான் என்னுடைய கோரிக்கையும். எனினும், சத்துருவின் வலிமையை முற்றுமுணர்ந்தால் தானே நாமும் அதற்குத்தக்கவாறு ஆயத்தம் செய்யலாம் ?

விசித்திரவீரியன் :—எக்கணத்திற்போர்விளையினும் நாம் யுத்தசன்னத்தராயிருக்க வேண்டுமென்பது மெத்தஅவசியமே. ஆனால் அது இருக்கட்டும். ருத்ரசிம்ஹன் படையெடுத்து வரப் போகிறுனெனும் செய்தி நகரத்தார்களுக்கு எவ்வாறு தெரிந்தது ?

ஜயபாலன் :—எல்லாம் வதந்திதான்.

விசித்திரவீரியன் :—வதந்திதானு ? ஓர்கால் இவ்வதந்தியே பொய்யாயிருக்கக்கூடாதோ ?

---

* Vide notes

ஜயபாலன் :—வதந்தி பொய்யாயிருக்குமா? இல்லையில்லை, காரண மின்றி ஓர் வதந்தி கிளம்புமா? அதிலும் இப்படிப்பட்ட விஷயத்தைப்பற்றியா? வதந்தி மெய்யென்றே நம்புகிறேன். நான் மாத்திரமா? ஜனங்களெல்லோரும் நம்பிவிட்டார்களே! அதிருக்கட்டும், மற்றோர் வதந்தியைக்கேட்டீர்களா?

விசித்திரவீரியன் :—அதென்ன?

(நொண்டிச்சிந்து.)

ஜயபாலன் :—

1. பின்னுமொரு சேதிகேளீர்—இராஜ
கன்னிகையென நாமெண்ணியிருந்த
2. ராணியார் துருவதேவி—இந்த
ராணியின் நல்லெழில் தாங்கிடினும்
3. விந்தைநானென்சொல்லுவேன்—அவள்
அந்தமிலாக்கீழ்க்குடிப்பெண்ணாம். (பின்னுமொரு.)

நமது இராணி ஓர் இராஜகன்னிகையென்றல்லவோ நாமெண்ணியிருந்தோம்! ஆனால் *துருவதேவி உண்மையில் ஓர் இராஜகுமாரிஅல்லள்! வாத்ஸல்யருடைய நேசனொருவனுடைய புதல்வியாம்! அன்னையையுந் தந்தையையுமிழந்த அநாதையாம்! மச்சதேசத்தரசனுடைய இராஜக்கிரஹத்தில் ஓர் பணிப்பெண்ணாயிருந்தவளாம்! இப்படிப்பட்டவளையே நாடிழந்து எங்கேயோ ஒளிந்து வசிக்கும் அரசனொருவனுடைய புதல்வியென்று வாத்ஸல்யர் பொய்யாக அரசரிடம்சொல்லி அரசருடைய மணத்தை முடித்திருக்கின்றார்! அரசரும் துருவதேவியின் அழகைக்கண்டு மயங்கி அவளை மணந்திருக்கின்றார். இங்ஙனம், நமது இராணி தாழ்ந்த குலத்திற்பிறந்த ஓரேழைப்பெண்ணென்பது மற்றோர் வதந்தியால் வெளியாகிறது.

விசித்திரவீரியன் :—சீ, சீ, இவையெல்லாம் சுத்தப்புரட்டு இதில் எனக்கு எள்ளளவேனும் நம்பிக்கையில்லை.

---

* Vide notes.

**ஜயபாலன்** :—நீங்களும் நானும் நம்பினுலென்ன, நம்பாவிட்டா லென்ன ? ஜனங்களெல்லோரும் வதந்தியை நம்பிவிட்டனர். இச்சங்கதி அரசர் காதிற்கெட்டினல் அவரும் நம்புவாரென் றே நினைக்கிறேன். அப்படி நம்பிவிட்டால், பாவம்—வாத் ஸல்யரையும் மஹாராணியாரையும் என்னபாடுபடுத்துவரோ!

**விசித்திரவீரியன்** :—ருத்ரசிம்ஹன் படையெடுத்து வரப்போகிறு னெனும் வதந்தி ஓர்கால் உண்மையாயிருந்தாலுமிருக்கலாம். ஆனல் மாஹாராணியைப்பற்றிய வதந்தி சற்றேனும் நம்பக் கூடியதாயில்லை.—இருக்கட்டும். எல்லாம் காலக்கிரமத்தில் தெரிகிறது. இப்பொழுது நாழிகையாய் விட்டது. காலைக் கதிரவனும் தன் கிரணங்களைக்கொடுமையாக வீசுகின்ருன். எனக்கும் கொஞ்சம் அவசரமான வேலையிருக்கின்றது. நான் சென்றுவருகின்றேன். நாளைக்காலையில் என்மாளிகைக் குத் தாங்கள் வரமுடியுமா? சாவகாசமாகப்பேசுவோம்.

**ஜயபாலன்** :—சரி, அப்படியே வருகிறேன். இப்பொழுது எனக்கும் வேறு வேலையிருக்கிறது. நானும் விடைபெற்றுக் கொள்ளுகிறேன்.

**விசித்திரவீரியன்** :—ஆகா, நாம் பிரிவோம்.

(இருவரும் பிரிதல்)

(காட்சி முடிகிறது).

---

## அங்கம் 1

### களம் 2. புஷ்பபுரம். அரண்மனைத்தோட்டம்.
### காலம்...காலை.

**புருஷோத்தமன்** :—(தனக்குள்) வாஸந்திகை ஏன் இன்னும் வர வில்லை ? ஒரு வேளை அவள் நான் வருவதற்கு முன்னமேயே இங்கு வந்திருந்து நானில்லாமையைப்பற்றி மனம் வருந்திச்

சென்றிருக்கலாமோ? அல்லது அவள் இங்குவரமுடியாமல் ஏதாவது சங்கடம் நேரிட்டிருக்கலாமோ? ஒன்றுந்தெரியவில்லையே. சென்றதடவை நான் அவளைச் சந்தித்தபொழுது தனக்கு உடம்பு கொஞ்சம் அசௌக்கியமாயிருந்ததாகச் சொன்னாள். இப்பொழுது தன் தேக அசௌக்கியத்தை யுத்தேசித்து இங்கு வராமலிருக்கலாமோ? வாஸந்திகைக்கு உடம்பு அசௌக்கியமாயிருந்தால் அரசர் அதை என் தகப்பனாரிடம் சொல்லியிருப்பார். என் தகப்பனாரும் அதை என்னிடம் சொல்லியிருப்பாரே—ஆ! அதோ யாரோ வரும் காலடிச்சத்தம் கேட்கிறது. வாஸந்திகை தான் வருகிறாளென்று நம்புகிறேன். ஆனால் வேறு யாராவதிருந்தால் நானிங்கிருப்பதைப்பற்றிச் சந்தேகிக்கக்கூடுமாகையால், ஓர் மரத்தின் பின் மறைந்து நிற்றலே நலம்.

(ஓர் மரத்தின் பின்னேளிந்துகொள்ளல்)

வாஸந்திகையும் சுலக்ஷணாவும் பிரவேசித்தல்.

சுலக்ஷணா:—வாஸந்திகா, இன்று தோட்டம் எவ்வளவு அழகாயிருக்கிறது பார்த்தாயா? இதைப்பார்த்து மகிழாமல் உன் தகப்பனார் சொன்னதையே நினைத்து நினைத்து வருந்துகிறாயே. நீ ஏற்கனவே புருஷோத்தமரிடம் காதல்கொண்டிருக்கிறாயென்பது அரசருக்குத் தெரியாததினால் உன்னிடம் அப்படிப் பேசினார். உண்மையையறிந்தால் நீ அந்த இளவரசரையே கலியாணஞ்செய்துகொள்ளவேண்டுமென்று உன்னைக் கட்டாயப்படுத்துவாரா?

வாஸந்திகை:—இல்லையடி சுலக்ஷணா, என் தந்தை இன்றைய தினம் பேசியதை நீ கேட்கவில்லை. அவர் பேசிய விதத்தைப் பார்த்தால் நான் இஷ்டப்பட்டாலும் இஷ்டப்படாவிட்டாலும் என்னை அந்த இளவரசனுக்கே மணஞ்செய்துவைத்துவிட உத்தேசங்கொண்டிருக்கிறார்போலத் தோன்றியது அதுதானடி எனக்குப்பயமாயிருக்கிறது.

**சுலக்ஷணை** :—நான் அப்படி நினைக்கவில்லையம்மா. உன் இஷ்டத்திற்கு மாறாகக் கலியாணஞ் செய்துகொள்ளவேண்டுமென்று அரசர் ஒருக்காலும் உன்னைக் கட்டாயப்படுத்த மாட்டார்.

**வாஸந்திகை** :—இல்லையடி, எனக்கு இந்தவரன் தேடிவந்திருப்பது யாரென்பது யோசித்துப்பார். வாத்ஸல்யரல்லவா? வாத்ஸல்யரும் என் தந்தையும் அத்யந்த நண்பர்கள். வாத்ஸல்யர் சொல்லியதை அரசர் இதுவரையில் தட்டியதில்லை. என் கலியாண விஷயத்தில் மாத்திரம் அவர் சொல்வதைத்தட்டுவாரா?

**சுலக்ஷணை** :—வாஸந்திகா, என்னபேசிக்கொண்டே எங்கேயோ போகிறாய்! இதோ பளிங்குமேடை வந்துவிட்டதே, இன்னும் எங்கே போகிறாய்?

**வாஸந்திகை**: —அடி. பேசிக்கொண்டே வந்ததினால் நானிதைக்கூட கவனிக்கவில்லை பார்த்தாயா! இதோ பளிங்குமேடை வந்துவிட்டதே. ஆனால் என்னருமைக்காதலர் ஏன் இன்னும் வரவில்லை?

**புருஷோத்தமன்** :— (மரத்தின் பின்னிருந்துவந்து) வாஸந்திகா, என் கண்மணி, நீ வருவதற்குச் சற்று தாமதமானதற்காக உன்னைப் பாராமல் சென்றுவிடுவது எனக்கு அசாத்தியமான காரியம். எவ்வளவு நாழிகையானபோதிலும் நீ கட்டாயம் வருவாயென்று நம்பியிருந்தது வீண்போகவில்லை. ஆனால் நீங்களிருவரும் பேசிக்கொண்டிருந்த சிற்சில வார்த்தைகள் காதில் விழுந்தும் ஒன்றும் விளங்கவில்லையே! என்ன விசேஷம்?

**வாஸந்திகை** :—விசேஷமில்லாவிட்டால் நானிங்குவர இவ்வளவு காலதாமதமாகுமா? இன்று ஓர் விசேஷம் நடந்தது. அது நம்மிருவரையும் பாதிக்கும் போலிருக்கிறது.

**புருஷோத்தமன் :**—நம்மிருவரையும் பாதிக்குமா? எனக்கு நீ சொல்வது விளங்கவில்லையே! என்ன விசேஷம்? சீக்கிரம் சொல்.

**வாஸந்திகை :**—சற்றுமுன் தங்களைச்சந்திப்பதற்காக இத்தோட்டத்திற்குப்புறப்படும் சமயத்தில் என் தகப்பனர் என்னை அழைத்து வரச்சொன்னதாக சுலக்ஷணை வந்து சொன்னுள். உடனே நான் என்தகப்பனர் அறைக்குச்சென்றேன். அங்கே தங்களுடைய பிதாவுமிருந்தார். அப்பொழுது என் பிதா சொல்லிய விஷயத்தைத்தங்களிடம் சொல்லவும் நாவெழவில்லையே, என்னசெய்வேன்!

**புருஷோத்தமன் :**—நீ பேசுவது எனக்கு அச்சத்தைத்தருகிறது. ஒருக்கால் நாமிருவரும் சிநேகமாயிருக்கும் விஷயம் அரசருக்கும் என் தகப்பனருக்கும் தெரிந்து விட்டதோ?

**வாஸந்திகை :**—இல்லையில்லை, அவ்விஷயம் தெரிந்திருந்தால் இப்பொழுது எவ்வாறு தங்களைச் சந்திக்க முடியும்? அதில்லை—

**புருஷோத்தமன் :**—ஏன் தயங்குகிருய்? சீக்கிரம் சொல்.

**சுலக்ஷணை :**—நான் சொல்லுகிறேன். அவர்கள் பேசியது வாஸந்திகையின் கலியாணத்தைப்பற்றி!

**புருஷோத்தமன் :**—வாஸந்திகையின் கலியாணத்தைப் பற்றியா! வாஸந்திகா! அவர்கள் என்ன சொன்னுர்கள்?

**வாஸந்திகை :**—தங்கள் தகப்பனர் என் மணவிஷயத்தைப்பற்றி அரசரிடம் ஏதோ சொல்லியிருக்கிருர்போலிருக்கிறது. என் பிதா என்னைக்கண்டதும் என்னையுட்காரச்சொல்லிவிட்டு வாத்ஸல்யரைப்பார்த்தார். தங்கள் பிதா என்னையோர்முறை பார்த்துவிட்டு என் பிதாவைப்பார்த்தார். பிறகு என் பிதா—

**சுலக்ஷணை :**—என்னமோ பிதற்றுகிருயே! விஷயத்தைச்சொல்லாமல் இவையெல்லாம் எதற்காகச்சொல்லுகிருய்?

**வாஸந்திகை** :—நீ தான் சொல்லடி. எனக்கொன்றும் தோன்ற வில்லை.

**சுலக்ஷணை** :—(புருஷோத்தமனைப்பார்த்து) ஐயா, அவர்கள் வாஸந்திகையிடம் சொல்லியது இதுதான். தங்கள் தகப்பனார் யாரோஒரு இராஜகுமாரனை வாஸந்திகைக்கு மணவாளனைத் தேடி வந்திருக்கின்றாராம். அந்த இராஜகுமாரனுக்கே வாஸந்திகையைப்பாணிக்கிரகணம் செய்து கொடுக்க அரசருக்குச் சம்மதந்தான். வாஸந்திகைக்கும் யாதொரு ஆக்ஷேபனையுமில்லாவிட்டால் மணத்தையும் வெகு சீக்கிரத்தில் முடித்துவிடலாமென்பதே.

**புருஷோத்தமன்**:—(ஆவலுடன்) அதற்கு வாஸந்திகை என்னபதிற் சொன்னாள்?

**சுலக்ஷணை**:—அவளென்ன பதிற்சொல்வது? சற்றுநேரம் மௌனமாயிருந்தாளாம். ஆனால், அவர்கள் மேலும் மேலும் கேட்டதால் ஏதோ அவ்விஷயத்தைத் திடீரெனக் கேட்டுத் திகைத்தவள்போல் நடித்து கொஞ்சம் யோசித்துத்தான் பதிற்சொல்லவேண்டுமென்றும், யோசிப்பதற்காகத் தனக்குக் கொஞ்சம் அவகாசம் கொடுக்கவேண்டுமென்றும் வேண்டினளாம். அதோடு அப்பேச்சு முடிந்துவிட்டபடியால் தன் அந்தப்புரத்துக்குவந்து நடந்தவற்றை என்னிடம் சொன்னாள். எங்களுக்கு ஒன்றும் தோன்றவில்லை. ஒருக்கால் தங்களைச் சந்திக்கலாம் எனும் நம்பிக்கையுடன் இத்தோட்டத்துக்கு வந்தோம்.

**புருஷோத்தமன்** :— (வாஸந்திகையைப்பார்த்து) ஆ! வாஸந்திகா! அப்படியெனில் நாம் பிரியவேண்டியதுதானோ? என் எண்ணங்களெல்லாம் பாழாய்விடுமோ? சீக்கிரம் சொல். நீ என்னைவிட்டு வேறொருவனை மணக்கச் சம்மதிப்பாயோ? வாஸந்திகா, இவ்வளவு வருடங்களாய்—

**வாஸந்திகை** :—நாதா, என்னைத் தாங்கள் இப்படியும் சந்தேகிக்கலாமோ? என்னைக் கொடியவளென்று எண்ணிவிட்டீர்கள்?

ஒருக்காலுமில்லை. என்னுயிரே போனாலும் நான் தங்களை யன்றி வேறொரு புருஷனைக் கனவிலும் நினையேன். தங்கள் உருவமே எப்பொழுதும் என் கண்களின் முன் நிற்கிறது. தங்கள் வடிவமே என் இருதயத்தில் எப்பொழுதும் குடியிருக்கிறது. என் மனமும் எப்பொழுதும் தங்கள் நாமத்தையே நாடுகிறது. ஆகையால்—.

**புருஷோத்தமன் :**—என் செல்வமே! நீ சொல்லும் வார்த்தைகள் என் மனதைக் கவர்கின்றன. உன்னையின்றி உயிர்வாழ்தல் நரகவாழ்க்கையையொக்கும். உன்னைவிட்டுப் பிரிந்து வாழ்தலே எனக்கு அசாத்தியம். நான் உயிர் துறந்தாலும் துறப்பேனேயன்றி உன்னைவிட்டு ஓர் கணமும் பிரிந்திருக்கமாட்டேன்.

**சுலக்ஷணை :**—என்ன வாஸந்திகா, அந்தப்புரத்திலிருக்கும்பொழுது ஓர் நாழிகை ஓர் யுகத்தைப்போல் தோன்றுகின்றதென்கிறாய். இங்கு ஓர் யுகம் ஓர் நாழிகையாகத் தோன்றுகிறதோ? இங்கு வந்து எவ்வளவு நாழிகையாய்விட்டது! இனி நாமிங்கிருத்தல் கூடாதம்மா. உன்னைத் தேடிக்கொண்டு யாராவதிங்குவந்தால் என்னசெய்வது?

**வாஸந்திகை :**—இனி நானிங்கிருத்தல் பிழை. வாடி செல்லலாம்.

**புருஷோத்தமன் :**—மறுபடியும் எப்பொழுது சந்திப்பது? நாளைக்கும் இங்கேயே சந்திப்போமா?

**வாஸந்திகை :**—சரி, சரி, வாடி சுலக்ஷணை. அதோ அங்கிருக்கும் ரோஜா புஷ்பங்களிற் சிலவற்றைப் பறித்து முடியிற் சூட்டிக் கொண்டு நம் அந்தப்புரத்திற்குப்போவோம்.

**சுலக்ஷணை :**—ஆகா, அப்படியே செய்வோம்.

(எல்லோரும் செல்லல்)

**காட்சி முடிகிறது.**

---

## அங்கம் 1
## களம் 3. புஷ்பபுரம் கமலாஸனனுடைய மாளிகையிலோர் அறை
### காலம்—காலை.

**கமலாஸனன்**—சேவகா,

**சேவகன்** :—மகாராஜ்.

**கமலாஸனன்** :—நீ உடனே தெற்குராஜவீதி 124-நெ. வீட்டிற்குச்சென்று கருணாகரர் என்பவர் உதயகிரியிலிருந்து வந்துவிட்டாராவென்பதை விசாரித்துக்கொண்டுவா. வந்திருந்தால் உடனே அவரை இங்கழைத்துக்கொண்டுவா.

(சேவகன் செல்லல்)

**ஜயபாலன் பிரவேசித்தல்.**

**கமலாஸனன்**:—என்ன ஜயபாலா, வா இந்தநாற்காலியில் உட்கார். நானனுப்பிய கடிதத்தில் விசுவசேனனுடைய கையெழுத்தைப்போட்டு ஏன் இன்னும் அனுப்பவில்லை?

**ஜயபாலன்** :—இதோ நானே கொண்டுவந்திருக்கின்றேன். இதில் விசுவசேனனுடைய கையெழுத்து சரியாயிருக்கிறதா பார்,

(கடிதத்தைக் கொடுத்தல்)

**கமலாஸனன்** :—பலே ஜயபாலா! எவ்வளவு சரியாகப் போட்டிருக்கிறாய். பிறருடைய கையெழுத்தைப் போடுவதில் நீ வெகு சமர்த்தன். அதற்காகத்தானே இதை யுன்னிடமனுப்பினேன்.

**ஜயபாலன்** :—யாரோ உன் சிநேகிதன் சரணாதரன் உதயகிரியிலிருந்து வரப்போகிறானென்றாயே. அவன் வந்து விட்டானோ?

**கமலாஸனன்** :—ஹா! ஹா! ஹா! அவன் பெய்ரென்ன? சரணாதரனா? அவன் பெயர் சரணாதரனல்ல அப்பா. அவன் பெயர் கருணாகரன்.

**ஜயபாலன்** :—மரணாதரனா. அவன் வந்துவிட்டானோ ?

**கமலாஸனன்** :—இல்லையடா செவிடா, அவன்பெயர் மரணாதரனல்லடா, அவன் பெயர் (உரக்க) கருணாகரன்!

**ஜயபாலன்** :—கருணாகரனா? பெயர் நன்றாகத்தானிருக்கிறது. அவன் வந்துவிட்டானோ?

**கமலாஸனன்** :—தெரியவில்லை. விசாரித்துக்கொண்டுவரும்படி சற்றுமுன் தான் ஆளனுப்பினேன்.

**ஜயபாலன்** :—சரி, நான் சென்றுவருகிறேன். எனக்கு வேறு வேலையிருக்கிறது.

**கமலாஸனன்** :—சரி, சென்றுவா. (**ஜயபாலன் செல்லல்**)

(**தனக்குள்**) கருணாகரன் ஏன் இன்னும் வரவில்லை? என் கடிதம் கிடைத்தவுடன் புறப்பட்டிருந்தால் அவன் இரண்டு மூன்று நாட்களுக்கு முன்னாலேயே இங்கு வந்திருக்க வேண்டுமே. இன்னும் வராததற்குக் காரணம் தெரியவில்லையே.

(சேவகன் பிரவேசித்தல்.)

**சேவகன்** :—மகராஜ்! கருணாகரர் சற்றுமுன் தான் இந்நகர் வந்து சேர்ந்தாராம். இதோ வெளியில் நிற்கிறார்.

**கமலாஸனன்** :—அவரை உடனே உள்ளே வரச்சொல்.

(**சேவகன் செல்ல கருணாகரன் பிரவேசித்தல்**)

கருணாகரா, வருவாய். நீ வருவதற்கு ஏன் இவ்வளவு தாமதம்? இரண்டு நாட்களுக்கு முன்னேயே வருவாயென் றல்லவோ நினைத்தேன்.

**கருணாகரன்** :—இரண்டு நாட்களுக்கு முன் வருவதாகத்தானிருந் தேன். ஆனால் * வண்டிக்காரப் பயல்கள் வாடகை ஜாஸ்தி யாகக்கேட்டார்கள். என் குதிரைக்கும் வயிற்றுவலியாக இருந்தது. எல்லாவற்றையும் யோசித்து கால்நடையாகப் புறப்பட்டுவருவதுதான் உசிதமென்று அங்ஙனமே செய் தேன்.

**கமலாஸனன்** :—கால்நடையாக வந்தாயா! உதயகிரி எங்கிருக் கின்றது! புஷ்பபுரம் எங்கிருக்கின்றது! கால்நடையாக வாவது வரவாவது!

---

* Vide notes

கருணாகரன் :—என்ன பிரமாதம்? ஐந்து நாளைப்பிரயாணம்தானே!

கமலாஸனன் :—உனக்கென்ன பணமில்லையா ? சொத்தில்லையா? நீ ஆண்டியா ? பரதேசியா ? ஏனடா நீ நடந்துவரவேணும் ? ஏன் இவ்வளவு கருமித்தனம் ? வண்டிவாடகை சற்று அதிகமாகக் கொடுத்தால்தானென்ன? மேலும், நான் அவசரமாகப் புறப்பட்டுவரும்படி எழுதியிருந்தேனே, நீ வண்டிவாடகை கொஞ்சம் ஜாஸ்தியாகக் கொடுக்கவேண்டியிருந்தால் நான் கொடுக்கமாட்டேனா ?

கருணாகரன் :—அது போனாற்போகிறது. நான் திரும்பிச் செல்லவும் வண்டிவாடகை அதிகமாகத்தான் கொடுக்கவேண்டியிருக்கும். ஆகையால், நீ பணங்கொடுத்தால் வெகு சீக்கிரத்தில் என் ஊருக்குத் திரும்பிச் சென்றுவிடுவேன். அதிருக்கட்டும், வாத்ஸல்யனை நீ ஏன் எனக்கெழுதிய கடிதத்தில் அவ்வளவு தூஷித்திருக்கிறாய் ? அவன்மீது உனக்கேன் அவ்வளவு கோபம் ? அவன் பாவம் ஒரு சூதுமறியாதவனாயிற்றே ! குணப்பெருங்குன்றென்றால் அவனையே சொல்லலாமென்று பலர் சொல்லக்கேட்டிருக்கின்றேன். அப்படியிருக்க——

கமலாஸனன் :—கருணாகரா, போதும், நிறுத்து உன் பிரசங்கத்தை ! வாத்ஸல்யன் குணப்பெருங்குன்றா ? எத்தனை பேர்கள் இந்த வேடதாரியைக்கண்டு மோசம்போகின்றனர்! "கோமுகவியாக்ர" மென்றால் அவனையே சொல்லலாம்! அல்லது நீ சொல்லும்விதம் அவன் பரமயோக்கியனென்றே வைத்துக்கொண்ட போதிலும், எனக்குச் சத்துருவாக வாய்த்துத் தீங்கிழைத்தானாயின் அவனைக் கெடுத்தல் நியாயந்தானே ? தன்னைக்கொல்லவந்த பசுவையும் கொல்லலாமென்பதுதான் எனக்கு வேதவாக்கியம்.

கருணாகரன் :—அவன் உனக்கிழைத்ததீங்குதானென்ன? அதைச் சொல் கேட்போம்.

**கமலாஸனன் :**—அப்படி வழிக்குவா, சொல்லுகிறேன், கருணகரா, இந்த வாத்ஸல்யனும் சந்திரகுப்தருடைய அமைச்சர்களிலொருவன்தான். நானும் அரசருடைய அமைச்சர்களிலொருவன்தான். நானே வெகுகாலமாய் அமைச்சனுயிருக்கின்றேன். வாத்ஸல்யன் நேற்று வந்தவன்! அப்படியிருக்க நடந்த சங்கதியைக் கேள்.

**கருணகரன் :**—ஏது, பீடிகை பிரமாதமாயிருக்கிறதே!

**கமலாஸனன் :**—பீடிகையின்றி உனக்கு எவ்வாறு சொல்வது? நீயோ உதயகிரியிலேயேயிருப்பவன். இங்குள்ள விஷயங்களொன்றையுமே யறியாதவன். ஆகையால், ஆதிமுதல் எல்லாவற்றையும் சொன்னல் தானே உனக்கு விளங்கும்.

**கருணகரன் :**—அந்தப் பீடிகையைக்காட்டிலும் இந்தப்பீடிகை பிரமாதமாயிருக்கிறதே! சரி, சரி, சொல் கேட்போம்.

**கமலாஸனன் :**—நமதரசருடைய முதன்மனைவி சுமார் பதினைந்து வருடங்களுக்கு முன் ஓர் பெண் குழந்தையைப் பெற்றெடுத்துச் சிலதினங்களில் உயிர்துறந்தனளன்றே? அந்நாள்தொட்டு அரசர் மறுமணம் செய்துகொள்ள இஷ்டமின்றியேயிருந்தார். ஆனல் நமதரசருக்குப்பின் செங்கோல் செலுத்த ஓர் அரசிளங்குமாரனில்லாமையைப்பற்றி குடிகள் பலவாறு வருந்தி, மறுமணஞ் செய்துகொள்ளத்தான் வேண்டுமென்று அரசரைப் பலவாறு வேண்டினர். கடைசியாக, அரசரும் அவர்களுடைய குறையைத்தீர்த்தற்பொருட்டு தன் மனதுக்கு உவந்த மாதொருத்தியைத் தானே தேடி மணஞ் செய்துகொள்வதாக வாக்களித்து அவர்களை அனுப்பினர். பிறகு—

**கருணகரன் :**—இதென்ன இராமாயணம் சொல்ல ஆரம்பித்து விட்டாய்!

**கமலாஸனன் :**—கருணகரா, நான் சொல்வதைக்கேள். என் உள்ளத்திலிருப்பதை உன்னிடம் சொல்லாமல் வேறுயாரிடம்

சொல்லப்போகிறேன்? உன்னைவிட ஆப்த நண்பர்கள் எனக்கு வேறுயாரிருக்கிறார்கள்? வெகுநாளாய் என் மனதிலோர் எண்ணமுண்டு. அதென்னவெனில், எனது ஏகபுத்ரனை பிரதாபன் எப்படியாவது சந்திரகுப்தருக்குப்பின் இந்நகர் அரசனாகவேண்டுமென்பதே! இவ்வெண்ணம் நிறைவேறுவதற்காக என்னுயிரையும் கொடுக்கத்தயாராயிருந்தேன்! ஆனால், என் ஆசைகளெல்லாம் நாசமாயின! என் எண்ணங்களெல்லாம் மண்ணாயின! என் மனோராஜ்ஜியங்களெல்லாம் பாழாய் விட்டன! எல்லாவற்றிற்கும் வாத்ஸல்யனே காரணமாயினன்!

**கருணாகரன் :**—அதெங்ஙனம்?

**கமலாஸனன் :**—அரசர் மறுமணஞ்செய்துகொண்டு ஓர் ஆண் மகவைப்பெற்றால் என் எண்ணங்களெல்லாம் வீணாய் விடுமாதலால், அரசர் மறுமணமே செய்து கொள்ளக்கூடாதென்று அநுதினமும் கடவுளைப்பிரார்த்தித்து வந்தேன். ஆனால் என்னபயன்? தான் மறுமணஞ்செய்துகொள்வதாக வாக்குக்கொடுத்துக் குடிகளையனுப்பிய மறுநாள் அரசர் என்னையும் அந்தப்பாவி வாத்ஸல்யனையும் அழைத்து நாங்களிருவரும் வெவ்வேறாகத் தேசந்தேசமாய்ச்சென்று, அழகிலும், நற்குணத்திலும், கல்வியிலும், சிறந்து, தனக்குமனையாளாகத் தகுந்த மாதொருத்தியை ஒவ்வொருவரும் தேடிவந்தால், அவ்விரு பெண்களில் தனக்கிஷ்டமானவளை மணஞ்செய்து கொள்வதாகச்சொன்னார். நாங்களும் அவ்வாறே சென்றனம்.

**கருணாகரன் :**—சரி, மேல் நடந்ததைச்சொல். காலையுண்டி செய்துவிட்டு வந்திருந்தால் அவசரமேயில்லாமற்கேட்பேன்—

**கமலாஸனன் :**—சற்றுப்பொறுமையுடன் கேள். நான் அனேக தேசங்கள் சென்று கடைசியாக பவநகர் அரசனுடைய செல்வப்புதல்வியையழைத்து வந்தேன். ஆகா! அவளழகை வர்ணிக்க ஆயிரம் நாவமைந்த ஆதிசேஷனுந்தான் முடியுமா? ஆனால் நானவளை வர்ணிப்பதிலென்னபயன்? அரசர் அவளை மணக்கவில்லை.

**கருணாகரன்** :—பின் யாரை மணந்துகொண்டார்?

**கமலாஸனன்** :—வாத்ஸல்யன் எங்கேயோசென்று ஓர் பெண்ணைப் பிடித்து வந்தான். அவள் பெயர் துருவதேவி. அவளுடைய கதையைக்கேள். அவள் ஓர் அரசனுடைய புத்திரியாம். ஆனால் அவள் பிதா வங்கநாட்டரசனால் தோற்கடிக்கப்பட்டு நாடிழந்து எங்கேயோ வசிக்கின்றானாம்! இப்படிப் பட்ட அநாதை மாதுசிரோமணியைத்தான் அரசர் மணஞ் செய்துகொண்டிருக்கிறார்.

**கருணாகரன்** :—**அரசர்** துருவதேவியை மணஞ்செய்துகொண்டால் **வாத்ஸல்யன்** எவ்வாறு உனக்குத் தீங்கிழைத்தவனாவான்?

**கமலாஸனன்** :—நான் சொல்வதை முற்றுங் கேட்டுப் பிறகு பேசு. அரசருடைய விவாகத்திற்கு முன் நான் அவருடைய ஆப்த நண்பனாயிருந்தேன். ஆனால் துருவதேவியை மணம்புரிந்ததுமுதல் அரசர் என்னை வெகுவாய் அலக்ஷியம் செய்துவருகின்றார். வாத்ஸல்யனோ அரசரைவிட்டு அரைக் கணமேனும் பிரிவதில்லை. வாத்ஸல்யன் அரசருடன் இவ்வளவு நேசம்பாராட்டுவதெனில் நான் எவ்வாறு பொறுப்பேன்?

**கருணாகரன்** :—ஓகோ! நீ அவனைப்பார்த்துப் பொறாமைப்பட்டால்?

**கமலாஸனன்** :—இல்லையில்லை. அரசரென்னை அலக்ஷியஞ் செய்வது வாத்ஸல்யனுடைய உபதேசத்தின்பேரில்தான்! இது மாத்திரமல்ல. இன்னுங்கேள். அரசர் மறுமணஞ்செய்துகொண்டுவிட்டபோதிலும் தெய்வாதீனமாய் புத்திரப் பேறின்றியிருக்கக்கூடாதா? அப்பொழுதாவது என் மைந்தன் வாஸந்திகையை மணஞ்செய்துகொண்டு சந்திரகுப்தருக்குப்பின் அரசனாகக்கூடாதாவெனும் ஓர் நம்பிக்கை கொண்டிருந்தேன். ஆனால் வாத்ஸல்யன் அதிலும் வெடியை வைத்துவிட்டான்!

**கருணாகரன்** :—அதெப்படி?

**கமலாஸனன் :**—வாத்ஸல்யன் அரசருக்கு ஓர் மனைவியைத் தேடிவந்தது மாத்திரமன்று. அவருக்கோர் மாப்பிள்ளையையும் தேடிவந்திருக்கின்றானும்! யாரோ ஒரு இராஜகுமாரனும்! அவன் வாஸந்திகையை மணஞ்செய்துகொள்ள இச்சை கொண்டிருக்கின்றானும்! கலியாணமும் வெகு சீக்கிரத்தில் நடக்கப்போகின்றதாம்.

**கருணாகரன் :**—அப்படியா!

**கமலாஸனன் :**—கருணாகரா, வாஸந்திகைக்குத் தகுந்த மணவாளன் என் புத்திரனேயன்றோ? இப்பொழுது சந்திரகுப்தன் அவளை ஓர் அரசிளங்குமாரனுக்குப் பாணிக்கிரகணம்செய்து கொடுத்துவிட்டால், என் எண்ணம் எவ்வாறு நிறைவேறும்? இதற்கெல்லாம் காரணம் வாத்ஸல்யனேயன்றோ?

**கருணாகரன் :**—சரி, இப்பொழுது அதற்காக யாது செய்யவேண்டுமென்கிறாய்?

**கமலாஸனன் :**—யாது செய்வதா? வாத்ஸல்யனை வேரோடு களைந்து அவனைத் துலைக்கவேண்டியதுதான்.

**கருணாகரன் :**—அரசரும் வாத்ஸல்யனும் இவ்வளவு சிநேகபாவத்தோடிருக்கையில் நீ அவனை எவ்வாறு கெடுக்கமுடியும்? ஒருபோதும் முடியாது.

**கமலாஸனன் :**—என்ன கருணாகரா, நீயும் நானும் மனதுவைத்தால் நம்மாலாகாத காரியமும் ஒன்றுண்டா? பஞ்சதந்திரங்களிலொன்றான மித்திரபேதமெனும் தந்திரத்தைக் கைக்கொண்டு அரசரையும் வாத்ஸல்யனையும் பிரித்துப் பிறகு வாத்ஸல்யனை அரசருடைய கோபாக்கினிக்கு இரையாக்கவேண்டியதுதான்.

**கருணாகரன் :**—ஏதேது! இது நம்மாலியலாத காரியமென்றே எண்ணுகிறேன்.

**கமலாஸனன் :**—இல்லையில்லை. இதற்காகவேண்டி நான் முன்னமேயே எவ்வளவோ ஏற்பாடுகளையெல்லாம் செய்திருக்கி

றேன், முதலில், எனதாட்களைக்கொண்டு சிற்சில பொய் வதந்திகளைக் கிளப்பிவிட்டிருக்கிறேன். அவைகளிலொன்று என்னவெனில், உஜ்ஜைனி மன்னன் இந்நகர் நோக்கிப் படையெடுத்துவரப் போகிறானென்பதே. ஆகா எனதாட்களின் சாமர்த்தியத்தை என்னென்று சொல்வேன். வதந்திகளை யாவரும் நம்பும்படி எங்குங் கிளப்பிவிட்டுத் தாங்களும் அகப்பட்டுக்கொள்ளாமல் வெகு சாமர்த்தியமாய் வேலையை முடித்து விட்டனர்.

**கருணாகரன் :—** இந்நகர் வந்தடைந்தவுடன் நானும் ஏதோ கேள்விப்பட்டேனே !

**கமலாஸனன் :—** எல்லாம் நான் கிளப்பிவிட்ட வதந்திகளாகத்தானிருக்கவேண்டும். நகரத்தார்களெல்லோரும் இப்பொழுது வதந்தியை நம்பிவிட்டனர். அரசரும் உண்மையென்றே நம்பி இன்னும் சில தினங்களில் ஓர் சபை கூட்டப் போகிறாராம். நான் அன்று சபைக்குப் போகாமலிருந்துவிட்டுப் பிறகு தகுந்த அத்தாக்ஷியைக்கொண்டு வாத்ஸல்யன் உஜ்ஜைனி மன்னனுக்குச் சாதகமாகவும் சந்திரகுப்தருக்குப் பாதகமாகவும் பற்பல ஏற்பாடுகளைச் செய்திருப்பதாக நிரூபித்துவிட்டால் அரசர் வாத்ஸல்யனை யோர் பெரும் இராஜத் துரோகியென்றெண்ணிச் சிறையிலடைத்து விடுகிறார்! இதென்ன பிரமாதம்?.

**கருணாகரன் :—** அதெல்லாமிருக்கட்டும் வாத்ஸல்யன் இராஜத் துரோகியென்று தகுந்த அத்தாக்ஷியுடன் நிரூபித்தல் சாத்தியமா?

**கமலாஸனன் :—** நானா இதையெல்லாங்கண்டு மலைப்பவன்? **(ஓர் கடிதத்தைக் கொடுத்து)** இதோ இதைப்படித்துப்பார் இதையரசரிடம் கொடுத்தேனாயின் வாத்ஸல்யன் கதி யாதாகுமென்பதை யோசித்துப்பார்.

**கருணாகரன் :—(படித்துவிட்டு)** வாத்ஸல்யனையடியோடு துலைக்க இக்கடிதமொன்றே போதுமே! இது உனக்கெவ்வாறு கிடைத்தது?

**கமலாஸனன்** :—எவ்வாறு கிடைத்ததா! இக்கடிதத்தை நான் தானெழுதினேன்!

**கருணாகரன்** :—ஆனால் கடிதத்தில் வாத்ஸல்யன் கையெழுத்துப் போட்டிருக்கிறானே!

**கமலாஸனன்** :—நீயும் மோசம் போனையா? எல்லாம் ஜயபாலனுடைய சாமர்த்தியந்தான்! கருணாகரா, கடிதம் எழுதியது நான்! ஆனால் அதில் வாத்ஸல்யனுடைய கையெழுத்தைப் போட்டது என் நண்பனான ஜயபாலன்! அவன் பிறனுடைய கையெழுத்தைப்போடுவதில் வெகுசமர்த்தன். இதோபார். இக்கையெழுத்தை வாத்ஸல்யனே பார்த்தபோதிலும் தான் போட்டதென்று சொல்வானேயன்றிப் பிறனொருவன் போட்டதாகச்சொல்லுவானா? ஜயபாலனுடைய சாமர்த்தியமே சாமர்த்தியம்.

**கருணாகரன்** :—சரி, சரி, வாத்ஸல்யனைக்கெடுக்க இக்கடிதமொன்றேபோதும்—ஆனால் (சற்றுயோசித்து) ஓர் பாவமுமறியாத மஹாராணியையும் அரசர் அவமேதண்டிப்பாரே! துருவதேவியை யரசர் ஏதாவது பாடுபடுத்தினால் அப்பழி உன்னைச் சுற்றுமே.

**கமலாஸனன்** :—அரசனையும் வாத்ஸல்யனையும் பேதம் செய்து வைத்தற்போலவே, அரசரையும் இராணியையும் பிரித்து வைக்கவேண்டுமென்பதுதான் என் நோக்கம். ஏனெனில், துருவதேவி இப்பொழுது கர்ப்பவதியாயிருப்பதால், அவளை யரசருடைய கோபாக்னிக்கிரையாக்காவிட்டால், பிரதாபன் வாஸந்திகையை மணந்து இந்நகர் அரசனாதல் இயலாத காரியமாகும்.

**கருணாகரன்** :—அப்பா! என்ன உன் சாமர்த்தியம்! அதிருக்கட்டும். என்னை நீ உதயகிரியிலிருந்து புறப்பட்டு வரும்படி எழுதியது எதற்காக? நான் இவ்விஷயத்திற்செய்ய வேண்டியதென்னவிருக்கின்றது?

**கமலாஸனன்** :—வாத்ஸல்யனுடைய தாயார் உதயகிரியிலிருப்பதை நீ அறிவாயல்லவா? ஆகையால், நீ செய்யவேண்டியது

யாதெனில், உடனே உதயகிரிக்குப்புறப்பட்டுச்சென்று வாத்ஸல்யனுக்கு அங்கிருந்து இக்கடிதத்தை யனுப்பவேண்டும். (ஓர் கடிதத்தைக்கொடுத்தல்) தன்னுடைய மைத்துனன் உதயகிரியிலிருந்து எழுதியிருப்பதாக வாத்ஸல்யன் நினைத்துக்கொள்வான். பிறகு நடக்கவேண்டியவைகளை நான் பார்த்துக்கொள்ளுகிறேன்

**கருணாகரன் :—** சரி, அவ்வாறே செய்கிறேன். ஆனால் இக்கடிதத்தை நீ உதயகிரிக்கு என் மேல்விலாஸத்துக்கு அனுப்பியிருக்கக்கூடாதோ? இந்தப்பிரமாதத்திற்காக என்னை இவ்வளவு தூரம் வரும்படி எதற்காக எழுதினாய்?

**கமலாஸனன் :—** இவ்வளவு கதையும் உன்னிடம் சொல்லவேண்டாமா? மேலும் நான் செய்வதெல்லாம் இரகசியமாகச்செய்யவேண்டியிருப்பதால் உன்னை நேரிலேயே வரச்சொன்னேன். இக்கடிதத்தை வேறுயாரிடத்திலும் ஒப்புவிக்க எனக்குத்தைரியமில்லை.

**கருணாகரன் :—** சரி, அப்படியே செய்கிறேன். வேறு விசேஷமில்லையே?

**கமலாஸனன் :—** வேறு விசேஷமில்லை. இன்னும் சற்றுநேரத்தில் வாத்ஸல்யனே யிங்கு வருவான் ஆகையால் அவன் வருவதற்குள் நீ சென்றுவிடு. இதோ இப்பணப்பையையெடுத்துக்கொள். வண்டிவாடகை முதலிய செலவுகளுக்கிருக்கட்டும்.

(ஓர் பணப்பையைக் கொடுத்தல்)

**கருணாகரன் :—**(பணப்பையை எடுத்துக்கொண்டு தனக்குள்) இந்தப்பை என்ன கனமாயிருக்கின்றது! ஓர் கடிதத்தை உதயகிரியிலிருந்து அனுப்புவதற்கா இது கூலி. ஆ! இப்பையினின்றும் ஒருபொன்னாவது எடுத்துச் செலவழிக்கலாமோ? கூடாது! வண்டியாவது, குதிரையாவது! ஒன்றும் வேண்டாம்! மறுபடியும் உதயகிரிக்கு நடந்தே போய்விடுகின்றேன். அதுதான் சரி. வழியில் எத்தனையோ சத்திரங்க

ளிருக்கின்றன. * திருடர்கள் பயமும் ஒழிந்து விட்டது. என்னை யிங்குயாரறிவார்கள்? யாரோ வழிப்போக்கனென்று நினைத்துக் கொள்ளுவார்கள். நினைத்துக் கொள்ளட்டுமே! வண்டிவாடகை லாபந்தானே? (உரக்க) கமலாஸனா, நான் இன்றையதினமே உதயகிரி புறப்பட்டுச்செல்லட்டுமா?

**கமலாஸனன் :—** ஆகா, அப்படியே செய். கடிதத்தைப் பத்திரமாய் வைத்துக்கொள்.

(கருணாகரன்செல்லல்)

(தனக்குள்) வாத்ஸல்யன் வரும் நாழிகையாய்விட்டது. எனக்கு உடம்பு அசௌக்கியமாயிருப்பதாகப் பாசாங்கு செய்யவேண்டும். இதோ இந்தச் சாய்வு நாற்காலியில் சாய்ந்துகொள்ளுகிறேன். (சாய்ந்துகொண்டு, உரக்க) யாரடா சேவகா——

(சேவகன் பிரவேசித்தல்)

**சேவகன் :—** மகராஜ்.

**கமலாஸனன் :—** மந்திரி வாத்ஸல்யரைத்தவிர வேறு யார் வந்தாலும் இப்பொழுது நம்மைப்பார்க்க முடியாதென்று சொல்லிவிடு. வாத்ஸல்யர் வந்தவுடன் எனக்கு உடம்பு அசௌக்கியமாயிருக்கின்றதென்றும், எனினும் அவருடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டிருப்பதாயுஞ் சொல.

**சேவகன் :—** அப்படியே சொல்லுகிறேன்.

(சேவகன் செல்லல்.)

**கமலாஸனன் :—** (தனக்குள்) வாத்ஸல்யனை ஏய்த்துவிட முடியாதா? அவன் ஒரு சூதும் அறியாதவன்தான். நான் சொன்னதையெல்லாம் இதுவரையில் நம்பியிருக்கின்றான். இவ்விஷயத்தில் மாத்திரம என்னிடத்தில் அவநம்பிக்கை கொள்வானா என்ன? ஆ! அதோ வாத்ஸல்யன் வந்துவிட்டான்போலிருக்கின்றது. யாரோ மாடிப்படி யேறிவரும் சத்தம் கேட்கிறதே!

---

* Vide notes.

(வாத்ஸல்யன் பிரவேசித்தல்)

**கமலாஸனன் :**—நமஸ்காரம், வாத்ஸல்யப்பிரபு! இதோ இந் நாற்காலியிலமருங்கள்.

**வாத்ஸல்யன் :**—நமஸ்காரம். தங்கள் தேகஸ்திதி எப்படியிருக்கின்றது?

**கமலாஸனன் .**—நேற்று ஜுரம் அதிகமாயிருந்தது. இன்று ஜுரமில்லை. ஆனால் பலஹீனத்தால் இப்பொழுது எழுந்து தங்களை யுபசரிக்க சக்தியற்றவனாயிருக்கிறேன்.

**வாத்ஸல்யன் :**—நன்றாயிருக்கிறது! தாங்கள் தேகஸ்திதியை முதலில் பார்த்துக்கொள்ளுங்கள். பிறகு மற்றவைகளைக்கவனிக்கலாம்.

**கமலாஸனன் :**—ஆனால் நான் தங்களுடன் பேசவிரும்பும் விஷயம் வெகு அவசரமானதாயிருக்கின்றது——

**வாத்ஸல்யன் :**—அவ்வளவு முக்கியமான சங்கதி யாதாயிருக்கலாம்?

**கமலாஸனன் :**—இப்பொழுது யுத்தம் உண்டாகப்போகிறதென்று ஓர் வதந்தி கிளம்பியிருக்கிறதே, இதென்ன உண்மையாயிருக்குமென்று தங்களுக்குத்தோன்றுகிறதோ?

**வாத்ஸல்யன் :**—உண்மையாகத்தானிருக்கவேண்டுமென்று நம்புகிறேன். வெகு நாளாய் நாம் எதிர்பார்த்திருந்த விஷயந்தானே.

**கமலாஸனன் :**—என்னை மன்னிக்கவேண்டும். நானப்படி நினைக்கவில்லை. யுத்தமொன்றும் உண்டாகாதென்று நினைக்கிறேன்.

**வாத்ஸல்யன் :**—அப்படி விஷயமில்லாமலா ஓர் வதந்தி திடீரென்றுகிளம்பும்? இவ்வளவு வருடங்களாய் இவ்வாறு ஓர் வதந்தி பரவியதா? இப்பொழுது மாத்திரம் பரவுவதற்குக்காரணமென்ன?

**கமலாஸனன் :**—சரி, தாங்கள் சொல்லும்வண்ணமே யுத்தமுண்டாகப்போகிறதென்றே வைத்துக்கொள்வோம். அதற்கு இப்பொழுது நாமென்ன செய்வது?

**வாத்ஸல்யன் :**—என்ன செய்வதா? யுத்தத்திற்குவேண்டிய சகல ஆயத்தங்களையும் செய்யவேண்டியதுதான்.

**கமலாஸனன் :**—அப்படிச்செய்வது உசிதமல்லவென்று எனக்குத் தோன்றுகிறது.

**வாத்ஸல்யன் :**—ஏன் ?

**கமலாஸனன் :**—ஏனெனில், முதலில், நாமும் யுத்தத்திற்கு வேண்டிய ஆயத்தங்கள் செய்கிறோமென்று ருத்ரசிம்ஹன் அறிவனேல், அவன் ஓர் மிகத்திரண்ட பெரிய சேனையுடன் வருவான். அப்பொழுது அவனை வெல்லுதல் வெகு கடினமாகிவிடும். இரண்டாவதாக, ஒருக்கால் வதந்தியே பொய்யாயிருந்தால் நமது ஆயத்தங்கள் வீண் சிரமத்தையும் பணச்செலவையுங் கொடுக்குமேயல்லாது வேறொன்றுமில்லை. மேலும், இப்பொழுதே நம் சேனையுத்தத்திற்குத் தயாராகத் தானிருக்கின்றது.

**வாத்ஸல்யன் :**—தாங்கள் சொல்வதும் ஓர் விதத்தில் சரியென்று தான் தோன்றுகின்றது.

**கமலாஸனன் :**—நான் சொல்வதைக்கேளுங்கள் நாம் இவ்வதந்தியை நம்பி ஒன்றுஞ்செய்யக்கூடாது. அப்படிச்செய்தால் மற்ற அரசர்களெல்லோரும் நம்மை மகாபயங்கொள்ளிகளென்று பழிப்பார்கள்.

**வாத்ஸல்யன் :**—தாங்கள் சொல்வது சரிதான். அரசர் இன்னும் சில தினங்களில் இவ்விஷயத்தைப்பற்றி ஆலோசிப்பதற்காக அந்தரங்கசபை கூட்டப்போகிறாராம். அச்சபைக்குத் தங்களையும் என்னையும் சேனாதிபதியையுந்தான் அழைப்பார். சேனாதிபதி ஊரிலில்லையாதலால் நாமிருவருந்தான் அரசருடன் பேசவேண்டியிருக்கும். அப்பொழுது தங்க

ளபிப்பிராயத்தை யரசரிடம் தெரியப்படுத்துங்கள். நானும் தாங்கள் சொல்வதை ஆமோதிக்கிறேன்.

**கமலாஸனன் :**—பிரபு, இன்னும் சுமார் எத்தனை நாட்களுக்குள் அரசர் சபை கூட்டுவார்?

**வாத்ஸல்யன் :**—இன்னும் நாலைந்து தினங்களுக்குள்ளேயே சபை கூட்டிவிடுவார்.

**கமலாஸனன் :**—பிரபு, என் தேகஸ்திதி இப்படியிருக்கையில் நானெப்படி சபைக்கு வருவது? குறைந்தது இன்னும் பதினைந்து நாட்கள் வரையில் நான் வெளியே செல்லக்கூடாதென்று வைத்தியர் சொல்லியிருக்கிறாரே. சபைக்குத் தாங்கள் மாத்திரம் தான் செல்லவேண்டியிருக்கும்.

**வாத்ஸல்யன் :**—நானும் அரசரும் மாத்திரமா சபையிற்கூடுவது? இன்னும் சிலவாரங்கள் கழித்துச் சபைகூட்டலாமென்று அரசரிடம் சொன்னாலென்ன?

**கமலாஸனன் :**—வேண்டாம்! அரசரிஷ்டப்படியே இன்னும் சில தினங்களில் சபை கூடட்டும். எப்படியும் என் அபிப்பிராயம் தங்களுக்குத்தெரியும். தங்கள் அபிப்பிராயமும் அதுதானென்று தாங்களே சொல்லிவிட்டீர்கள். அதையரசரிடம் தெரிவிக்கவேண்டியதுதானே? நான் சபைக்கு வராவிட்டாலும் நான் சொன்னதெல்லாம் அரசருக்குத் தெரிவித்தாற் போகிறது. நானும் தங்களபிப்பிராயத்தையே கொண்டவனாயிருக்கிறேனென்று அரசரிடம் நான் சொல்லச்சொன்னதாகச் சொல்லுங்கள்.

**வாத்ஸல்யன் :**—அப்படியே சொல்லுகிறேன். வேறுவிசேஷமில்லையே?

**கமலாஸனன் :**—மற்றொருவிஷயம் சொல்லுகிறேன். இந்த யுத்தத்தைப்பற்றி அரசர் அதைரியங்கொள்ளாமலிருக்க வேண்டியது அத்யாவசியம். காவலனே அரண்டால் குடிகளுக்கு என்ன தைரியமிருக்கும்? தைரியமில்லாவிட்டால் வெற்றி எப்

படிக்கிடைக்கும்? ஆகையால், தாங்கள் நம்முடைய சேனையின்பலத்தையும் அரசருடைய வீரத்தையும் வெகுவாய்ப் புகழ்ந்து அரசருக்குத்தைரியத்தைக் கொடுக்கவேண்டும்.

**வாத்ஸல்யன் :**—அப்படியே செய்கிறேன். நான் சென்றுவருகின்றேன்.

**கமலாஸனன் :**—அனேக வந்தனம். தங்களைச்சிரமப்படுத்தியதற்கு என்னை மன்னிக்கவேண்டும்.

**வாத்ஸல்யன் :**—இதென்ன பிரமாதசிரமம்! தாங்கள் உடம்பை ஜாக்கிரதையாகக் கவனியுங்கள். நான் விடைபெற்றுக்கொள்ளுகிறேன்.

(**வாத்ஸல்யன் செல்லல்**)

**கமலாஸனன் :**—(**தனக்குள்**) பலே கமலாஸனு! உன் சாமர்த்தியமே சாமர்த்தியம்! பாவம், வாத்ஸல்யன் அப்பாவி! கோழிக்கு மூன்றேகாலென்றாலும் நம்புவான் போலிருக்கிறதே! பேஷ்! என் சூழ்ச்சி கைகூடிவருமென்பதிற் சந்தேகமில்லை. நான் உடனே சென்று இன்னும் ஆகவேண்டிய காரியங்களைச்செய்கிறேன்.

(செல்லல்)

(**காட்சி முடிகிறது.**)

---

**அங்கம் I.**

## களம். 4. புஷ்பபுரம். அரண்மனை நந்தவனம்

---

லீலாவதி தனிமையாய் வருந்துதல்

**லீலாவதி :**—ஆ! தெய்வமே. இதென்ன அநியாயமாயிருக்கிறது * மகாலக்ஷ்மியையொத்த மகாராணியைப்பற்றி இத்தகைய பழிச்சொற்களைச்சொல்லவும் ஜனங்களுக்குத் துணிவு உண்டாகிவிட்டதா? அவளுடைய பெருந்தன்மையும் கம்பீரமான பார்வையும், உல்லாசநடையும், இனிமையான வதன

---

* Vaide notes.

மும், காருண்ய குணமும், மாசற்ற கற்பும், ரதியையொத்த அழகும், இவையெல்லாம் அவள் ஓர் உயர்குலத்திற்பிறந்த பெருமாட்டியென்பதைப் புலப்படுத்தவில்லையா? எந்த இராஜத்துரோகி யாது காரணத்தைக்கொண்டு அவளோரிழி குலப்பெண்ணென்று ஓர் வதந்தியைக் கட்டிவிட்டனனோ! ஐயோ, துருவதேவியின் தாய் தகப்பன்மாரும் தங்கள் நாட்டையிழந்து எங்கேயோ ஒளிந்து வசிப்பதாலன்றோ எல்லோரும் இப்பழிச்சொற்களை நம்புகின்றனர். ஜனங்கள் நம்புவதைப்போல் அரசரும் நம்பிவிடின், துருவதேவியை என்னபாடுபடுத்துவாரோ! ஹே துருவதேவி, இவ்வ தந்தியை நானெவ்வாறு நம்புவது? ஓர் அரசனுடைய புத்திரியாய் ஜனித்து, குழவிப் பருவமுதல் வெகு செல்வமாய் வளர்ந்து, ஓர் இராஜனையும் மணவாளனைக்கொண்டு சுகமாகவிருக்கும் தங்களுக்கு யாது கஷ்டம் சம்பவிக்குமோ? தங்களுக்கு என்ன ஆபத்து நேரிட்டபோதிலும், நான் தங்களை விட்டு ஓர் விநாடியேனும் பிரியேன்! இது சத்தியம்! இது உறுதி. தங்களுயிருக்கு ஏதாவது ஹானி உண்டாயின் நானும் தங்களுடன் மேலுலகம் ஏகுவேனேயன்றித் தங்களைவிட்டுப் பிரிந்திருக்கமாட்டேன். "திக்கற்றவர்களுக்குத் தெய்வமேதுணை" யென்பதுபோல் இனி தங்களைக கடவுள்தான் இரக்ஷிக்கவேண்டும்—ஆ! நாழிகையாய்விட்டது. நான் ஏன் இன்னும் வரவில்லை என்று துருவதேவி ஆச்சரியப்பட்டுக் கொண்டிருப்பாள். இச்சங்கதி அவள் காதுகளுக்குக்கெட்ட ஹேதுவில்லையாதலால் அவள் எப்பொழுதும்போல் சந்தோஷமாகவேயிருப்பாள். அவள் சந்தோஷமாயிருக்கும்பொழுது அவளுக்குப் பணிவிடை செய்தல் எனக்கும் சந்தோஷத்தைக் கொடுக்கும். இதோ தோட்டக்காரன் பறித்துவைத்திருக்கும் புஷ்பங்களை மகாராணியாரிடம் கொண்டுபோய்க் கொடுப்போம்.

(புஷ்பக் கூடையை எடுத்துக்கொண்டுசெல்லல்)

(காட்சி முடிகிறது.)

---

## அங்கம் II.

### களம் 1. புஷ்பபுரம் சந்திரகுப்தன்—அரண்மனை,

### காலம்—காலை.

சந்திரகுப்தனும் வாத்ஸல்யனும் அமர்ந்திருத்தல்.

**சந்திரகுப்தன் :**—வாத்ஸல்ய, சேனாதிபதி ஊரிலில்லாவிட்டாலுங் கூட, நீயும் கமலாஸனனும் நானும் ஒன்றாகூடி ஆலோசித்து இந்த யுத்தத்திற்காக வேண்டியவைகளைச் செய்யலாமென்று நினைத்தேன் ஆனால், தனக்கு உடம்பு அசௌக்கியமாயிருப்பதால் இன்று அரண்மனைக்கு வரச்சக்தியற்றவனாயிருப்பதாகக் கமலாஸனன் தெரிவித்திருக்கிறானே!

**வாத்ஸல்யன் :**—மகராஜ், நான் சில தினங்களுக்கு முன் கமலாஸனருடைய மாளிகைக்குச் சென்றிருந்தேன். அவர் இன்று இச்சபைக்குவா அசக்தராயிருப்பதால் அவருடைய அபிப்பிராயத்தையும் நானேயறிந்துவந்தேன்.

**சந்திரகுப்தன் :**—அப்படியெனிற் சரி உஜ்ஜைனி மன்னன் படையெடுத்துவர ஆயத்தஞ்செய்துகொண்டிருப்பதால் நாமும் யுத்த சன்னத்தராயிருக்கவேண்டியதுதானே?

**வாத்ஸல்யன் :**—இராஜாதிராஜ, தாங்கள் சற்றேனும் அச்சப்படவேண்டாம். ருத்ரசிம்ஹனுடைய சேனை நம் சேனையின் முன் நிற்கவும் இயலுமோ? இந்நாட்டு அரசர்களெல்லோரும் தத்தம் சேனைகளையெல்லாம் திரட்டிக்கொண்டு வந்தபோதிலும் நம்முடைய சேனை அவர்களைப் புறங்கொடுத்தோடச் செய்யுமென்பதிலையமில்லை. அங்ஙனமிருக்க நாம் ஏன் பயப்படவேண்டும்? இயற்கையிலேயே மிகுந்த தைரியசாலியாகிய தாங்கள் போரைப்பற்றிய ஓர் வதந்தியைக் கேட்டவுடன் யுத்தத்துக்குச் சன்னத்தம் செய்யும்படி கட்டளையிட்டால் பார்ப்போர் யாது சொல்வர்?

சந்திரகுப்தன் :—நான் போர் என்றவுடன் அரண்டுவிட்டேனென்று நினைக்காதே. யுத்தத்திற்கு எப்பொழுதும் தயாராயிருத்தல் நல்லதுதானே? திடீரென்று போர் விளையினும் நாம் நிச்சயம் வெற்றிபெறலாமேயென்று சொன்னேன்.

வாத்ஸல்யன் :—நம் சேனையானது யுத்தத்திற்கு எப்பொழுதும் தயாராகவேயிருக்கின்றது. சேனையிலுள்ள களிறுகளெல்லாம் மதமொழுகப்பெற்று ஆரவாரித்துக்கொண்டிருக்கின்றன. அப்படியிருக்க, இனி விளையும் யுத்தத்திற்கென்று நாம் புதிதான ஏற்பாடுகளொன்றும் செய்யவேண்டியதில்லை. மற்றும் அப்படிச்செய்தலே பெரும் பிழையாகும்.

சந்திரகுப்தன் :—அதெப்படிப் பிழையாகும்? எது எப்படியிருந்தபோதிலும் நாம் தயாராயிருத்தல் நல்லதுதானே?

வாத்ஸல்யன் :—அப்படியல்ல. நாமும் யுத்தத்திற்குத் தயார்செய்கிறோமென்று ருத்ரசிம்ஹன் அறிவனேல், அவன் பல அரசர்களின் உதவியைக்கொண்டு மிகத்திரண்ட ஓர் சேனையுடன் வருவான். அப்பொழுது அப்பெருஞ் சேனையை வெல்லுதல் வெகு கடினமாகிவிடும். இரண்டாவதாக, ஓர்கால் இவ்வதந்தியே பொய்யாயிருப்பின், நாம் யுத்தத்திற்காகச் சகல ஆயத்தங்களையும் செய்தல் வீண் சிரமம்தான். மற்ற அரசர்களும் நம்மை மகா பயங்கொள்ளிகளென்று பழிப்பார்கள். அரண்டவன் கண்களுக்குத்தான் இருண்டதெல்லாம் பேயாய்த்தோன்றுமேயல்லாது தைரியத்தைக்கொண்டவனுக்குத்தோன்றா.

சந்திரகுப்தன் :—வதந்தி பொய்யாயிருக்கமுடியாது. ஏனெனில் முன் நம்முடன் போர்புரிந்து தோல்வியடைந்தபொழுது ருத்ரசிம்ஹன் பழிக்குப்பழிவாங்குவதாகச் சபதம்செய்தது எனக்குத்தெரியும். அவ்வெண்ணத்தைக்கொண்டே அவன் இவ்வளவு வருடங்களாய் யுத்தத்திற்குத் தயாரித்திருக்கின்றான். யுத்தம் ஆரம்பிக்க ஓர் காரணம் வேண்டுமாகையால் இந்த எல்லைச்சச்சரவையே காரணமாகக்கொண்டான்

போதும். எனினும், வேற்றரசனொருவன் படையெடுத்து வரின் அரசனுக்குப்புத்தி புகட்டவேண்டியது அவனது அமைச்சர்களின் கடமை. தன்னமைச்சர்களின் வார்த்தைகளைத் தட்டாமல் நடத்தலே அரசனுக்கழகு. ஆகையால் நீ யாது உசிதமென எண்ணுகின்றனையோ அவ்வாறே—

**வாத்ஸல்யன் :**—மன்ன, கமலாஸனருடைய எண்ணமும் இதுவே. நான் தங்களிடம் சொல்லிய வெல்லாம் கமலாஸனர் சொல்லச் சொன்னவை தான்.

**சந்திரகுப்தன் :**—அப்படியாயின் உங்களிஷ்டப்படியே செய்யுங்கள். எனக்கொன்றும் ஆக்ஷேபணையில்லை.

**வாத்ஸல்யன் :**—அரசே, மெத்த சந்தோஷம். அபாயத்தில் ஆத்திரப்படாமல் ஆய்ந்தோய்ந்து காரியத்தை நடத்துபவனுக்கே எப்பொழுதும் ஜயமுண்டாகும்.

(ஓர் சேவகன் பிரவேசித்தல்)

**சேவகன் :**—(வாத்ஸல்யனைப்பார்த்து) மகாராஜ், அரண்மனைவாயிலில் ஓர் மனிதன் நிற்கின்றான். அவன் உதயகிரியிலிருந்து ஓர் கடிதம் கொண்டு ஓடோடியும் வந்திருக்கின்றனாம்.

**வாத்ஸல்யன் :**—யாருக்கு? எனக்கா?

**சேவகன் :**—ஆம், மகாராஜ்.

**வாத்ஸல்யன் :**—அதை வாங்கி என் மாளிகைக்கு அனுப்பிவிடு. நான் பிறகு பார்த்துக்கொள்ளுகிறேன்.

**சேவகன் :**—மகாராஜ், அதில் வெகு அவசரமான சங்கதி எழுதப்பட்டிருக்கிறதாம். தாங்கள் உடனே அதைப்பிரித்துப்பார்க்க வேண்டுமென்று அம்மனிதன் சொல்லுகிறான். அக்கடிதத்தையும் இதோ கொணர்ந்திருக்கின்றேன்.

**சந்திரகுப்தன்** :—வாத்ஸல்ய, போரைப்பற்றி யாராயினும் எதாவது எழுதியிருக்கக்கூடும். ஆகையால் அதைப்பிரித்துப் பார்.

**வாத்ஸல்யன்** :—(கடிதத்தை வாங்கிப்படித்துவிட்டு,) அந்தோ, என்னுடைய நற்காலம் முடிந்துவிட்டது! எனக்குத்துன்பகாலம் சமீபித்து விட்டது போலும்! ஐயோ, என் அருமைத்தாயார் உதயகிரியில் மரண வேதனைப்பட்டுக் கொண்டிருக்கிறாளாம். (கண்ணீர் விடுதல்)

**சந்திரகுப்தன்** :—வாத்ஸல்ய! என்னவிசேஷம்? ஏன் கண்ணீர் விடுகிறாய்? என்ன நடந்துவிட்டது? (வாத்ஸல்யனுடைய கையிலிருக்கும் கடிதத்தை வாசித்தல்.)

"அவசரம்."

உதயகிரி,

*கு ச. 88-ஷு ஆவணி-மீ 13உ.

மகா-ள-ள-ஸ்ரீ வாத்ஸல்ய மஹாப்பிரபு அவர்களுக்கு,

ஐயா,

தங்களன்னை சிலவாரங்களாகக் குக்குரவாதரோகத்தால் வருந்தி இப்பொழுது மரணவஸ்தைப் பட்டுக்கொண்டிருக்கிறார்கள். ஆனால், உயிர் விடுமுன் தங்களைப்பார்க்க வேண்டுமென்று ஆசைப்படுவதால் உடனே புறப்பட்டுவரவும். காலதாமதம் செய்தால் தங்களன்னையைத் தாங்கள் காண்பதரிது. தங்கள் வரவை ஒவ்வோர் க்ஷணமும் வெகு ஆவலுடன் எதிர்பார்க்கிறார்,

தங்கள் மைத்துனன்,

**விசுவசேனன்.**

வாத்ஸல்ய, ஓர் மனிதனுக்குத்தன் அன்னையைக்காட்டிலும் அருமையான பொருள் இவ்வுலகத்தில் வேறியாதிருக்கிறது? கடவுள் கண்களுக்குத் தோன்றாத் தெய்வம்; அன்னை பிரத்தியக்ஷமாய்த்தோன்றும் தெய்வமன்றோ? "ஐயிரண்டு திங்களாய் அங்கமெலாம் நொந்து பெற்றுப் பையலென்றபோதே பரிந்தெடுத்து," அருமையுடன் பாலூட்டிச் சீராட்டிப்பாரா

---

* Vide Notes

ட்டி வளர்த்த தாயைக் காலன் வரும்காலத்திற் புறக்கணிப்பார் மனிதராவரோ? ஆகையால், வாத்ஸல்ய, நீ உடனே உதயகிரிக்குப் புறப்பட்டுச்செல்லுதல் மெத்த அவசியம். நீ திரும்பி வருமுன் ஓர்கால் போர் விளைந்துவிட்டாலும் பாதகமில்லை. சேனாதிபதி இன்னும் ஒரு வாரத்திற்குள் திரும்பி வந்து விடுவானாதலின், நாங்களிருவருமாயிருந்து யுத்தத்தை நடத்துகின்றோம். உடனே உதயகிரிக்குப் புறப்படவேண்டிய ஏற்பாடுகளைச்செய்.

**வாத்ஸல்யன் :**—அந்தோ! எச்சமயத்தில் நான் தங்கள் பக்கலேயிருந்து தங்களுக்கு உதவிபுரியவேண்டுமோ அச்சமயத்தில் தானே தங்களை விட்டுப்பிரிய வேண்டியதாயிருக்கிறது! என்னே காலக்கொடுமை! அபாயமுண்டாகுங்காலத்தில் அரசனுக்குதவாத அமைச்சனும் அமைச்சனாவனோ? ஆயினும் நானென்செய்வது? நாளைக்காலையில் உதயகிரி புறப்பட்டுச் செல்கின்றேன். எனது மாதா சற்று சௌஸ்தமடைந்திருப்பின் அவளை இந்நகர் அழைத்து வந்து விடுகின்றேன். அங்ஙனமின்றி, என் துரதிருஷ்டத்தால் அவள் மேலுலகம் ஏகிவிடின் அவளுக்குத் தகனம், கிரியை, முதலியவைகளையெல்லாம் செய்து விட்டு உடனே திரும்பிவிடுகின்றேன். ஆ! தெய்வமே! என்னை இப்படியும் சோதிக்கலாமோ?

**சந்திரகுப்தன் :**—வாத்ஸல்ய, உனக்கு யாதொரு கஷ்டமும் சம்பவியாது. சீக்கிரம் சென்று உதயகிரிக்குச் செல்ல வேண்டிய ஏற்பாடுகளைச்செய்.

**வாத்ஸல்யன் :**—மன்ன, அவ்வாறே செய்கிறேன். நான் விடைபெற்றுக்கொள்ளட்டுமா.

**சந்திரகுப்தன் :**—சரி, சென்று வருவாய்.

(வாத்ஸல்யன் செல்லல்)

காட்சி முடிகிறது.

---

# அங்கம் II

## களம் 2.

### உதயகிரிரஸ்தா—காலம்—காலை

(ஜயபாலன் மாறுவேடம் பூண்டு பிரவேசித்தல்)

ஜயபாலன் :—அடே சேவகர்களே!—அடே கருப்பா! மாயாண்டி! வக்ரதந்தா!—அடே பாவாடை! பத்ரகாளி! முனியாண்டி! காராபூந்தி!—அடே நரிக்குட்டி! கருணைக்கிழங்கு! சாத்தான்!—அடே இருளாண்டி! மொட்டையா! குட்டையா! பரட்டையா! எல்லோரும் வாருங்கடா! சீக்கிரம்! நான் சொல்வதைக் கவனியுங்கள்.

(சேவகர்கள் திருடர்களைப்போல் மாறுவேடம் பூண்டு பிரவேசித்தல்)

சேவகர்கள் :—சாமி! வந்து விட்டோம்! இதோ வந்து விட்டோம்!

ஜயபாலன் :—அடே நான் சொன்ன இடத்திற்கு வந்து விட்டோம். இங்கே தான் நாம் ஒளிந்துகொள்ள வேணும். இவ்வழியாகத்தான் வாத்ஸல்யர் வருவார். அடே, நில்லுங்கடா: நான் சொல்வதைப்போல் செய்யுங்கடா. குட்டையா, நீ இங்கேவா. அடே, பத்ரகாளி, நீ அப்புறம் போய் நில். அடே மொட்டையா, மாயாண்டி, முனியாண்டி, நீங்களெல்லோரும் எனது வலதுகைப்பக்கத்தில் வாருங்கடா. அடே கருப்பா, நரிக்குட்டி, காராபூந்தி, நீங்களெல்லோரும் என் இடதுகைப்பக்கத்தில் வாருங்கடா (மற்றவர்களைப் பார்த்து) அடே பாவாடை, நீ வடக்கேபோய் அந்தச்சதுப்புக்கள்ளிக்குப் பின்னால் ஒளிந்துகொள். அடே, நீ தெற்கே அந்த ஆலமரத்தடியில் போய் பதுங்கிக்கொள். நீ ஒடி மொட்டை, சாத்தான், இருவருக்கும் நடுவில் நில். ஜரூர்! சீக்கிரம்! ஜரூர்! (எல்லோரும் கூச்சலிட்டுக்கொண்டு இங்குமங்குமாய் ஓடுதல்) அடே நாழியாய விட்டது. வாத்ஸல்யர் வரும் நேரமாய் விட்டதடா. சீக்கிரம் எல்லோரும் ஒளிந்து கொள்ளுங்கள்.

வாத்ஸல்யரைப் பிடிக்காமற் போனால் கமலாஸனர் உங்களைக் கொன்று விடுவார்! உஷார்! ஆ! அதோ யாரோ வருவது போலிருக்கிறதே! யாரது? ஒருக்கால் வாத்ஸல்யர்தான் வருகிறாரோ? (சற்று உற்று நோக்கி) ஆ! வாத்ஸல்யர்தானடா! அடே வந்துவிட்டாரடா? அடே மூடர்களே, அவர் நம்மைப் பார்ப்பதற்கு முன் நாம் ஒளிந்துகொள்ளவேண்டும். எல்லோரும் ஒளிந்துகொள்ளுங்கள். சரியான சமயத்தில் நான் நரி ஊளையிடுவதைப்போல் கத்துவேன். உடனே எல்லோரும் ஒரே பாய்ச்சலாகப்பாய்ந்து அவரைப் பிடித்துக்கொள்ள வேண்டும். சீக்கிரம் ஒளிந்துகொள்ளுங்கள். சீக்கிரம்! உஷார்! ஜல்தி! ஜரூர்! ஜரூர்! (எல்லோரும் இந்தமந்தயாய் ஓடிக்கடைசியில் ஒளிந்துகொள்ளுதல்) அடே சேவகர்களே, ஒருவரும் மூச்சு விடக்கூடாது! நிசப்தமாயிருக்க வேண்டும். நானும் இங்கேயே ஒளிந்துகொள்ளுகிறேன்.

(ஒளிந்து கொள்ளல்)

**வாத்ஸல்யன்** :—(புலம்பிக்கொண்டே பிரவேசித்தல்)

இராகம் :—ஸஹானா.

தாளம்—சாப்பு.

பல்லவி.

மைத்துனன் விசுவசேனன்—கடிதம் கிடைத்தமுதல்
மனமும் புண்ணாய்ப்போனதே.

அநுபல்லவி.

அன்னையுறையும்பதி—இன்னமெங்கிருக்கின்றதோ
நின்னையன்றித்துணை வேறு—காணேனே ஜகதீசா. (மை)

சரணம்.

அக்கரை சேருமுன்னர்—அன்னை உயிர் துறந்தால்
என்ன நான் செய்குவேனீசா—முகம் விழிப்பின்றி,
பாசக்கயிற்றைக்காலன்—வீசுங்கால் என்னைப்பார்க்க
ஆசை கொண்டிருப்பின்யா—னென்செய்வேன் ஜெகதீசா.

(மைத்துனன்)

[ஜயபாலன் ஒளிந்துகொண்டே நரியைப்போல் ஊளையிட, எல்லோரும் பிடி! வெட்டு! கொல்லு! குத்து! என்று கத்திக்கொண்டே வாத்ஸல்யனைப் பிடித்துக்கொள்ளல்.]

**வாத்ஸல்யன் :**—ஆ, நான் ஏதோ காட்டு மிருகங்களின் அரவமென்றிருக்க, ஓர் கணத்தில் ஒரேகூட்டமாய் இவர்கள் வந்து என்னைப்பிடித்துக்கொண்டு விட்டார்களே. அடே திருடர்களே! என்னை நீங்கள் விட்டுவிடுங்கள். நான்யாரென்று நினைத்தீர்கள்? சாதாரணவழிப்போக்கனல்ல. இத்தேசத்துப் பிரதான மந்திரி. என்னை இந்த அகௌரவத்திற் குட்படுத்தியதற்காக உங்களை என்னபாடு படுத்துகிறேன் பாருங்கள். அதோ பின்னால் என் வீரர்கள் வருகிறார்கள்! ஒரே நிமிஷத்தில் வந்து உங்களைத்துவம்ஸம் செய்து விடுவார்கள்! என்னை விடுகிறீர்களா என்ன?

**சிலசேவகர்கள் :**—அடே! இவன் பக்காத்திருடண்டா! ரொம்ப நாளா இந்தத்தொழிலெ பண்ணிக்கினுவர்ர நம்பளெயெ இவன் மெறட்டராண்டா. போர் வீரங்களும் வல்லே, ஒருத்தரும் வல்லேடா சும்மா பயமுறுத்தராண்டா—இவனை விடாதீங்கடா.

**மற்றுஞ்சிலர் :**—அடே. இவன் மந்திரியாவது தந்திரியாவது? எல்லாம் நம்பளுக்குத் தெரியாதா? (வாத்ஸல்யனைப்பார்த்து) ஏதோ வீரங்க வர்ராங்கன்னு சொன்னியே எங்கே ஒத்தரையுங்காணம்?

**மற்றொருவன் :**—அடே மந்திரின்னா மூட்டே கணக்குண்டா! மடியைப் பிடிச்சிப்பாருடா.

**வாத்ஸல்யன் :**—(தனக்குள்) ஏது, இவர்கள் எல்லாம் அறிந்துவிட்டனர் போலிருக்கிறதே! ஆ, தெய்வமே! என் கௌரவத்தைச்சொல்லித் தப்பித்துக்கொள்ளலாமென்று நினைத்தேன். அது முடியவில்லை. ஓர் பொய்சொல்லியாகிலும் தப்பித்துக்

கொள்ளலாமென்று நினைத்தேன்! அதற்கும் வழியில்லாமற் போய்விட்டதே! அடே திருடர்களே:—

எல்லோரும்:—திருடங்களா! என்ன? திருடங்களா? என்ன சொன்றாய்?

(வாத்ஸல்யனை இந்தமந்தம் தள்ளிவருத்துதல்.)

வாத்ஸல்யன்:— இல்லையில்லை; நீங்கள் வெகுயோக்கியர்கள்; நான் சொல்வதைச் சற்று கவனியுங்கள். உண்மையைச்சொல்லிவிடுகிறேன்.

ஒருவன்:—என்ன உண்மே? அடே இதுவரைக்கும் இவன் சொன்னது உண்மேயில்லே. இன்னமே சொல்லப்போறது தாண்டா நெசமான உண்மே! இருங்கடா உண்மையைச்சொல்லட்டும்;

வாத்ஸல்யன்:—உத்யகிரியில் என் தாயார் மரணவேதனைப் பட்டுக் கொண்டிருக்கிறாள். அவள் உயிர்விடுமுன் அவளைப்பார்ப்பதற்காக நான் அவசரமாகப்போகின்றேன். ஆகையால்,—

ஒருவன்:—ஐயோ பாவம்! பாவண்டா! மொதல்லே பயமுறுத்தினான்; அது பலிக்கல்லே; இப்போ அழுராண்டா. பாவம்;

வாத்ஸல்யன்:—அடே திருடர்—இல்லை, அடே மனிதர்களே, நீங்கள் என்னிடமிருக்கும் பொருளுக்காக என்னை இப்படி வதைத்தால், இதோ எடுத்துக்கொள்ளுங்கள். என்னை மாத்திரம் விட்டுவிடுங்கள். தயவு செய்யுங்கள்.

ஒருவன்:—அடேயப்பா, இவன் ஒண்ணும் நம்பர் கள்ளாணி—மொதல்லே மெறட்டினான். அப்புரம் அழுதான்: இப்போ கெஞ்சராண்டா!

ஜயபாலன்:—உன் திரவியம் எங்களுக்கு வேண்டாம். ஆனால். உனக்கு வேண்டாமென்றால் இதோ இவர்கள் எடுத்துக்

கொள்ளத் தயாராயிருக்கிறார்கள். எங்களுக்கு வேண்டியது நீதான்! பதினாயிரம் லக்ஷம் பொன் கொடுத்தாலும் உன்னை விடமாட்டோம்!

**வாத்ஸல்யன் :**—ஐயோ தெய்வமே, நானென்னசெய்வேன்! ஹே ஆபத்பாந்தவா! இச்சமயம் எனக்கு உதவி செய்யாமல் எங்கு சென்றாய்? ஹே அநாதரக்ஷகா! என்னை இரக்ஷிக்க மாட்டாயோ? ஐயோ! நான் சாம, பேத, தான, தண்டமென் பவற்றில் முதல் மூன்றையும் செய்தும் வீணாய்விட்டது. நான் ஏகாங்கியாய் வந்திருப்பதால் தண்டத்தை எப்படிப் பிர யோகிப்பேன்? (**ஜயபாலனைப் பார்த்து**) அப்பா, நீ என்னை என்ன செய்யவேண்டுமென்கிறாய்?

**ஜயபாலன் :**—என்ன செய்வதா? எங்களுடன் வந்து விடு. நீ சொல்லும் ஆபத்பாந்தவன் ஓர் சிறைச்சாலையிலடைக்கப்பட்டிருக்கிறான். உன்னையும் அவனிடம் கொண்டுபோய்ச் சேர்க்கிறோம். அங்கே நீங்களிருவரும் சாவகாசமாய்ப் பேசிக்கொண்டே நீடூழிகாலம் வாழலாம்! (**சேவகர்களைப்பார்த்து**) அடே இவனைத் தள்ளிக்கொண்டு போங்கள். ஓட யத்தனித்தால் உடனே பிடிக்கவேண்டும். போ! உஷார்!

(**வாத்ஸல்யனை எல்லோரும் தள்ளிக்கொண்டு செல்லல்**)

**காட்சி முடிகிறது.**

---

## அங்கம் II.

### களம் 3.

புஷ்பபுரம். **அரண்மனைக்கொலுமண்டபத்தின் வெளிப்புறம்.**

**காலம்—காலை.**

**கமலாஸனன் :**—(**தனக்குள்**) இதோ கொலுமண்டபம் அணுகி விட்டது. வாத்ஸல்யன் நேற்றையதினமே உதயகிரிக்குப் புறப்பட்டுச் சென்றுவிட்டான். ஆனால் நான் உதயகிரி ரஸ்தா

வில் மாறுவேடம்பூண்டு ஒளிந்திருக்கும்படி அனுப்பிய ஜய பாலனும் சேவகர்களும் அவனை வழிமறித்துச் சிறைப்படுத்தி யிருப்பார்களென்பது திண்ணம். வாத்ஸல்யனும் தனிமை யாகத்தான் போனான். வழியில் ஒளிந்திருந்தவர்களோ இரு பத்தைந்துபேர்களுக்கு மேலேயேயிருக்கும். ஆகையால் அவர்களுடைய கையில் அகப்பட்டுக்கொள்ளாமல் அவன் எவ்வாறு சென்றிருக்கமுடியும்? இருக்கட்டும். அரசர் கொலு மண்டபத்திற்கு வந்துவிட்டாராவென்பதை விசாரிப்போம். (**பாராக்காரனைப்பார்த்து**) மகாராஜா கொலுமண்டபத்திற்கு வந்து விட்டாரா?

**பாராக்காரன்** :—சற்று முன்தான் விஜயம் செய்தார்கள்.

**கமலாஸனன்** :—நீ சென்று நான் வந்திருப்பதாகத் தெரிவி.

(**பாராக்காரன் செல்லல்**)

(**தனக்குள்**) ஹே காளிதேவி! நான் இவ்விஷயத்திலெடுத்துக் கொள்ளும் முயற்சிக்குத் தக்கவாறு எல்லாம் என் எண்ணப் படியேநடந்தால், உன்கோயிலை இடித்துப் பல்லாயிரம் பொன் செலவழித்து ஓர் பெருங்கோயிலாகக் கட்டுகிறேன். ஹே! பராசக்தி* நரபலி கொடுக்கக்கூடாதென்று சந்திரகுப்தன் மூடத்தனமாய் ஓர் சட்டமேற்படுத்தி யிருந்தபோதிலும் எப்படியாவது நான் உனக்கு ஓர் யௌவனமுள்ள மனி தனைப்பலியாகக் கொடுக்கிறேன்! இதோ பாராக்காரன் வந்து விட்டானே.

**பாராக்காரன்** :—உள்ளே அழைத்து வரும்படி மகாராஜா ஆக்ஞா பித்திருக்கிறார்கள். (**கமலாஸனன் கொலுமண்டபத்தில் பிர வேசித்தல்**).

(**சந்திரகுப்தன் சிங்காதனத்தில் வீற்றிருத்தல்**)

**சந்திரகுப்தன்** :—கமலாஸனா, வருவாய். உடம்பு சௌக்கியமாய் விட்டதா? என்ன இன்றைய தினம் பொழுது விடியுமுன் அரண்மனைக்கு வந்தது? யாது விசேஷம்?

* Vide Notes.

**கமலாஸனன் :**—மன்னாதிமன்ன, தாங்கள் என்னைக்கண்டவுடன் யாது விசேஷமென வினவுவது எனக்கு மிகுந்த வியப்பையும் விசனத்தையும் தருகின்றது மகாராஜ், நமது நகரை நோக்கி ருத்திரசிம்ஹன் படையெடுத்து வரப்போகிறனென னும் செய்தி அறிவீர்களோ?

**சந்திரகுப்தன் :**—அறியாமலா நான் முந்தாநாள் சபைகூட்டினேன்?

**கமலாஸனன் :**—அறிந்துமா இவ்வாறு ஓர்விதக்கவலையுமின்றியிருக்கின்றீர்கள்! யுத்தமென்றால் என்னவிளையாட்டா? அதற்குத் தயார்செய்ய வேண்டியவை எவ்வளவிருக்கின்றன! நாம் ஒன்றையுமே கவனியாமல், பெயருக்கு ஓர் சபைகூட்டி விட்டுச் சும்மா விருந்துவிட்டால், பின்னால் கேடு விளையுமல்லவா? நான் பேசுவதை மன்னிக்கவேண்டும்.

**சந்திரகுப்தன் :**—நீ பேசுவது எனக்கு மிகுந்த ஆச்சரியத்தைத் தருகின்றது! சில தினங்களுக்கு முன் நீயும் வாத்ஸல்யனும் இவ்விஷயத்தைப்பற்றிப் பேசினீர்களாம். அச்சமயத்தில் நீ இப்பொழுது யுத்தத்திற்கு யாதொரு ஏற்பாடும் செய்ய வேண்டியதல்லை யென்றும், அப்படிச் செய்தலே பெரும் பிழையென்றும், என்னிடம் சொல்லும்படி வாத்ஸல்யனை வேண்டிக்கொண்டதாக வாத்ஸல்யனே என்னிடம் சொல்லினனே! வாத்ஸல்யனும் அதே அபிப்பிராயத்துடனிருக்கவே உங்களிஷ்டப்படியே நடக்கட்டுமென்றிருந்தேன்.——

**கமலாஸனன் :**—இதென்ன விபரீதம்! நானாவது, யுத்தத்திற்கு ஆயத்தஞ்செய்ய வேண்டாமென்று சொல்லவாவது! (முணுமுணுத்துக்கொண்டு) வாத்ஸல்யரால்தான் இந்நாடு அழியுமெனும் அச்சம் எனக்கிப்பொழுது உண்டாகிறது! "குலத்தைக் கெடுக்கவந்த கோடரிக்காம்பு" போல் இத்தேசத்தையழிப்பதற்காகவா வாத்ஸல்யர் அமைச்சனாகத் தோன்றினார்? அந்தோ—

**சந்திரகுப்தன் :**—வாத்ஸல்யனைப்பற்றி நீ ஏன் இவ்வாறு பிதற்றுகின்றாய்? உனக்கு உடம்பு இன்னும் பூராவும் சொஸ்தமாகவில்லையா?

**கமலாஸனன் :**—மன்ன, என் தேகத்தில் கொஞ்சம் பிணியிருப்பினும், என் மனது சரியான நிலைமையில் தானிருக்கிறது.

**சந்திரகுப்தன் :**—பின் ஏன் இவ்வாறு பிதற்றுகின்றாய்?

**கமலாஸனன் :**—மன்ன, நான் பிதற்றவில்லை. நான் சொல்வதைச் சற்றுக் கவனியுங்கள். முதலில் யுத்தத்திற்கு யாதொரு ஏற்பாடும் செய்யவேண்டாமென்று தங்களிடம் சொல்லும்படி வாத்ஸல்யரை நான் வேண்டவேயில்லை! நான் பிரமாணமாகச் சொல்லுகிறேன்! சில தினங்களுக்குமுன் நானும் வாத்ஸல்யரும் இவ்விஷயத்தைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தது வாஸ்தவந்தான். ஆனால் நான் அசௌக்கியமாயிருப்பதால் அந்தரங்கசபையைச் சில வாரங்கள் கழித்துக் கூட்டலாமேயென்று தங்களிடம் சொல்லும்படி அவரை வேண்டினேனேயன்றி, இப்பொழுது யாதொரு ஆயத்தமும் செய்யவேண்டாமென்று தங்களிடம் சொல்லும்படி ஒருபோதும் வேண்டவில்லை! நான் சொல்வதை நம்புங்கள். வாத்ஸல்யர் சொல்லியது சுத்தப்புரட்டு. அவ்வாறு செப்பியதில் அவருடைய நோக்கம் எனக்குத்தெரியும். மகாராஜாவுக்குத் தெரியாது.

**சந்திரகுப்தன் :**—நீ சொல்வதெல்லாம் ஆச்சரியமாயிருக்கிறதே! நோக்கமா? யாது நோக்கம்?

**கமலாஸனன் :**—ஆம், மகாராஜ், சொல்லுகிறேன். ருத்ரசிம்ஹன் இந்நகர்நோக்கிப் படையெடுத்து வரப்போகிறானெனும் வதந்தி என் காதுகளுக் கெட்டியகணமே என் மனதில் ஓர் சந்தேகம் உதித்தது. அதென்னவெனில், ஓர்கால் நம்நகரில் யாராவது இராஜத்துரோகிகளிருக்கக்கூடுமோ? அவர்கள் ருத்ரசிம்ஹனுக்கு இங்குள்ள விஷயங்களையெல்லாம் தெரிவித்து அவனுக்குச் சாதகமாகவும் நமக்குப் பாதகமாகவும் ஏதாவது ஏற்பாடுகள் செய்திருக்கவாவது அல்லது இனிச் செய்யவாவது கூடுமோவென்பதுதான்.

**சந்திரகுப்தன்** :—இந்நகரில் இராஜத்துரோகிக ளிருக்கக்கூடுமெ ன்று உனக்குச்சந்தேகம் வரக்காரணம்யாது?

**கமலாஸனன்** :—மன்ன, தங்கள் பெயரைச்சொன்னால் மற்ற அரசர்களெல்லோரும் நடுங்குவார்கள். அப்படியிருக்க, யாராவது ஓர் துரோகி நம்சேனையின் ஸ்திதியை அவனுக்குத் தெரிவித்து அவனுக்குச்சாதகமாகப் பற்பல ஏற்பாடுகளைச் செய்வதாக வாக்குக்கொடுத்திருந்தாலன்றி முன் தோல்வி யடைந்த ருத்ரசிம்ஹன் இவ்வளவு தைரியமாய்த்தங்களுடன் போர்புரியத்துணிவானு? அதென்னமோவா, அச்சமயம் எவ் வாறோ இவ்வெண்ணம் என் மனதிலுதித்தது. அதற்குக் காரணம் சொல்ல ஒருவராலும் முடியாது. ஆனால் தெய் வாதீனமாய் இச்சந்தேகம் என் மனதிலுதித்ததால் இனித் தங்கள் இராஜ்ஜியம் நிலை குலையாதென்பது திண்ணம்.

**சந்திரகுப்தன்** :—இல்லாவிட்டால், இவ்விராஜ்ஜியம் நிலைகுலைந்து விடுமோ?

**கமலாஸனன்** :—அதற்குச் சந்தேகமென்ன? அந்தோ, தாங்கள் இதுவரை வெளுத்ததெல்லாம் பால், பிரகாசித்ததெல்லாம் பொன் என்று நம்பி மோசம் போனீர்கள். இனியாகிலும் நான் சொல்வதைக் கவனிக்க வேண்டுமாய்ப் பிரார்த்திக் கிறேன். வாத்ஸல்யர் ஓர் பெரும் துரோகி! சிரித்துக் கொண்டே பிறருடைய கண்டத்தைத்துண்டிப்பதில் அவரை விட்டால் வேறெவருமகப்படார். வாஸ்தவத்தில் வாத்ஸல்யர் ஓர் குழைக்கள்ளன்! வீண் டம்பக்காரன்! பெரும் மோச க்காரன்! ஓர் கொடிய இராஜத்துரோகி——

**சந்திரகுப்தன்** :—(கோபத்துடன்)

இராகம்—சங்காபரணம்.

தாளம்—ஆதி.

பல்லவி.

அச்சமில்லாமல் ஏன் பழிக்கிறாய்?
அருமையான வாத்ஸல்யன் பெயரை.

அநுபல்லவி.

அவமே புறங்கூறுதல்—அழகோ கமலாஸனா?
அபராதமில்லாதோனை—யடுபழிக்காளாக்கினாய். (அச்ச.)

சரணம்.

அருமையானவமைச்சர்—அவனிலும்மேலோருண்டோ?
அரியாய வார்த்தைகளை—யரசனிடஞ்சொல்வதோ?
அறமோ முறையோயிது—அகம்பாவம் தானோஉன்றன்?
அப்புறமேகுவாயே நீ—அறிவிலாத்தீயனன்றோ! (அச்ச)

குணசீலனான வாத்ஸல்யனை நீ ஏன் இவ்வாறு ஓர் காரணமுமின்றித் தூற்றுகிறாய்? அவனுக்கும் உனக்கும் ஏதாவது மனஸ்தாபம் உண்டா? மற்றும், ஓரமைச்சனைப்பற்றி அரசனிடம் புறங்கூறுதல் மற்றோரமைச்சனுக் கழகாமோ? அவன் செய்திருக்கும் குற்றம் யாதென்பதைச் சொல்லாமலேயே இராஜத்துரோகி யெனும் அடாப்பழியை அவன் மேற்சாற்றுகிறாயே! இனிமேல்——

**கமலாஸனன்:**—மகாராஜ், க்ஷமித்தருளவேண்டும். கோபங் கொள்ளக்கூடாது. எனக்கும் வாத்ஸல்யருக்கும் யாதொரு மனஸ்தாபமுமில்லை. நாமிருவரும் மிகுந்த நேசம் பாராட்டுகின்றோம். ஆனால் நம் நேசத்தைக்காட்டிலும நான் மகாராஜாவின் க்ஷேமத்தையே பெரிதெனப் பாராட்டுகின்றமையால், இவ்வாறு பேச நேர்ந்தது. க்ஷமித்தருளவேண்டும். ஆயினும் நான் சொல்லவேண்டுவதைச் சொல்லிவிடுகின்றேன். பிறகு, மகாராஜாவின் இஷ்டப்படிச் செய்யலாம். "மந்திரிக்கழகு வரும்பொருளுரைத்தலே". அங்ஙனமின்றி, "யோசனை யில்லாத அமைச்சனும் உதவியில்லாத நட்பும் உலகத்திருந்து என்னபயன்?" (சற்று யோசிந்துப்பிறகு,) ஆனால், ஐயோ, வாத்ஸல்யருடைய துரோகத்தை நான் வெளியிடுவேனாயின் அது அவரை மட்டும் பாதிப்பதன்றித் தங்களுக்கு மிகவும் அருகமான மற்றொருவரையும் பாதிக்குமே என்று பார்த்தேன். ஆயினும் வேறுவழியில்லை. நான் சொல்லியே தீரவேண்டியிருக்கிறது.

**சந்திரகுப்தன்** :—நீ சொல்லவேண்டியதைச் சீக்கிரம் சொல். அதற்கென்ன பிரமாதப் பீடிகை!

**கமலாஸனன்** :—இந்நகரில் யாராவது இராஜத்துரோகிகளிருக்கக் கூடுமென்று எனக்குத் தோன்றியதால் என் ஆட்களிற் சிலரை உஜ்ஜைனிமார்க்கத்தே இருத்தி யாராவது சந்தேகிக்கக்கூடிய மனிதனே, கடிதங்கொண்டு செல்பவனே, சென்றால் அவனை நிறுத்திப்பரிசோதிக்கும் படிக்கும், அகப்படும் பொருள்களை யென்னிடம் கொடுக்கும்படிக்கும் கட்டளை யிட்டிருந்தேன். அப்படிச்செய்ததின் பலனாக இதோ இக் கடிதம் என் கையிற்சிக்கிக் கொண்டது. இதை வெகு கவனமாய் வாசித்துப்பாருங்கள். பிறகு என்மீது கோபித்துக் கொள்ளமாட்டீர்களென்பது திண்ணம். (கடிதத்தைக்கொடுத்தல்) (தனக்குள்) கருணாகரனிடம் காட்டிய கடிதத்தை யரசனிடம் கொடுக்கின்றேன். வாத்ஸல்யனுடைய கையெழுத்தை ஜயபாலன் வெகுசாமர்த்தியமாய்த்தான் போட்டிருக்கின்றான். நானும் வெகு ஜாக்கிரதையாகத்தான் கடிதத்தை எழுதியுள்ளேன். இருக்கட்டும். அரசன படித்துவிட்டு என்ன செய்கின்றானென்று பார்ப்போம். ஹே! காளிதேவி! பராசக்தி! இச்சமயத்தில் என்னைக் கைவிட்டுவிடாமல் எனக்கு அநுக்கிரகம் செய்யவேண்டும்.

**சந்திரகுப்தன்**:—(கடிதத்தைக் கவனமாய்ப்படித்தல்).

புஷ்பபுரம்.

* கு. ச. 88-வருஷ ஆவணி-மீ 4-உ.

ஸ்ரீயாவிராஜித, ராஜபூஜித ராஜமான்ய, ராஜஸ்ரீ, ராஜாதிராஜ, மாளவ சௌராஷ்டிர மகபதி, உஜ்ஜைனி சாக்கிய *சத்ரபதி, மகா-ள-ள-ஸ்ரீ ருத்ரசிம்ஹமகாராஜா அவர்களுக்கு, புஷ்பபுரத்திலிருக்கும் வாத்ஸல்யன் வெகுவணக்கமாயும் இரகசியமாயும் எழுதிக்கொண்ட லிகிதம்.

மகாராஜ், நான் தங்களுக்கு நேற்றெழுதிய லிகிதமும் அதற்கு முன்னெழுதிய லிகிதங்களும் வந்துசேர்ந்திருக்குமென்று நம்புகிறேன். நாம் இவ்வளவு இரகசியமாகக்காரியத்தை முடிக்கக்கருதியும், தாங்கள் இந்நகர்

---

* Vide Notes.

நோக்கிப்படையெடுத்து வரப்போவதாக ஓர் வதந்தி எவ்வாறோ கிளம்பி விட்டது. ஆனால் நான் இதில் சம்பந்தப்பட்டிருக்கும் விஷயம் ஒருவருக் குந்தெரியாது. எனினும் நாம் முன்னிலும் பதின்மடங்கு இரகசியமாகக்காரி யங்களை நடத்த வேண்டுமென்பது மெத்த அவசியம்.

மன்ன, நான் சந்திரகுப்தனுடைய பிரதான அமைச்சனானதால் இந் நகர் விஷயங்களை எல்லாம் உள்ளும் புறமும் நன்கறிந்தவன். ஆகையால் நான் உதவி செய்தால் தங்கள் முயற்சி வீண்போகாது. இந்நகர் அரசனும் என்னுடன் மிகுந்த நேசம் பாராட்டுகின்றான். மேலும், அவன் முகஸ்துதி யில் மிகுந்தபிரியமுள்ளவன். தன்னைப்போன்ற பலசாலிகள் இவ்வுலகிலே யேயில்லையென்றெண்ணி அவமே களிப்புடன் காலங்கழிக்கும் வீணன். ஆகையால் நான் முதலில் சந்திரகுப்தனையும், அவன் புஜபராக்கிரமத்தை யும், அவன் வீரத்தையும், அவன் சேனையையும் வெகுவாய்ப்புகழ்ந்து விட்டுப் பிறகு யுத்தத்திற்குயாதொரு ஏற்பாடும் செய்யவேண்டாமென்று சொன்னால், அவனும் என் வார்த்தைகளில் நம்பிக்கைவைத்துத்தன்சேனைக் கு இணையான சேனை இவ்வுலகிலேயே இல்லை என்னும் மூடநம்பிக்கை கொண்டு சும்மா இருந்துவிட்டுப்பின்னால் தாங்கள் படையெடுத்து வருநா ளில் விழிப்பான். மேலும், தாங்கள் படையெடுத்து வரப்போவதாகக்கிளம்பி யிருக்கும் வதந்தியே பொய்யாயிருந்தாலுமிருக்கலாமென்றும் சொல்லி வருகின்றேன். ஆகையால், தாங்கள் வெகுசுலபமாய் சந்திரகுப்தனைத் தோற்கடித்து கோட்டையைக் கைப்பற்றிக்கொள்ளலாம். ஈசன் அவ் வாறே கிருபை செய்வாராக.

சந்திரகுப்தனுடைய உதவிக்கு அவன் மாமனாரிடமிருந்து சேனை வரக் கூடுமென்று எழுதியிருக்கின்றீர்களே! அவ்விஷயத்தில் தாங்கள் கவலைப் படவேண்டியதில்லை ஏனெனில், சந்திரகுப்தனுடைய இராணி துருவதேவி உண்மையில் ஓர் இராஜகுமாரியல்லள். எனது நேசனொருவனுடைய ஏகபுதல்வி. அன்னையையும் தந்தையையுமிழந்த அநாதை. ஆனால அவள் தகப்பன் உயிர் விடுமுன் அக்குழந்தையை என்னிடம் ஒப்புவித்துச்சென் றதால், நானே அக்குழந்தையை வளர்த்து அது பெண்பருவமடைந்தபொழு து மச்சராஜனுடைய அரண்மனையில் ஓர் பணிப்பெண்ணாய் அமர்த்தினேன. இருக்க, சந்திரகுப்தன் தனக்கு ஓர் மனையாட்டியைத்தேடிவரும்படி என்னை அனுப்பியபொழுது நான் பணிப்பெண்ணான துருவதேவியையே அழைத்து வந்து அவள் ஓர் இராஜகுமாரியெனறும், ஆனால் காலக்கொடு மையால் அவள் தாய் தகப்பன்மார் நாடிழந்து எங்கேயோ வசித்துகொண் டிருக்கிறார்களென்றும் சொல்லி, அரசனுடைய மணத்தையும் முடித்துவிட் டேன்! துருவதேவியின் அழகைக்கண்டு அரசன் மயங்கிவிட்டான்.

ஆகையால், துருவதேவி வாஸ்தவத்தில் ஓர் இராஜகுமாரியல்லள்! தாங்கள் படையெடுத்து வருநாளில், துருவதேவி மூலமாய், சந்திரகுப்த னுதவிக்கு யாதொருசேனையும் வராது.

மகாராஜ், தாங்கள் படையெடுத்து வருமுன் நான் ஓர் முறை தங்கள் நகருக்கு வந்து யுத்தத்திற்குச் செய்யவேண்டிய ஏற்பாடுகளனைத்தையும் செய்துவிட்டுப் போகவேண்டுமென்று உத்திரவளித்திருந்தீர்கள். ஆனால் தாங்கள் படையெடுத்து வரப்போவதாக எவ்வாறோ ஓர் வதந்தி கிளம்பி விட்டபடியால் நான் காரணமின்றி ஊர் விட்டுச்செல்லுதல் உசிதமல்ல. ஆகையால். நான் ஒரு தந்திரம் செய்கிறேன். உதயகிரியிலிருக்கும் என் தாயார் மரண வேதனைப் பட்டுக்கொண்டிருப்பதாயும், அங்குள்ளோர் என் வரவை ஒவ்வோர் கணமும் எதிர்பார்த்துக் கொண்டிருப்பதாயும் என் மைத்துனனான விசுவசேனனிடமிருந்து ஓர் கடிதம் வரவழைக்கிறேன். அக்கடிதத்தை யரசனிடங் காட்டி உதயகிரிசெல்ல அநுமதி பெற்று, உதயகிரி போவதாக ஓர் போக்குக்காட்டிவிட்டு உஜ்ஜைனிக்கே வந்துவிடுகிறேன்! தாங்கள் தைரியத்தைக் கைவிடவேண்டாம். வீடு வாசல் ஒன்றுமற்ற அநாதையான துருவதேவியைமணந்த சந்திரகுப்தனும் வீடுவாசலின்றி அலையவேண்டியது ஙியாயந்தானே! என்னையே நம்பியிருக்கும் அரசனை நானும் சமயத்தில் கைவிட்டுவிடுவேனாயின், அவன் "அரசனை நம்பிப் புருஷனையிழந்த பெண்" ணைப்போல் விழிப்பான். ஆகையால் அதிசீக்கிரத்தில் தங்களரண்மனை வாயிலில் ஜயபேரிகை முழங்குமென் பதிலையமில்லை.

இக்கடிதத்தைப் படித்தானதும் சாம்பராக்கிவிடவும். கூடியசீக்கிரத்தில் நான் இந்நகர் அரசனாகித்தங்கள் சிற்றரசனாக வருடந்தோறும் தவறாமல் தங்களுக்குப்பத்துலக்ஷம் பொன் கப்பங்கட்டும்படியான பாக்கியம் எனக்குக் கிடைக்குமென்று நம்பி, ருத்ரசிம்ஹமன்னர் நீடூழிவாழ்க! அவர் செங்கோல் தழைத்தோங்குக! என்று எக்காலமும் பிரார்த்தித்துக் கொண்டேயிருக்கும்,

தங்கள் ஊழியன்,

புஷ்பபுரம். வாத்ஸல்யன்.

---o---

**சந்திரகுப்தன்** :—(கோபத்துடனும் ரோஷத்துடனும்) அடே வாத்ஸல்யா, உன்னை நம்பியன்றோ நான் மோசம்போனேன்! அடதுரோகி! அடசண்டாளா! உன்னை இவ்வளவு உயர்ந்த

பதவிக்குக் கொண்டுவந்ததற்கு இதுதானு நீ செய்யுங்கைம் மாறு? (கோபங்கிளம்ப,) கமலாஸனு, என்னை இரக்ஷிக்க வந்த என் உத்தம அமைச்ச, வாத்ஸல்யன் இப்பொழுது என்முன்னிருப்பின் அவனை இக்கணமே இவ்வாளால் கண்டந்துண்டமாக வெட்டி விடுவேன்! அவனைச் சித்திரவதை செய்தாலும் அவன் செய்திருக்கும் துரோகத்துக்குத்தகுந்த தண்டனை யாகாது!—— யாரடா சேவகா!

**கமலாஸனன்** :—அரசே, கோபத்தைத் தணித்தருளுங்கள். சற்று அமைதியாயிருங்கள். காரியமோ நடந்து விட்டது. இனி நடக்கவேண்டிய காரியத்தை நாம் பார்க்க வேண்டுமே யன்றி வீணுய்ப் புலம்புவதிலும் கோபங்கொள்வதிலும் பயனில்லை. வாத்ஸல்யர் உஜ்ஜைனிக்குப் புறப்பட்டுச் செல்லுமுன்னர் அவரைப்பிடித்துச் சிறையிலடைக்க வேண்டியதுதான்.

**சந்திரகுப்தன்** :—அந்தோ! அந்தப்பாவி இந்நேரம் உஜ்ஜைனிக்குப் பாதிவழி சென்றிருப்பானே, என்ன செய்வது?

**கமலாஸனன்** :—எனினும் பாதகமில்லை. வாத்ஸல்யரைப் பிடித்துச்சிறையிலடைக்கத் தங்கள் முத்திரையை வைத்து ஓர் உத்திரவுப் பத்திரிகையை யென்னிடம் கொடுங்கள். நான் சில குதிரை வீரர்களை யனுப்பி, வெகு வேகமாய் வாத்ஸல்யரைப் பின் தொடர்ந்து சென்று அவரைப் பிடித்துச் சிறை செய்யச்சொல்லுகிறேன். வாத்ஸல்யரும் ஒன்றையுமே சந்தேகியாமல் சாவகாசமாகத்தான் சென்று கொண்டிருப்பார். ஆகையால் நம் குதிரை வீரர்கள் அவரைத் தொடர்ந்து சென்று பிடித்து விடுவார்களென்பது திண்ணம்.

**சந்திரகுப்தன்** :—(ஓர் உத்திரவு பத்திரிகையை யெழுதித்தன் முத்திரையையும் வைத்துக்கமலாஸனனிடம்கொடுத்து,) கமலாஸனு, சீக்கிரம் செல்வாய்! அந்தத்துரோகியைச் சிறையிலடைப்பிக்கவேண்டிய பிரயத்தனங்களொன்றையேனும் செய்யாமலிராதே! சீக்கிரம் செல்வாய்!

**கமலாஸனன் :—** நமஸ்தே, மகாராஜ்: நான் சென்று வருகின்றேன்.

**சந்திரகுப்தன் :—** சரி, சென்றுவருவாய். அவனைச் சிறைசெய்த பின் உடனே இங்கேவா. நாம் எல்லோருமாக யோசித்து யுத்தத்திற்காக வேண்டிய ஏற்பாடுகளனைத்தையும் செய்யலாம். எல்லாவற்றிற்கும் நீ சீக்கிரம் செல்.

**கமலாஸனன் :—** அப்படியே செய்கின்றேன். நான் சென்று வருகின்றேன் (**தனக்குள்**) இனி எனக்கென்ன குறை? வாத்ஸல்யனை யரசனுடைய கோபாக்கினிக்கு இரையாக்கிவிட்டேன். நான் அரசனுடைய ஆப்த நண்பனுமானேன். வாத்ஸல்யன் தீர்ந்தான்! ஹூம்! என்னிடமா இந்த வாத்ஸல்யப்பயல் வால் காட்டுவது? நறுக்கிவிட்டேன் அந்தவாலை! இருக்கட்டும். இனிமேல் என்ன அவசரம்? வாத்ஸல்யனைப்பிடிக்கக் குதிரை வீரர்களெதற்கு? அவன் இந்நேரம் கொலைகளப்பாறைக்கப்பாலிருக்கும் குகையிலன்றோ கைதியாயிருப்பான். ஆனால் துருவதேவியை யரசன் என்ன செய்யப்போகின்றான்? எல்லாவற்றிற்கும் வெளியே செல்வதைப்போல் பாவனை செய்துவிட்டு இக்கதவின் பின்னொளிந்திருந்து அரசன் என்ன செய்கிறானென்பதைப்பார்ப்போம். (**வெளியேசெல்வதைப்போல் பாவனைசெய்துவிட்டுக் கொலுமண்டபத்தின் கதவின் பின்னால் ஒளிந்துகொள்ளல்.**)

**சந்திரகுப்தன் :—** யாரடா சேவகா! (**சேவகன் பிரவேசித்தல்**)

**சேவகன் :—** மகாராஜ்.

**சந்திரகுப்தன்:—** நீ உடனே மகாராணியின் அந்தப்புரத்திற்குச் சென்று அவளை இங்கே அழைத்துக் கொண்டுவா.........
.........என்னடா விழிக்கிறாய்?

**சேவகன் :—** மகாராணியார்———— அந்த ——ப்—— புரத்தை விட்டு ——— ——— வர——மாட்டார்களே!

சந்திரகுப்தன் :—(கோபத்துடன்) நாம் வரச்சொன்னதாகச்சொல் வராவிட்டால், பலாத்காரமாய்ப் பிடித்திழுத்துக்கொண்டுவா!

(சேவகன் செல்லல்)

(தனக்குள்.) ஐயோ "ஆத்திரக்காரனுக்குப்புத்திமட்டு" என்பது மெய்யாயிற்றே. நான் ஏன் மறுமணஞ் செய்துகொள்ளச்சம்மதித்தேன்? அதிலும் வாத்ஸல்யனுடைய வார்த்தைகளில் நம்பிக்கைவைத்து, துருவதேவி யாரென்பதைக் கூட் தீரவிசாரியாமல் மணஞ்செய்துகொண்டுவிட்டேனே? ஆஹா! நான்தேடி மறுமணஞ்செய்துகொண்டபெண் ஓர் இழிகுலத்தில் தோன்றியவளென்று குடிகள் அறிவரேல் அது எனக்கு எவ்வளவு அவமானம்! குடிகளுக்கும் இவ்விஷயம் தெரியாமலா யிருக்கும்? எவ்வாறோ இவ்விஷயத்தைப்பற்றி வதந்தி கிளம்பி விட்டதே! வதந்தி பொய்யாயிருக்குமென்றல்லவோ எண்ணினேன்! துருவதேவியினழகைக் கண்டல்லவோ மயங்கிவிட்டேன்! அடடா, எவ்விடத்தில் அழகுமிகுந்திருக்கிறதோ அவ்விடத்தில் மோசமும், எவ்விடத்தில் சிநேகம் மிகுந்திருக்கிறதோ அவ்விடத்தில் சூதும் துரோகமும் நிறைந்திருப்பது இக்கலிகாலத்தினியல்போ? வாத்ஸல்யனை எனது ஆப்த நண்பனென்றெண்ணினேன். ஆனால் இப்பொழுது அவனே என் ஜன்மசத்துருவாகக் காணப்படுகிறான். துருவதேவி ஓர் இராஜ கன்னிகையென்றெண்ணி எனது இராணியாக்கினேன். ஆனால் அவளையும் இப்பொழுது நம்பக் கூடவில்லை. இப்பொழுதோ என் அவமானம் என்னோடு ஒழியாமல் எனக்குப்பின்னும் நீடித்து நிற்கும்போலிருக்கிறதே! துருவதேவி!——அவளுடைய பெயரைச்சொல்லவும் என் நா கூசுகின்றது!——அவள் இப்பொழுது கர்ப்பவதியாகவன்றோவிருக்கின்றாள்! இந்தச்சங்கடத்திற்கு என்ன

செய்வது? அடடா! பெண்டிரை நம்பலாகாதென்பதை இப்பொழுதன்றோ அறிந்தேன்.

ஆலகால விஷத்தையும் நம்பலாம்—ஆற்றையும்
பெருங்காற்றையும் நம்பலாம்;
சோலமாமத யானையையும் நம்பலாம்—கொல்லும்
வேங்கைப்புலியையும் நம்பலாம்;
காலனுர் விடுதூதரையும் நம்பலாம்—கள்வர்,
வேடர், மறவரையும் நம்பலாம்; இந்தச்
சேலைகட்டிய மாதரை நம்பினல்,—
தெருவில் நின்றுதியங்கித்தவிப்பரே."

ஏன் சேவகன் இன்னும் வரவில்லை? சரி, இருக்கட்டும். நான் துருவதேவியை ஏன் இங்கழைத்தேன்? அவள் முகத்தில் விழிப்பது என் கண்களிற்கொள்ளிக்கட்டை வைத்துச் சுடுவது போன்றிருக்கும். அவள் குரலைக்கேட்பது என் காதுகளில் நாராசம் காய்த்து ஊற்றுவது போன்றிருக்கும். அவளுக்கும் எனக்கும் இனி யாது சம்மந்தமிருக்கிறது? நான் எதற்காக அவளுடன் உரையாடவேண்டும்? யாரடா சேவகா—

மற்ருேர்சேவகன் :—மகாராஜ்,

சந்திரகுப்தன் :—மஹாராணியை இங்கழைத்துவரும்படி ஆஞ்ஞாப்பினேம். ஆனல் அவள் இப்பொழுது இங்குவரவேண்டாமென்று சொல்லிவிட்டு நீ சென்று ஜயிலதிகாரியையழைத்துவா.

(சேவகன் செல்லல்)

(சந்திரகுப்தன் விசனமாய் நாற்காலியிற் சாய்தல்: ஜயிலதிகாரி பிரவேசித்தல்).

ஜெயிலதிகாரி :—மகாராஜ், தாங்கள் கட்டளையிட்டவேலையைத் தலையால் செய்யக் காத்திருக்கிறேன்.

**சந்திரகுப்தன்** :—ஏ ஜெயிலதிகாரி, நாம் சொல்வதைக் கவன மாய்க்கேட்டு அவ்வாறே செய்வாய். அரசாக்கினையை மீறி நடந்தால் யாது சிக்ஷை யென்பதை யறிவாயோ?

**ஜெயிலதிகாரி** :—மகாராஜாவின் உத்திரவை எதிர்பார்க்கின்றேன்.

**சந்திரகுப்தன்** :—நீ சென்று நமது இராணி துருவதேவியைத் தனிமையாக ஓர் சிறைச்சாலையிலடைத்துவிட்டு நம்மிடம் தெரிவி. அவளுக்கு வேளாவேளை தவறாமல் உணவு முதலி யன அளிக்கவேண்டும். இராணி தனிமையாய்ச் செல்ல இஷ்டப்படாவிட்டால் தன் தோழிகளில் ஒருத்தியை மாத் திரம் தன்னுடன சிறைச்சாலைக்கு அழைத்துச் செல்லலாம். மறு உத்திரவு வரை இராணி சிறைச்சாலையிலேயேயிருக்க வேண்டியதுதான். தன்னை ஏன் அரசர் சிறையிலடைக்க உத்திரவு அளித்தார் என்று கேட்டால், அது அரசருடைய சித்தமென்று சொல்லிவிடு.

**ஜயிலதிகாரி** :—மகாராஜ், அவ்வாறே செய்கிறேன்.

**சந்திரகுப்தன்** :—சரி, நீ செல்வாய். (**ஜெயிலதிகாரி செல்லல்**) (தனக்குள்) எனக்கேதோ பைத்தியம் பிடித்திருக்கிறது போ லிருக்கிறதே! என் புத்திகலங்குகிறது. உடனே என் படுக் கையறைச்சென்று சற்றுச் சயனித்துக்கொள்ளுகிறேன்.

(**சந்திரகுப்தன் செல்லல்.**)

**கமலாஸனன்** :—(**கதவின் பின்னிருந்து வந்து**) பேஷ், இனி எனக் கென்ன குறை? என் எண்ணம் கை கூடி விட்டது! நான் சரியான சூழ்ச்சிசெய்தேன்! பலே கமலாஸனா! உன் சாமர்த் தியமே சாமர்த்தியம்! உடனே சென்று ஜயபாலன், கருணா கரன், முதலியவர்களுக்கு விருந்தளிக்கின்றேன்.

(**செல்லல்**)

**காட்சி முடிகிறது.**

# அங்கம் II.

## களம்—4 வாஸந்திகையின் அந்தப்புரம்

காலம்—காலை.

---

**வாஸந்திகை** :—(தனக்குள்) ஆகா, நான் இவ்வளவு துர்ப்பாக்கியையா! பிறந்தவுடன் என் அன்னையை இழந்தேன். மரித்த என் அன்னையினும் மேலாக என்னை வெகு அன்புடனும் அபிமானத்துடனும் நடத்திவந்த என் சிற்றன்னை துருவதேவியும் சிறையிலிருப்பது என் துரதிருஷ்டமல்லவா? அவள் இப்பொழுது இங்கிருந்தாலும் எனக்கோர் ஆதரவாயிருக்கும். இப்பொழுது அவளுமின்றி என் கதி அதோகதியாய் விட்டதே.—— ——

(சுலக்ஷணை புஷ்பப்பந்தை எடுத்துக்கொண்டு பிரவேசித்தல்)

**சுலக்ஷணை** :—என்ன வாஸந்திகா, ஏன் இப்படிச் சதாகாலமும் ஏதாவது நினைத்துக்கொண்டே வருந்துகிறாய்? இன்று ஏதோ புஸ்தகத்தை வாசிப்பதாகச் சொன்னாயே. இது தான் வாசிப்பதோ?

**வாஸந்திகை** :—மனது சந்தோஷமாக இருந்தாலல்லவோ புஸ்தகம் வாசிக்க மனம் வரும்?

**சுலக்ஷணை** :—இப்பொழுது உன் மனது சந்தோஷமாயில்லாதிருக்க என்ன நேர்ந்தது?

**வாஸந்திகை** :—என்ன நேர்ந்ததா? உனக்கென்ன? எல்லாம் பேசுவாயடி. ஒரு ஸ்திரீயால் தன் மனதுக்கிசைந்த கணவனையடைய முடியாவிட்டால் அதைவிட அவளுக்கென்ன கஷ்டம் உலகத்திலுண்டு? காதலென்பதே இன்னதென்று உனக்குத் தெரியாது போலிருக்கிறது. அதுதான் இப்படிப் பேசுகிறாய்.

**சுலக்ஷணை** :—ஏனடி, வாத்ஸல்யர் தான் இராஜத்துரோகியென்று அரசர் சந்தேகித்து அவரைச்சிறைப்படுத்தி விட்டாராமே. இனிமேல் அவர் உனக்காகத்தேடி வந்திருக்கும் வரன் அரசருக்குப்பிடிக்குமா? ஆகையால் நீ இந்த இளவரசனையே மணவாளனாகக் கொள்ளவேண்டுமென்று உன் தந்தை உன்னைக்கட்டாயப்படுத்துவாரா?

**வாஸந்திகை** :—அவ்விஷயத்தில் எனக்கு சந்தோஷந்தானடி. ஆனால் தனக்குத்துரோகம் நினைத்த அமைச்சனுடைய புதல்வரை நான் காதலிக்கின்றேன் என்று அரசர் அறிந்தால், நம்முடைய மணத்துக்கு எவ்வாறு அநுமதிகொடுப்பார்? என் தந்தை வாத்ஸல்யருடன் சிநேகமாயிருந்தாலும், புருஷோத்தமரிடம் எனக்கிருக்கும் காதலை வெளிப்படுத்தினால், ஒருக்கால் எங்களுடைய கலியாணத்துக்குச் சம்மதிக்கமாட்டாராவெனும் நம்பிக்கையுடன் உயிர் வாழ்ந்தேன். இப்பொழுது அந்நம்பிக்கையும் பாழாய் விட்டதே

**சுலக்ஷணை** :—எல்லாம் ஒரே நாளில் கை கூடிவந்துவிடுமா? கொஞ்சம் பொறுத்துத் தானம்மா எல்லாம் ஆக வேண்டும். "பொறுத்தார் எப்பொழுதும் பூமியாள்வார்."

**வாஸந்திகை** :—நீ பேசுவதில் வெகு சாமர்த்தியசாலிதானடி! வாத்ஸல்யரும் என் தந்தையும் சிநேகமாயிருந்த பொழுதாவது என் காதலர் தாராளமாய் அரண்மனைக்கு வருவதும், நாமிருவரும் இரகசியமாக உய்யானவனத்தில் சந்திப்பதும் வழக்கமாயிருந்தது. இப்பொழுது அதுவுமில்லாமற் போய்விட்டதே! வாத்ஸல்யரைச் சிறைசெய்தது முதல் என் தந்தை அவரையும் அவரைச் சேர்ந்த எல்லோரையும் வெறுப்பதால் என் காதலர் இப்பொழுது அரண்மனை யண்டையிற்கூட அணுகுவதில்லை பார்த்தாயா? அவரை நான் எப்பொழுது மறுபடியும்காண்பேனோ. அவருடன் உரையாடும் பாக்கியத்தை எப்பொழுது அடைவேனோ?

**சுலக்ஷணை** :—எல்லாம் சீக்கிரத்திற்காணுவாய். இப்பொழுது எவ்வளவு நாழிகையாய் விட்டது பார். உன் தந்தை உன்னை யழைத்தால் நீ இவ்வாறு மனங்கலங்கி கண்ணீர் சொரிந்து கொண்டு புஷ்பங்கூடத்தரித்துக் கொள்ளாமலிருப்பதைப் பார்த்து என்ன நினைப்பார்! ஆகையால் இப்புஷ்பப் பந்தை அவிழ்த்துக் கூந்தலிற்சூட்டிக்கொள்.

**வாஸந்திகை** :—(புஷ்பப்பந்தை அவிழ்த்துக்கொண்டே) என்ன இன்றையதினம் இப்படி புஷ்பத்தைத்தொடுத்திருக்கிறாய்?

**சுலக்ஷணை** :—ஏன், நன்றாயில்லையா?

**வாஸந்திகை** :—ஒன்றும் நன்றாயில்லையடி. அவிழ்க்கும் பொழுதே புஷ்பங்களெல்லாம் ஒவ்வொன்றாக உதிர்கின்றனவே.

**சுலக்ஷணை** :—(புன்னகையுடன்) இன்றையதினம் நான் தொடுக்கவில்லையம்மா. உன் உய்யான வனத்தில் வேலைசெய்ய புதிதாக யாரோ ஒரு தோட்டக்காரனை நியமித்திருக்கிறார்கள். அவன் இன்று புஷ்பந்தொடுக்க வேண்டுமென்று மிகவும் ஆசைப்பட்டான். ஆகையால் அவனையே தொடுக்கச்சொன்னேன். அவன் தான் இப்படித் தொடுத்திருக்கிறான்.

**வாஸந்திகை** :—(புஷ்பப்பந்தைப் பிரித்துக்கொண்டே) புதிதாக நியமிக்கப்பட்டவன் இவ்வளவு புத்திசாலியாகவா இருக்க வேண்டும்! **(புஷ்பப்பந்திற்குள் ஓர் கடிதம்வைத்துச் சுருட்டி யிருக்கக்கண்டு பிரமித்து)** ஆ, இதிலென்ன ஓர் லிகிதமிருக்கின்றது? ஆ, மேல்விலாஸமும் என்னுடையதாகவன்றோ யிருக்கின்றது! இது இப் பந்திற்குள் எவ்வாறு வந்தது? (மேல்விலாஸத்தை உற்று நோக்கி) ஆகா, கையெழுத்து என்னருமைக் காதலருடையதாகவன்றோ தோன்றுகின்றது. **(கடிதத்தைப் பரபரப்புடன் வாசித்தல்)**

"புஷ்பபுரம்

கு. ச. 88-ஆ புரட்டாசி-மீ 10உ

**கண்மணி வாஸந்திகா!**

இக் கடிதத்தைக் கண்டு பிரமிக்காதே. உன்னைக் காணவேண்டுமெனும் அவாவின்மிகுதியால் நான் தோட்டக்காரனைப்போல் வேடம்பூண்டு

உன் உய்யானவனத்தில் வேலைசெய்துகொண்டிருக்கின்றேன். நான் உதய கிரி சென்றிருப்பதாக என் வீட்டில் எல்லோரும் நினைத்துக்கொண் டிருக்கி ருர்கள். ஆகையால், கண்மணி, உடனேவந்து என்னைச் சந்திப்பாய்.

உன் பிரியமுள்ள

புருஷோத்தமன் "

சுலக்ஷ்ணை :— புதிதாக நியமிக்கப்பட்டவன் இவ்வளவு புத்தி சாலியாகவா யிருக்கவேண்டும்! என்ன வாஸந்திகா, புஷ்பந்தொடுப்பதில் இவன் எவ்வளவு அசடனுய் இருக்கிருன் பார்த்தாயா ?

வாஸந்திகை :—சுலக்ஷணை, என்ன என் பாக்கியம்! என் காதலரை இனி நான் எப்பொழுது வேண்டுமென்ருலும் சந்திக்கலா மல்லவா? ஆனல், இவ்வளவு காலம் ஓர் பிரபுவின் புத்திரனுக வெகு வைபவத்துடனும் சுகத்துடனும் வாழ்ந்த என் காதலர் இனித் தோட்டக்காரனுக வெயிலிலும், குளிரிலும், மழையிலும், பனியிலும் உழைப்பது எவ்வாறு சாத்தியம்? அவருடைய தேகசௌக்கியத்திற்கு ஏதாவது கெடுதல் வந்தால் என்ன செய்வது? இருக்கட்டும். உய்யான வனத்திற்குப் போவோம் வாடி. நான் அவரை உடனே சந்தித்து உரையாடவேண்டும்.

சுலக்ஷ்ணை :—அவருக்குப் புஷ்பங்கூடத் தொடுக்கத் தெரியவில்லையே! என்ன புத்தி!

வாஸந்திகை :—என்னைக்கேலி செய்வது தானடி உனக்குவேலை. வாடி செல்லலாம். அவரைக் காணலாமெனும் சந்தோஷத்தால் என் ஹிருதயம் படபடவெனப் பதைக்கின்றது. நெஞ்சே பதருதே.

(இருவரும் செல்லல்)

காட்சி முடிகிறது.

## அங்கம் II

## களம்—5 புஷ்பபுரம் ஓர் சிறைச்சாலை

காலம்—காலை.

துருவதேவி புலம்புதல்.

இராகம்—நீலாம்புரி.

தாளம்—ஆதி.

கண்ணிகள்.

துருவதேவி :—1. *அவனியில் யாரேனும்—அநியாயம் செய்வாரானல்*
*அரசரிடஞ் சொன்னல்—அநுகூலமாகலாம்!*

2. *அரசரே இந்தவிதம்—அநியாயஞ் செய்வாரானல்*
*யாரிடஞ் சொல்வது—எவ்வித முய்வது?*

3. *மன்னவரை மணந்தும்—மணவாளனைப் பிரிந்து*
*மங்கை என்மனம்நொந்து—மிக வாட,*

4. *குற்றவாளியைப் போலச்—சுற்றமெல்லா மிகழ*
*கொற்றவரு மென்றனைச்—சிறையிலடைத்திட்டார்*
*(அவனியில்)*

தோழி, உலகத்தில் மனிதர்கள் யாரேனும் நமக்குத்தீங்கு புரிவரேல், அதைப்பற்றி அரசரிடம் முறையிட்டுத்தீங்கிழைப்பவனைத் தண்டித்து நாமும் அத்தீங்கினின்றும் தப்பித்துக் கொள்ளலாம். ஆனல் காரணமின்றி அரசரே அநியாயமாய்த் தீங்கிழைத்தால் பிறகு யாரிடம் முறையிடுவது? அந்தோ! நான் இதுவரை எனது அந்தப்புரத்தில் இந்நகர் மன்னருடைய மனைவியாக விளங்கினேன். இப்பொழுதோ என் பொலிவிழந்து, பெயர்கெட்டுக் குற்றஞ்செய்தவனைப் போல் இச்சிறைச் சாலையிலடைக்கப்பட்டு வருந்தவேண்டுமென்று நான்முகன் என் தலையிலெழுதி விட்டானே. ஓர் சூதுமறியாது "காதலொடு கற்புடைய மங்கையர் தமக்கெலாம் கணவனே மிக்கதெய்வ" மென்பதையுணர்ந்து, என் பர்த்தாவையே என் தெய்வமாக எண்ணி அவருக்குப் பணிவிடை செய்து வந்த நானே குற்றவாளி?

**லீலாவதி** :— மகாராணி, அழுதாற்பயனென்ன? நொந்தாற்பயனென்ன? ஆவதொன்றுமில்லை. எல்லாம் ஈசன் நம் தலையிலெழுதியவண்ணந்தான் நடக்கும். "ஐங்காதமோடினும் தன் வினைகள் தன்னோடு அடையாமல் நீங்கிவிடுமோ?". "யாரிடஞ் சென்றாலும் வெகு தொலைகள் சுற்றினும் அமைத்தபடியன்றிவருமோ?" ஆகையால், மனதைத் திடம் பண்ணிக்கொள்ளுங்கள். குற்றமற்றோர் வருந்துதலைக்காண கடவுள் பொறுக்கமாட்டார். மேலும், அரசர்களுடைய மனமே குரங்கின் குணத்திற்குச் சமானமாகச் சொல்லுவார்கள். இப்பொழுது ஓர் காரியஞ் செய்வதும் சற்றுப் பின் முற்றும் மாறாகச்செய்வதும் அரசர்களது இயல்பு. மேலும், மானிடராய்ப்பிறந்தோர் சுகமின்றிக் கஷ்டமேயநுபவிப்பதும், கஷ்டமின்றிச் சுகமேயநுபவிப்பதும் இவ்வுலகில் இயலாததாகும். உதாரணமாக, தங்கள் மாதாவும் பிதாவும் ஓர் காலத்தில் ஓர் இராஜ்ஜியத்தை யாண்டவர்கள்தான் ஆனால் அவர்களே தற்காலத்தில் தங்கள் நாட்டையிழந்து வருந்தவில்லையா? அவ்விதமே, ஓர் கீழ்க்குடியிற் பிறந்து, தாழ்ந்த தொழில்களைச் செய்துகொண்டு, வறுமையாலும் பிணியாலும் ஆற்றொணாத் துயரிலாழ்ந்து வருந்துபவனும், சிற்சில சமயங்களிற் சுகத்துடனும் சந்தோஷத்துடனும் காலங்கழிக்கவும் பிரமேயம் ஏற்படுகின்றதல்லவா? ஆகையால், இன்று வருந்துவோர் நாளைச் சுகமநுபவிப்பதும், இன்று சுகமநுபவிப்போர் நாளை வருந்துவதும், இவ்வுலகில் சகஜந்தான். தாங்கள் தற்காலத்தில் கஷ்டப்பட்டாலும் தங்களுக்கு வெகுசீக்கிரத்தில் நற்காலம் சம்பவிக்குமென்பதிலையமில்லை. ஆகையால் மனதைத் திடம்பண்ணிக்கொண்டு அமைதியாயிருங்கள்.

**துருவதேவி** :— அடி லீலாவதி, நான் இவ்வளவு நாட்களாய்ச் சகல சம்பத்தோடிருந்துவிட்டு இப்பொழுது என் காவற்காரர்கள் கொண்டுவரும் உணவையுட்கொண்டு எவ்வாறு உய்வேன்? ஆகா, ஓரரசனுடைய வயிற்றிற் பிறந்து ஓரரசனையும் மணஞ் செய்துகொண்டு உயர்ந்த பதவியிலிருப்

பதைக்காட்டிலும், அழகும் ஆபரணமும் செல்வமும் சிறப்பு மற்ற ஓர் கீழ்க்குடிப்பெண்ணைத் தோற்றுதல் நலமெனத் தோன்றுகின்றதே! இவ்வுலகில் துன்பம்வரின் ஒன்றாய் வராமல் அடுக்கடுக்காய் வருமென்று செப்பியவர்கள் தீர ஆலோசியாமலா செப்பியிருக்கின்றார்கள்? என் தந்தையும் தாயும் எவ்விடத்திலிருக்கின்றார்களோ அறியேன். இந்நகர் இராணியாகிச் சகல சம்பத்தோடிருந்த எனக்கும் கடைசி யாக இக்கதி சம்பவித்துவிட்டது. இவ்வித அவமானம் எனக்குண்டாகியபிறகு நான் உயிர் வைத்துக்கொண்டிருத்தல் வெகு கேவலமானது. ஓர்கால் தற்கொலை செய்துகொண்டு உயிர் துறப்போமெனினும், ஐயோ, பின்னால் பேயாய்ப்பிற ந்து இம்மையையும் மறுமையையுமிழந்து துன்பத்திலுழல வேண்டுமாமே! ஆனால் இனி உயிர் வைத்துக்கொண்டிருந் தால் நான் இந்நகரத்தார்களுடைய முகத்தில் எவ்வாறு விழிப்பேன்?

**லீலாவதி :—** அம்மணி, அம்மணி, தாங்கள் இவ்வாறு வருந்தி வருந்திப் புலம்புதல் பேதமை. தாங்கள் - பாவம் ஓர் நாளா யினும் கண்ணீர் சொரிந்தறியாதவர்கள். இப்பொழுது இவ் வாறு எண்ணாத எண்ணங்களையெல்லாம் எண்ணி எண்ணித் தங்கள் மனதைப் புண்ணாக்கிக்கொண்டால், அது தங்கள் தேகசௌக்கியத்திற்குக் கெடுதலானது. அம்மணி, தாங் கள் ஏன் ஓர்விதமாகச் சுற்றிமுற்றிப் பார்க்கிறீர்கள்?

**துருவதேவி :—** அடி தோழி, நான் என்ன செய்வேன்? என் நா உலர்ந்துவிட்டது. என் கண்கள், சுழலுகின்றன. எனக்கு ஏதோ மயக்கம் வருவதுபோலிருக்கிறதே!

இராகம்—நாட்டைக்குறிஞ்சி.

தாளம்—சாப்பு.

1. கண்ணுமிருண்டதையோ—கருத்து மழிந்ததையோ
   கைகாலு மோய்ந்ததையோ—என்நாதா,
2. எண்ணம் குலைந்ததையோ—என்றுநான் காண்பேன் உன்றன்
   எழில்தரும் முகந்தன்னை—என் நாதா—

(Adapted from Rama Natakam.)

அடி தோழி, எனக்கு மயக்கம் வருவதுபோலிருக்கிறதே! இவ்வுலகமே சுற்றுவதைப்போல் தோன்றுகின்றதே! எனக்கு — ..(மூர்ச்சித்தல்)

லீலவதி:— ஐயோ! அம்மணி! தாயே! நானிப்பொழுது என்ன செய்வேன்? ஐயோ! மகாராணி மூர்ச்சித்துவிட்டாளே! இங்கு ஒருவருமில்லையே! ஓர் கஷ்டமுமின்றி வளர்ந்த என்னருமைக் கண்மணி, தங்களுக்கு இக்கதி சம்பவிக்கலாமோ? ஹே, ஜகதீசா! உனக்குக் கண்கள் கெட்டுவிட்டனவா? மகாராணி ஒருக்கால் உயிர் துறந்துவிட்டால் பேதைப் பெண்ணாகிய நான் என்ன செய்வேன்? ஆ! இந்நகர்மன்னன் ஓர்கொடுங்கோல் மன்னனாயினனே! கர்ப்பவதியாயிருக்கும் என்னருமை மகாராணியைச் சிறையிலடைத்த அவன் கொடுமையை நானென்னென்று சொல்வேன். ஆகா! இவ்விடத்தில் கொஞ்சம் தண்ணீரிருப்பினும் துருவதேவியின் முகத்தில் தெளித்து அவள் மூர்ச்சையைத் தெளிவிக்கலாம். நான் வெளியே சென்றுவருவதென்றால் காவற்காரர்கள் என்னை விடுவார்களா? ஆ! இதோ இக் கைக்குட்டையையாகிலும் நனைத்துக்கொண்டு வரும்படி காவற்காரர்களுடைய கால்களில் விழுந்தாயினும் வேண்டிக்கொள்ளுகின்றேன். (சென்று ஓர் நனைந்த கைக்குட்டையை எடுத்துக்கொண்டு துருவதேவியின் முகத்தில் பிழிந்துகொண்டே) தாயே, தங்களுக்கு இக்கஷ்டம் சம்பவிக்கலாமோ? அம்மணி தைரியமாய் எல்லாவற்றையும் பொறுத்துக்கொண்டிருப்பீர்களென்றல்லவோ எண்ணியிருந்தேன்! அந்தோ, மல்லிகைப் புஷ்பத்தினும் மெல்லிய தன்மையுடைத்தாய என் எஜமானி, எவ்வாறு இக் கொடுமைகளைப் பொறுப்பாய்? ஆ, இப்பொழுது கொஞ்சம் பெருமூச்சு விடுவதுபோல் தோன்றுகின்றது! அப்பா! இப்பொழுது சற்றே அசைகிறாள்! அப்பா! கொஞ்சங்கொஞ்சமாக இப்பொழுதுதான் ஸ்மரணை வருகிறது. — அம்மணி! அம்மணி!—

துருவதேவி:—(மெதுவாக எழுந்து உட்கார்ந்து) தோழி, என்னால் பேசவும் முடியவில்லை. நானென்ன மூர்ச்சித்து விட்டேனா?

லீலாவதி :— அம்மணி, தாங்கள் ஒன்றக்கும் பயப்படவேண்டாம். அமைதியான மனதுடன் கடவுளைத்தியானியுங்கள். தங்கள் மனதிற்குச் சமாதானமுண்டாகும். அம்மணி, என்னுடன் முன்போல் சந்தோஷமாய் ஓர் வார்த்தையேனும் உரையாட மாட்டீர்களா?

துருவதேவி :— லீலாவதி, நான் என்ன செய்வேன்? என் கணவர் எனக்கிழைத்திருக்கும் தீங்கை நினைத்துக்கொண்டாலும் என் மனங்கலங்குகின்றது ஐயோ, நான் யாதுகுற்றஞ்செய்தேனென்பதை நானே அறியக்கூடவில்லையே! இச்சமயத்திலெனக்கு யார் துணைவரிருக்கின்றார்கள்? ஒருவருமில்லையே!

லீலாவதி :— அம்மணி, ஒருவருமில்லாமற் போகவில்லை. தங்களுக்கு உதவுவிரிய ஓர் பெருந்துணைவன் எக்காலமும் தங்கள் பக்கலேயிருக்கின்றான். அவனை நம்பினோரை அவன் கைவிடுவதில்லை. ஆகையால் கடவுளைத் தியானியுங்கள். பிணியால் துயருறுபவர்களுக்கும், வறுமையால் வருந்துவோர்களுக்கும் கவலையால் கலங்குவோர்களுக்கும், அநாதையாய் அலைபவர்களுக்கும், பிறர் கொடுமையால் பரிதவிப்போர்களுக்கும் உண்மையான சிநேகிதன் கடவுளே. அவனுடைய நாமமே எவ்விதக்கஷ்டத்தையும், வருத்தத்தையும், பிணியையும் போக்கக்கூடியது. ஆகையால் தாங்கள் தெய்வத்தினிடத்தில் தங்கள் குறைகளைச் சொல்லிமுறையிடவேண்டும்.

துருவதேவி :— ஆ! லீலா, நீயாகிலும் என்னோடிருக்க என் கணவர் அநுமதி கொடுத்தது என் அதிர்ஷ்டமே. நீ சொல்லும் வார்த்தைகளினின்றே எனக்கு ஒருவிதமான மனவமைதியும், நம்பிக்கையும், சமாதானமுமுண்டாகின்றது. ஆகையால் நீ சொல்லியவாறே நான் கடவுளைத்தியானிக்கிறேன்.

## துதித்தல்.

"ஒருவனே போற்றி யொப்பிலப்பனே போற்றிவானோர்
குருவனே போற்றி யெங்கள் கோமளக்கொழுந்து போற்றி
வருகவென் றென்னை நின்பால் வாங்கிடவேண்டும் போற்றி
தருசநின்பாதம் போற்றி தமியனேன் றனிமை தீர்த்தே'.'

*தீர்ந்தவன்பாய வன்பர்க்கவரினு மன்ப போற்றி*
*பேர்ந்துமென் பொய்ம்மை யாட்கொண்டருளிடும் பெருமைபோற்றி*
*வார்த்தநஞ்சயின்று வானோர்க் கமுதமீவள்ளல் போற்றி*
*யார்ந்த நின்பாத நாயேற்கருளிடவேண்டும் போற்றி!*

(திருவாசகம்.)

காட்சி முடிகிறது.

---

## அங்கம் III.

## களம் 1.

## புஷ்பபுரம்—அரண்மனையில் ஓர் அறை.

*காலம்—முற்பகல்*

(சந்திரகுப்தன் ஏகாந்தமாயிருத்தல்)

**சந்திரகுப்தன்** :—*இராகம்—ஸஹானா—தாளம் சாப்பு.*

பல்லவி.

*அவனிதனிற் பிறந்தேனே—புவனேந்திரனாய்*
*அவமானங்கள் பொறுப்பேனோ—அவமேயிந்த*

அநுபல்லவி.

*பாணிக்கிரகணம் செய்தேன்—இராணியென்று மழைத்தேன்*
*பேணினேன் பேதைநின்மேல்—வீணில் மயக்கங்கொண்டேன்*
*(அவனி)*

சரணம்.

*அந்தரங்க வாத்ஸல்யன்—சிந்தனையின்றி இந்தச்*
*சூழ்ச்சிகள் செய்யலாமோ—தன்னைமறந்து;*
*சந்தேகமின்றியே நான்—அந்தக்கொடுந்துரோகியின்*
*பந்தபாசத்தினாலே—என்றன் மதியிழந்தேன். (அவனி)*

*கொடியவிலங்குகள் தங்களை வளர்ப்போரையே எதிர்த்துக் கொல்வதைப்போல், நானிவ்வளவு நாட்களாகப் பெருமை பாராட்டி நட்புக்கொண்டிருந்த வாத்ஸல்யனே எனக்குத் துரோகம் செய்தானென்பதை நானெவ்வாறு நம்புவது? மேலும், அவன் எனக்கு மணமகளாக அழைத்துவந்தபெண்*

ஓர் கீழ்க்குடியிற் பிறந்த பெண்ணும்! ஐயோ! வாத்ஸல்யனே எனக்கு இவ்விதத் துரோகம் செய்துவிட்டானென்பதை நான் நம்பிவிட்டால், என் மற்ற அமைச்சர்களிடம் என்ன நம்பிக்கை எவ்வாறுவைப்பேன்? கமலாஸனனோ ஓர் அரவைப்போன்று கொடுந்தன்மையுள்ளவன். ஆனால் அவன் சொல்வதையும் நானெவ்வாறு நம்பாமலிருக்கமுடியும்? எனினும் எனக்குக் கமலாஸனனிடத்தும் முற்றும் நம்பிக்கையில்லை. அந்தோ! ஓரரசன் தன் அமைச்சர்களையும் தன் மனைவியையும் நம்பாமல் வேறுயாரை நம்புவது? எனக்கு வாய்த்தவர்களெல்லோரும் எனக்குத் தீங்கு விளைவிப்பவர்களாகவே தோன்றுகின்றனர்———

(கமலாஸனன் பிரவேசித்தல்)

கமலாஸனா, வருவாய். இதோ இந்த ஆஸனத்தில் அமர். கமலாஸனா, நான் உன்னையோர் விஷயம் கேட்கவேண்டுமென்று நேற்றே நினைத்தேன். வாத்ஸல்யனைச் சிறைசெய்து சுமார் இரண்டுமாதங்களாகியும் ருத்ரசிம்ஹன் ஏன் இன்னும் படையெடுத்து வரவில்லை?

கமலாஸனன்:—வாத்ஸல்யனைத்தாங்கள் சிறையிலடைத்துவிட்ட சங்கதி ஓர்கால் அவன் காதுகளுக்கெட்டி இனி தனக்குதவி புரிபவர்களொருவருமில்லை யென்பதை யுணர்ந்து, படையெடுத்து வருமெண்ணத்தை முற்றும் துறந்துவிட்டனனோ என்னவோ!

சந்திரகுப்தன்:—அங்ஙனம் நிச்சயமாய்த் தெரிந்தாலும் ஓர் விதக் கவலையுமின்றி இருக்கலாம். அதையும் அறியக்கூடவில்லையே யுத்தம் விளையப்போகிறது விளையப்போகிறதென்று நாம் ஏன் இவ்வாறு கவலையுடன் காலங்கழிக்கவேண்டும்? நாமேஉஜ்ஜைனிநோக்கிப்படையெடுத்துச்சென்றாலென்ன?

கமலாஸனன்:—இவ்விஷயத்தில் தாங்கள் எதற்காகக் கவலைகொள்ளவேண்டும்? நமது சேனை இப்பொழுது யுத்தத்திற்குச் சந்நத்தமாகத்தானிருக்கின்றதுநாமும்சகலஏற்பாடுகளையும்

செய்திருக்கிறோம். ஆகையால், ருத்ரசிம்ஹன் இஷ்டப்பட்ட போது வரட்டுமே! வந்தசமயத்தில் பார்த்துக்கொள்வோம்! ஆனால் யுத்தத்தைப்பற்றியே நினைத்துக்கொண்டு மற்ற அவசியமான காரியங்களை மகாராஜா கவனியாமலிருக்கலாமா?

சந்திரகுப்தன்:—மற்ற காரியங்கள் நானென்ன கவனியாமலிருக்கின்றேன்? சாதாரணமாக எப்பொழுதும்போலவே இராஜ காரியங்களையெல்லாம் கவனித்து வருகின்றேனே!

கமலாஸனன்:—மகாராஜ், நான் இராஜாங்கக்காரியங்களை யுத்தேசித்துப்பேசவில்லை. தங்கள் குடும்பவிஷயமாகக் கொஞ்சம் கவனிக்க வேண்டியிருக்கிறதே.

சந்திரகுப்தன்:—என்ன அது?

கமலாஸனன்:—வாஸந்திகைக்கு வயதாகவில்லையா? அவளுடைய கலியாணத்தைப்பற்றி வாத்ஸல்யரிருக்கும்பொழுதே பேச்சு நடந்துகொண்டிருந்ததே! இன்னும் கலியாணம் நடக்கவில்லையே! தாங்கள் சீக்கிரம் ஏதாவது வரன் நிச்சயிக்கவேண்டாமா?

சந்திரகுப்தன்:—வாத்ஸல்யன் ஓர் இளவரசனை அவளுக்கு மணவாளனாகத் தேடிவந்தான். அதைப்பற்றி வாஸந்திகையிடம் பேசினேன். அவள் அதற்கொன்றும் பதிற்சொல்லவில்லை. அப்பேச்சே அவளுக்குக் கர்ணகடூரமாய் இருந்ததுபோலத் தோன்றியது. ஆகையால் நானும் அவ்விஷயத்தைப்பற்றி யோசிப்பதை விட்டுவிட்டேன். கூடிய சீக்கிரத்தில் ஓர் வரனைத்தேடி அவளைக் கலியாணஞ்செய்து வைக்கவேண்டியது தான்.

கமலாஸனன்:—முன் சொன்ன இளவரசனுக்கு அவளைக் கலியாணஞ்செய்து கொடுக்கத் தங்களுக்கிஷ்டமோ?

சந்திரகுப்தன்:— அச்சமயம் எனக்குச்சம்மதமாகத்தானிருந்தது ஆனால் இப்பொழுது எனக்குச் சம்மதமில்லை.

**கமலாஸனன்:**--அப்படியெனில், வேறுவரன் தேடவேண்டாமா?

**சந்திரகுப்தன்:**—தேடவேண்டியது தான். உனக்கு யாராவது தெரியுமோ?

**கமலாஸனன்:**—இதென்ன பிரமாதம். வாஸந்திகைக்குத் தகுந்த மணவாளனைத் தேடிக்கொண்டு வெகுதூரம் செல்லவேண்டுமா என்ன? என்னைக்கேட்டால் நானோர் வரன் சொல்லுவேன். அவன் வாஸந்திகைக்கு எல்லாவிதத்திலும் தகுதியானவனே. அவனைத் தங்கள் மாப்பிள்ளையாகக் கொண்டால், தங்களிடம் விசுவாசமாய் உழைக்கும் ஊழியனொருவனுக்கும் மிகுந்த சந்தோஷமாயிருக்கும்.

**சந்திரகுப்தன்:**—நீ சொல்வது விளங்கவில்லையே. நீ சொல்லும் வரன் யார்?

**கமலாஸனன்:**—மகாராஜ், நான்சொல்வதை மன்னிக்கவேண்டும். நான் இந்நகர் வந்தடைந்தது முதல் எவ்வளவு விசுவாசமாய் உழைத்திருக்கிறேனென்பது தங்களுக்குத் தெரிந்ததே. வாத்ஸல்யர் என் ஆப்த நண்பராயிருநதும் என் கடமையை விசுவாசமாய்ச் செய்யவேண்டுமென்பதற்காக அவருடைய துரோகத்தைத் வெளியிடவில்லையா? அப்படி நான் செய்யாதிருப்பின் இவ்விராஜ்ஜியத்தின் கதி யாதாகியிருக்கும் ? இவற்றையெல்லாம் உத்தேசித்து, நான் வேண்டிக்கொள்ளும் ஓர் பிரார்த்தனைக்குத் தயவுசெய்து மனமிரங்கி அநுக்கிரகம் செய்வேண்டுமாய்ப் பிரார்த்திக்கிறேன்—

**சந்திரகுப்தன்:**—நீ சொல்லவேண்டுவதைத் தாராளமாய்ச்சொல்.

**கமலாஸனன்:**—மகாராஜ், வாஸந்திகைக்குத்தகுந்த பருவகாலம் இதுதான். அவளுக்குச் சீக்கிரம் ஓர் மணவாளனைத்தேடவேண்டுமென்று தாங்களே சொன்னீர்கள். என் குமாரன் பிரதாபன் 25 வயதுள்ள அழகிய வாலிபனென்பது தங்களுக்குத்தெரியும். வாஸந்திகைக்குத் தகுந்த மணவாளனை ஏன் வேற்றார்களிற் சென்று தேடவேண்டும்? என் குமாரனுக்கே அவளைப்பாணிக்கிரகணம் செய்துகொடுக்கவேண்டுமாய்ப் பிரார்த்திக்க எனக்கு அநுமதி கொடுப்பீர்களா?

**சந்திரகுப்தன்:**—ஆ! உன் புதல்வனா! —— —— —— எனக்கொன்றும் ஆக்ஷேபணையில்லை. ஆனால்—— ——வாஸந்திகையின் சம்மதத்தையறிந்தாயோ?

**கமலாஸனன்:**—மகாராஜாவுக்குச் சம்மதமிருந்தால் அவளுக்கும் சம்மதந்தான்.

**சந்திரகுப்தன்:**—இல்லையில்லை. நாமெப்படி அதைச்சொல்வது? முன் நாம் அந்த இளவரசனைப்பற்றிப் பேசினபொழுது தனக்கிஷ்டமில்லையென்பதை எவ்வளவு வெளிப்படையாகக் காட்டினாள்?

**கமலாஸனன்:**—மகாராஜாவுக்குச் சம்மதமாவென்பதைத் தெரிவித்தால், பிறகு வாஸந்திகையின் சம்மதத்தை யறியலாம்.

**சந்திரகுப்தன்:**—கமலாஸனா, எனக்கொன்றும் ஆக்ஷேபணையிலது. ஆனால் இப்பொழுது வாஸந்திகையின் மணத்தைப்பற்றி யோசிக்கமுடியாது. ஏனெனில், முதலில் யுத்தம் விளையப்போகிறதா, இல்லையா, வென்பதை நிச்சயமாய் அறியவேண்டும். விளையப்போகிறதெனில், ருத்ரசிம்ஹனைத் தோற்கடித்தபிறகுதான் மற்றவைகளைக் கவனிக்கவேண்டும். நீஉடனே சென்று நம் சேனாதிபதியை இங்கே வரச்சொல். நான் அவனுடன் இரகசியமாய்ச் சிற்சில விஷயங்கள் பேசவேண்டியிருக்கிறது.

**கமலாஸனன்:**—(**தனக்குள்**) இதென்ன, சந்திரகுப்தன் சரியாகப் பதிலளிக்கமாட்டேனென்கிறான்! ஏதோ என்னிடமிப்பொழுது மிகுந்த நட்புக்கொண்டிருக்கிறானென்றல்லவோ நினைத்திருந்தேன்! நான் சொன்னவுடன் சம்மதித்துவிடுவானென்றல்லவோ எண்ணினேன்! இருக்கட்டும். இச்சமயம் சரியானதாயில்லை. மற்றொரு சமயம் நம்காரியத்தை முடிப்போம்.

(**செல்லல்**)

**சந்திரகுப்தன்:**—(**தனக்குள்**) கமலாஸனன் பேசுவது எனக்கு இன்னமும் அதிகமாகசந்தேகத்தை விளைவிக்கிறது! நான்யுத்தத்தைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கும் சமயத்தில், அதற்காக

வேண்டிய ஏற்பாடுகளைப்பற்றிப் பேசாமல் தன் புத்திரனை என் மாப்பிள்ளையாக்கி விடவேண்டுமென்று யோசிக்கின்றானே! இவன் யோக்கியனுயிருந்தால் யுத்தத்தைப் பற்றியன்றோ இப்பொழுது பேசவேண்டும்! யுத்தத்தில் நான் தோல்வியடைந்துவிட்டால் அதைவிட வேறு யாதுக்கஷ்டம் எனக்கிருக்கின்றது? ஆனல் கமலாஸனனேயும் இப்பொழுது பகைத்துக்கொள்ளவும் பயனில்லை. ருத்ரசிம்ஹன் படையெடுத்து வருகின்றானே இல்லையோ ஒன்றுமே தெரியவில்லை. எப்படியிருந்தாலும் அவனுடன் போர்செய்து, அவனைத்தோற்கடித்து, அவனுடைய நாடுகளான மாளவ தேசத்தையும், சௌராஷ்டிரத்தையும் நம் இராஜ்ஜியத்துடன் சேர்த்துவிடவேண்டியதுதான்! * இந்தச் சாக்கியர்களிடத்தில் ஜனங்களுக்குக் கொஞ்சமும் விருப்பமில்லை. ஆ! அந்த எல்லைச்சச்சரவில் அவன் எவ்வளவு துடுக்காகப் பதிலெழுதியனுப்பினன்? எல்லாவற்றிற்கும், ஓர் காரியம் செய்கிறேன். இந்நகரில் தற்காலம் எனக்கு ஹிதத்தைச் செய்யக்கூடியவன் என் சேனதிபதி ஒருவனே. * அவனைச் சேனையுடன் அனுப்பிவிட்டு நான் இந்நகரிலிருந்தால் சாக்கியர்களைத தோற்கடித்த கிபாதி அவனைச் சேருமேயன்றி என்னைச்சேராது. ஆகையால், நான் என் தேசத்தின் இராஜ்ய பரிபாலனத்தை என் சேனதிபதியிடம் ஒப்புவித்துவிட்டு நானே நேரில் உஜ்ஜைனி நோக்கிப்படையெடுத்துச் செல்கின்றேன். சேனதிபதியும் வாத்ஸல்யனைப் போல இராஜத் துரோகியாய் விடுவனேல், அதுவும் என் கால வித்தியாசமேயன்றி வேறில்லை—— இவ்வளவு———

(சேனதிபதி பிரவேசித்தல்)

வருவாய் சேனதிபதி. இந்த ஆஸனத்தில் உட்கார் உன்னிடம் வெகு அவசரமான சங்கதி பேசவேண்டியதாயிருக்கிறது. நான் உஜ்ஜைனி நோக்கிப் படையெடுத்துச் செல்லப் போகின்றேன்!———

* Vide Notes.

சேனாதிபதி:—அப்படியா! மகாராஜாவின் உத்திரவை எதிர்பார்க்கிறேன். போர்க்களத்திற்குத் தாங்கள் விஜயஞ் செய்யவேண்டுமோ யென்ன?

சந்திரகுப்தன்:—இல்லையில்லை. நான் உத்தேசித்திருக்கும் ஏற்பாடு வேறு. நீயாவது கமலாஸனனாவது என்னுடன் வரவேண்டாம். என் இராஜ்ஜியத்தை யுன்னிடம் ஒப்பிவித்துவிட்டு நானே உஜ்ஜைனி நோக்கிப் படையெடுத்துச் செல்கின்றேன். நான் திரும்பிவரும் வரையில் நீயே என் இராஜப்பிரதிநிதியாயிருந்து செங்கோல் கோணமல் அரசாக்ஷி செய்யவேண்டும். இதோ இப்பொழுதே செங்கோலைப் பெற்றுக்கொள்.

சேனாதிபதி:—மகாராஜ், தங்கள் ஆஞ்ஞைப்படி நடக்கச்சித்தனாயிருக்கிறேன். ஆனால், தங்கள் பிரதிநிதியாக என்னை நியமிப்பதைவிட, கமலாஸனரை நியமிக்கலாமே? அப்படிச் செய்தால் நானும் தங்களுடன் போர்க்களத்திற்கு வருவேன்! தாங்கள் மாத்திரம் சென்றால் நாங்கள் மிகுந்த கவலைப்படவேண்டியிருக்கும்.

சந்திரகுப்தன்:—சேனாதிபதி, கமலாஸனனிடத்து எனக்கு முற்றும் நம்பிக்கையில்லை! அவனுடைய செயல்களெல்லாம் சந்தேகத்தை விளைவிக்கக் கூடியவைகளாகவேயிருக்கின்றன. நீ என்னுடன் வந்துவிட்டால் அரசு நிலைகுலைந்துவிடும். ஆகையால் நீ என்னுடன் வரவேண்டாம். எல்லாவற்றையும் யோசித்துத்தான் நான் தீர்மானித்தேன். என் பிரதிநிதியாயிருக்க நீ தான் தகுந்தவன்! ஆகையால் செங்கோலை இதோ பெற்றுக்கொள். ஆனால் கமலாஸனனுடைய செயல்களைமாத்திரம் ஜாக்கிரதையாகக் கவனித்துக்கொண்டுவா. அவன், என்னுடன் என்ன நட்புக்கொண்டாடியபோதிலும் அவனிடத்திலெனக்கு எவ்வாறோ ஓர்வித அச்சமும் சந்தேகமும் உண்டாகிறது.

(சேனாதிபதி செங்கோலைப் பெற்றுக்கொள்ளல்)

**சேனாதிபதி:**—மகாராஜாவின் ஆக்கினையை மேற்கொண்டு இந்தச் செங்கோலைப் பெற்றுக்கொள்ளுகிறேன். எனினும் இதை நான் கையிலெடுக்கவும் பாத்திரனல்லேனென்பது நிச்சயம். மகாராஜா திரும்பிவரும் வரையில் செங்கோல் கோணாமலிருக்கவேண்டுமென்பதுதான் கடவுளிடம் நான் செய்துகொள்ளும் பிரார்த்தனை.

**சந்திரகுப்தன்:**—சேனாதிபதி, மற்றொரு விஷயம் சொல்லுகிறேன். நான் இந்த யுத்தத்தில் வென்றால் தனிமையாகப் *பரதேசியின் கோலத்துடன் ஸிந்து நதியில் ஸ்நானம் செய்து, பிறகு ஸிந்து முகத்துவாரத்திலிருக்கும் என் குலதெய்வத்தின் கோயிலுக்குச் சென்று ஸ்ரீமந்நாராயண மூர்த்தியைத் தரிசித்துவிட்டுப் பிறகு தான் என் நகர் அடையவேண்டியதாகையால், மாளவதேசத்தைக் கைப்பற்றிய பிறகு நம்முடை சேனாவீரர்களை இங்கு அனுப்பிவிட்டு நான் மாத்திரம் செல்கிறேன். ஆகையால் நான் சேனையுடன் திரும்பி வராவிட்டால் ஆச்சரியப்படாதே!

**சேனாதிபதி:**—சில வீரர்களையாவது உடனழைத்துச் செல்வீர்களன்றோ?

**சந்திரகுப்தன்:**—இல்லையில்லை. நான் மாத்திரந்தான் பரதேசிக் கோலத்துடன் செல்லவேண்டும். ஆனால் நீ ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம். சேனாவீரர்கள் வந்துசேர்ந்த ஒரு மாதத்திற்குள் நான் திரும்பி வந்துவிடுவேன்.

**சேனாதிபதி:**—மகாராஜா தாமதமன்னியில் வந்து விடவேண்டும். அப்பொழுதுதான் நாங்கள் கவலையின்றி இங்கிருக்கமுடியும்!

**சந்திரகுப்தன்**-—மற்றோர் விஷயம் சொல்லுகிறேன். கவனி. எனது மனைவி கர்ப்பவதியா யிருக்கின்றாளல்லவா? இன்னும் சில வாரங்களில் ஓர் குழந்தையைப் பெற்றெடுப்பாள். அவளைச்சிறை செய்ததற்குக் காரணம் உனக்குத் தெரிந்

---

* Vide Notes.

திருந்தாலுமிருக்கலாம். எனினும் நான் செய்தது நியாயமாவென்பது எனக்குச்சற்று சந்தேகமாகவே யிருக்கின்றது. இந்த கமலாஸனன் பேச்சைக்கேட்டே வாத்ஸல்யனையும் அவளையும் சிறை செய்தேன். இப்பொழுதோ கமலாஸனனை நம்பவும் முடியவில்லை நம்பாமலிருக்கவும் முடியவில்லை. ஆகையால் ஓர் காரியம்செய். துருவதேவியும், வாத்ஸல்யனும், சிறையிலேயேயிருக்கட்டும். ஆனால் அவர்களிருவரும் தங்கள் தங்கள் கிரகங்களில் எவ்வளவு சௌக்கியமாயிருப்பார்களோ அவ்வளவு சௌகரியத்துடனிருக்க ஏற்பாடுசெய். அவர்கள் சிறைச்சாலையிலிருப்பினும் அவர்களை வெகு மரியாதையுடன் நடத்தும்படி எல்லோருக்கும் உத்தரவளி. நான் உஜ்ஜைனியினின்றும் திரும்பி வந்த பிறகு அவர்கள் குற்றவாளிகளோ அல்லவோ என்பது தெரியுமாதலால், அதுவரையில் அவர்கள் சிறையிலேயே யிருக்கட்டும்.

சேனாதிபதி:—மகாராஜாவின் ஆஞ்ஞைப்படியே செய்யக்கடமைப்பட்டிருக்கிறேன்.

சந்திரகுப்தன்:—நான் சொன்னதெல்லாம் ஞாபகமிருக்கட்டும். நான் இன்றைக்கே உஜ்ஜைனி நோக்கிச் செல்லுகிறேன். நீ கமலாஸனனை மாத்திரம் முற்றும் நம்பாதே! நான்சென்று புறப்பட ஆயத்தஞ்செய்கிறேன்.

(செல்லல்.)

சேனாதிபதி:—கடவுள் இந்த யுத்தத்தில் மகாராஜாவுக்கு ஜயமும் கீர்த்திப்புகழும் அளிப்பாராக.

காட்சி முடிகிறது.

---

## அங்கம் III.

### களம்—2. புஷ்பபுரம். ஓர் சிறைச்சாலை.

காலம்—காலை.

(வாத்ஸல்யன் புலம்புதல்.)

வாத்ஸல்யன்:—ஆ! இதென்ன ஆச்சரியம்! இதென்ன கனவோ நனவோ அறிகின்றிலேனே? இந்நகரில் இத்தகைய அநியாயமும் நடப்பதுண்டோ? எனக்கொருவரும் பகையாளிகளில்லையென்று நான் இவ்வளவு நாட்களாய் நம்பியிருந்தது பொய்யாயிற்றே. என்னைச்சிறையிலடைத்து இரண்டுமாதங்களாகியும் என்னை அரசர் எதற்காகச் சிறையிலிட்டாரென்பதே எனக்குத்தெரியவில்லையே. ஐயோ! நான் அரசரிடம் விடைபெற்றுக்கொண்டு, மரிக்குந் தருணத்திலிருந்த எனதரிய அன்னையைக் காணவேண்டி, உதயகிரி மார்க்கமாகச் சென்றுகொண்டிருக்கையில், யாரோ சில மனிதர்கள் மாறுவேடம்பூண்டு, வழியில் ஒளிந்திருந்து, என்மேற் பாய்ந்து, என்னைச் சிறைப்படுத்திவிட்டனரே. அவர்கள் யாவரென்பதை நானெவ்வாறு அறியக்கூடும்? ஆ! இப்பொழுதன்றோ ஞாபகம் வருகின்றது! மாறுவேடம்பூண்டு என்னைச் சிறைப்படுத்திய பாதகர்களில் ஒருவனைமட்டும் நான் இன்னானென்று அறிந்துகொள்ளவில்லையா? அவன் அக்கீழ் மகனான ஜயபாலனன்றோ? அப்பாதகனே இதற்கெல்லாம் காரணமாயுள்ளன். அவன் என்னை இவ்வாறு வருத்த நான் அவனுக்கு யாது தீங்கிழைத்தேன்? அவன் எனக்கிழைத்திருக்கும் தீங்கை நான் அரசரிடம் சொன்னால்,—ஆ! அரசரே என் எதிரியாய்விட்டாரே! ஜயபாலனும் மற்ற பாதகர்களும் என்னைப் பிடித்துக்கொண்டு காட்டிலிருக்கும் ஓர் குகையில் சிறைசெய்து வைத்திருந்தபொழுது, சில குதிரைவீரர்கள் அவ்விடம்வந்து என்னைச் சிறைசெய்யும்படி அரசரளித்த உத்தரவுப் பத்திரிகையை யென்னிடம் காண்பித்தனரே! அப்பத்திரிகையில் அரசர் தன் முத்திரையையுமிட்டிருந்தாரே!

நான் இந்நகர் வந்தடைந்ததுமுதல் என்னுடைய சுகத்தையும் பேணாமல் அரசருடைய க்ஷேமத்தையே பெரிதெனப் பாராட்டிவந்ததற்கு அரசர்செய்யுங்கைம்மாறு இதுதானோ? "வடிவுபெறு செங்கோல் நடத்திவரு மரசருக்குப் பல்லுயிரெலாம் தன்னுயிருக்கு நிகரென்று பரிந்து குற்றங்களைக் களைதல்"ன்றோ. அப்படியிருக்க, என்றுங்கோணாத செங்கோல் இப்பொழுது கோணியதன் காரணம் என்னே? தீர விசாரியாமலும், ஆலோசியாமலும் ஒருநாளும் ஒருகாரியத்தையும் செய்யாத அரசர் திடீரென்று இங்ஙனம் உத்தரவளிக்கக் காரணம் என்னே? ஆஹா! குழவியை நம்பலாம்; பெண்டிரையும் நம்பலாம்; மற்றும் அரவையும் நம்பலாம்; ஆனால் அரசர்களை நம்பலாகாதென்பது மெய்யாயிற்றே! "நியாயநெறி தவறாமலுலக பரிபாலனம் நடத்துபவனே அரச"னெனில் தீரவிசாரியாமலும், ஆலோசியாமலும், தனது அமைச்சனொருவனைத் திடீரென்று சிறைப்படுத்தியது அரசருக்கு அழகாகுமோ? "அரசர் பகையும் அடுத்துக்கெடுப்போர் பகையும் ஒரு சிறிது மாகாது." எனக்கோ அரசரே அடுத்துக்கெடுப்போராய் என்மீது பகைகொண்டுவிட்டார். தெரியாமலா இக்காலத்தைக் கலிகாலமென்றனர்! இக்காலம் "தேய்வுடன் பெரியவன் சிறுமையுறுகாலம்; வாய்மதம் பேசிடும் அநியாயக்காரர்க்கு வாய்த்த கலிகாலமன்றோ?"

ஆ! எனதன்னையை நான் பார்க்கவேண்டுமாயின் உடனே புறப்பட்டுவரும்படி விசுவசேனன் எழுதியிருந்தான்! எனதன்னையைக் கடைசிமுறை பார்க்கவும், அவளுக்குத்தகனம் கிரியை, முதலியவற்றைச்செய்யவும் முடியாத துர்ப்பாக்கியனாய்விட்டேன்! என் அன்னை—என்னைப் பத்துமாதம் சுமந்து பெற்று அருமையாய்ப் பாலூட்டிச் சீராட்டிப்பாராட்டி வளர்த்த அன்னை—இப்பொழுது உயிருடனிருக்கின்றாளோ மேலுலகம் ஏகிவிட்டனளோ அறியேன்! ஹே ஜகதீசா! அவள் மரித்திருப்பின் நானென்ன செய்வேன்? காலன் பாசக்கயிற்றை வீசுங்காலத்தில் என்ன எண்ணம் அவள்

மனதிலூதித்திருக்குமோ? அவள் என்னிடம் யாது சொல்ல வேண்டுமென்று நினைத்தாளோ? ஐயோ, என்னைச் சித்திர வதைசெய்தாலும், தூக்கிட்டாலும், என்னைக் கண்டந்துண்டமாக வெட்டிவிட்டபோதிலும், மற்றும் என்னை எவ்விதம் வருத்தினாலும் நான் பொறுத்துக்கொண்டிருப்பேன். இவ்விதம் என்னை வருத்தினால் நானெவ்வாறு சகிப்பேன்? இவ்வுலகத்தில் நீதியில்லையோ? இவ்வுலகத்தில் நெறியில்லையோ? இவ்வுலகத்து அரசர்களுக்கு விசுவாசம், தயை, தாக்ஷண்யம் ஒன்றுமில்லையோ! ஹே! ஜகதீசா! மகாப்பிரபு! ஆபத்பாந்தவா! ஓர்கால் ஆதிமூலமே யென்றழைத்திட்ட யானைக்கும் அபயமளிக்கவந்த புண்ணியா! இப்பொழுது என்னைப் பாராயோ? என் துயர் தீராயோ? தஞ்சமென்றடைந்தோரை அஞ்சல் என்று சொல்லித் தேற்றிப் போற்றிக் காப்பாற்றுதல் உன் கடமையன்றோ? உன்னையன்றி எனக்கு வேறு யார் துணைவரிருக்கின்றார்கள்? ஆ! நான் ஏன் இவ்வாறு புலம்பவேண்டும்? எல்லாம் ஈசன் செயலன்றோ?

(ஜயிலதிகாரி பிரவேசித்தல்)

ஜயிலதிகாரி:—மகாராஜ், நமஸ்கரிக்கின்றேன்.

வாத்ஸல்யன்:— (தனக்குள்) இதுவும் கனவா, நனவா, தெரியவில்லையே? கைதியான என்னைப்பார்த்து ஜயிலதிகாரி எதற்காக வணங்கவேண்டும்? (உரக்க) ஐயா நமஸ்காரம். கைதியாயிருக்கும் அற்பப் புழுவுக்குச் சமானமான என்னைத் தாங்கள் வணங்குவதற்குக் காரணம் தெரியவில்லை. இவ்வளவு நாட்களாய் இல்லாத வழக்கத்தை எதற்காக இன்றைக்குச் செய்கிறீர்கள்?

ஜயிலதிகாரி:—மகாராஜ், சந்திரகுப்தமன்னர் உஜ்ஜைனி நோக்கிப் படையெடுத்துச் சென்றுவிட்டார்—அவர் செல்லும் பொழுது———

வாத்ஸல்யன்:—அப்படியா!

ஜயிலதிகாரி—ஆம். அவர் செல்லும்பொழுது தங்களை நாங்களெல்லோரும் வெகு மரியாதையாக நடத்தவேண்டுமென்றும், தங்களுக்கு எல்லாவித சௌகரியங்களையும் அளிக்கவேண்டுமென்றும் உத்தரவளித்தார். ஆகையால் தாங்கள் இனி இந்த விலங்குகளை யெடுத்துவிடுங்கள். (வாத்ஸல்யன் அணிந்திருந்த விலங்குகளை எடுத்துவிட்டு) அரசர் தங்களை ஏதோ தகுந்த காரணத்தைக்கொண்டுதான் சிறை செய்தாராம். ஆனல்—

வாத்ஸல்யன்:—நான் யாது குற்றம் செய்தேனென்பது எனக்கே இன்னும் புலப்படவில்லையே!

ஜயிலதிகாரி:—தாங்கள் குற்றமற்றவரென்பது எங்களுக்குத்தெரியும். ஆனல் யாது காரணத்தாலோ மகாராஜா தங்களைச் சிறையிலடைத்துவிட்டாரே! ஆனல் தங்களையும், மகாராணியாரையும் சிறையிலடைத்தது நியாயமோ வென்பது இப்பொழுது கொஞ்சம் சந்தேகமாயிருக்கிறதாம்——

வாத்ஸல்யன்:—மகாராணியைச் சிறையிலடைத்ீர்களா? இதென்ன விபரீதம்!

ஜயிலதிகாரி:—ஆம், பிரபு! தங்களைச் சிறையிலடைத்தபொழுதே என்ன காரணத்தாலோ மகாராணியையும் அரசர் சிறையிலடைத்துவிட்டார்!

வாத்ஸல்யன்:—இதென்ன கொடுமை! நானாவது கஷ்டங்களையெல்லாம் சகித்துக்கொண்டிருப்பேன். என் அரிய துருவதேவி இதையெல்லாம் எவ்வாறு சகிப்பாள்! அவள் அரண்மனையிலிருப்பதே தகுதியன்றி அவளுக்கு ஜயில்வாஸம் ஏற்குமோ? இதென்ன கொடுமை! ஆ! அவள் இப்பொழுது பூர்ண கர்ப்பவதியாகவன்றோ இருப்பாள்!

ஜயிலதிகாரி:—மகாராஜா சென்று நாலைந்து நாட்களாகின்றன. அவர் சென்ற மூன்றும்நாளே மகாராணியார் ஓர் அழகிய ஆண்குழந்தையைப் பெற்றெடுத்தார்கள்!

வாத்ஸல்யன்:—ஆ! தெய்வமே! இதுவும் உன் லீலையோ? சந்திர குப்தமன்னர் புத்திரப்பேறு அடையும் பாக்கியத்தைப் பகவான் கொடுத்திருந்தும், அவர் எதற்காக எல்லாவற்றையும் துறந்துவிட்டு, தன் நண்பனையும் மனைவியையும் ஸ்ரீமந்தப் புதல்வனையும் சிறையிலடைத்துவிட்டு, யுத்தகளத்திற்குச் செல்லவேண்டும்! எனக்கொன்றும் விளங்கவில்லையே! இதுவும் அரசருடைய விதியோ? ஐயா, ருத்ரசிம்ஹன் படையெடுத்து வந்தானா என்ன?

ஜயிலதிகாரி:—இல்லை. அவன் வராததற்குத்தான் காரணம் தெரியவில்லை. அவன் வருவதற்குமுன், தானே படையெடுத்துச் சென்று அவன் நாடுகளை வென்று வரலாமென்றுதான் அரசர் சென்றிருக்கிறார். அரசர் திரும்பி வரும் வரையில்தான் தங்களை ஜயிலில் வைத்திருக்க வேண்டுமென்பது அரசருடைய ஆக்கினை. நான் சென்று இராஜப்பிரதிநிதியிடம் இங்கு நடந்தவற்றைச் சொல்லட்டுமா? நான் விடைபெற்றுக்கொள்ளுகிறேன்.

வாத்ஸல்யன்:—இராஜப்பிரதிநிதியா! யார் அது?

ஜயிலதிகாரி:—சேனாதிபதிதான் இப்பொழுது இராஜப்பிரதிநிதியாயிருக்கிறார். அவர் அரசருடன் செல்லவில்லை.

வாத்ஸல்யன்:—அப்படியெனில், என் நண்பர் கமலாஸனர் அரசருடன் சென்றிக்கிறாரோ?

ஜயிலதிகாரி:—இல்லை. அவரும் நகரில்தானிருக்கிறார். அரசர் மாத்திரம் தான் சென்றிருக்கிறார்.

வாத்ஸல்யன்:—இதென்ன! எல்லாம் ஆச்சரியமாயிருக்கிறதே. யுத்தத்திற்கு அரசர் தனியாகச்செல்லுவாவது சேனாதிபதி நகரிலிருக்கவாவது! மற்றும் சந்திரகுப்த மன்னருடையவும், சேனாதிபதியினுடையவும் ஆளுகையில் குற்றமற்றவர்கள் சிறைச்சாலையில் அடைக்கப்பட்டு வருந்துகிறார்களே! அதிலும் மகாராஜாவின் இராணியே சிறையிலிருப்ப

றேன்றால் என்ன அநியாயம்? மகாராணியாவது சிறைச் சாலையில் தன் ஸ்ரீமந்தப் புத்திரனைப் பெற்றெடுக்கவாவது! எல்லாம் ஆச்சரியமாகவன்றோ யிருக்கின்றது! ஐயா, நடக்கும் விஷயங்கள் ஒன்றுமே எனக்கு விளங்கவில்லை. ஏதோ நான் கேட்பதும் பார்ப்பதும் கனவோ நனவோ என்பது கூட எனக்கே சந்தேகமாயிருக்கிறது. என் காதுகளும் கண்களுமே என்னை மோசஞ்செய்கின்றனவோ என்னவோ அறிகிலேன்.

ஜயிலதிகாரி:—நான் சொன்னதெல்லாம் உண்மைதான். நான் விடைபெற்றுக்கொள்ளுகிறேன்.

வாத்ஸல்யன்:—தாங்கள் சொல்வதின் உண்மையை நான் சந்தேகிக்கவில்லை. தங்களை நான் வந்தனஞ் செய்யக் கடமைப்பட்டிருக்கிறேன். அநேக வந்தனம். (ஜயிலதிகாரி செல்லல்) (தனக்குள்) ஹே துருவதேவி! உனக்கும் இக்கதி சம்பவித்துவிட்டதோ? நீ எவ்வாறு இக் கொடுமையைப் பொறுத்துக்கொண்டிருக்கிறாய்? நீ ஓர் அரசிளங்குமாரனைப் பெற்றெடுத்தும், உன்னையும் குழந்தையையும் பார்க்கவும் முடியாத என் துர்ப்பாக்கியத்தை என்னென்று சொல்வேன். ஆ! இதெல்லாம் ஈசனுடைய லீலைகளே! மனிதர்களுடைய அற்ப புத்தியைக்கொண்டு கடவுளுடைய செயல்களையறிய முடியவில்லையே!

நாம்,

“ ஒன்றை நினைக்க வதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றி யதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல். ”

என்பது மெய்யாயிற்று. ஆகையால் புலம்புவதிற் பயனில்லை. நமக்கோர் பெருந்துணைவன் எக்காலமும் நம்பக்கத்திலிருக்க நாம் ஏன் இவ்வாறு புலம்பவேண்டும்? “அவனன்றி ஓர் அணுவுமசையாது.” “கடவுளை நம்பினோர்

கைவிடப்பட்டார்." ஆகையால், எல்லாம் வல்ல ஈசனைத்துதித்து மனதிற்கோர் சமாதானத்தை வரவழைத்துக்கொள்வோம்.

### துதித்தல்.

இராகம்—தோடி.

" வாழையடி வாழையென வந்ததிருக்கூட்ட மரபினில்
யாரொருவனன்றோ, வகையறியேனிந்த
வேழைபடும் பாடுனக்குத் திருவுளச் சம்மதமோ
விதுதகுமோ விதுமுறையோ விதுதருமந்தானோ
மாழைமணிப் பொதுநடஞ்செய் வள்ளல் யானுனக்கு
மகனலனோ நீயெனக்கு வாய்த்த தந்தையில்லையோ
கோழையுல குயிர்த்துயரமினிப் பொறுக்கமாட்டேன்
கொடுத்தருள் நின்னருளொளியைக் கொடுத்தருளிப்பொழுதே"

**காட்சி முடிகிறது.**

---

## அங்கம் III.

### களம்—3. புஷ்பபுரம். புதர்களடைந்த மலையடிவாரம்.

காலம்—மாலை.

(கமலாஸனனும் ஜயபாலனும் பிரவேசித்தல்.)

**ஜயபாலன்:**—என்ன கமலாஸனா, என்ன இதற்குள் நீயும் சேனாதிபதியும் மனஸ்தாபங்கொள்ள ஆரம்பித்துவிட்டீர்கள்!

**கமலாஸனன்:**—எனக்கொன்றும் மனஸ்தாபமில்லை. எனினும், இந்தச்சேனாதிபதிக்கு இவ்வளவு கர்வமிருக்கக்கூடாதப்பா! ஏதோ சந்திரகுப்தன் சிங்காதனத்தைத் தன்னிடம் ஒப்புவித்துச்சென்றதால், தானே மகாராஜாவென்று நினைத்துக்கொண்டிருக்கிறான்!

**ஜயபாலன்:**—ஏதோ அரசருக்கு உன்னிடத்தில் அசாத்தியமான அபிமானம் ஏற்பட்டிருப்பதாகச் சொன்னாயே. அப்படியானால், அரசர் செல்லும்பொழுது சிங்காதனத்தை ஏன் உன்னிடம் ஒப்புவிக்கவில்லை?

கமலாஸனன்:—அதற்குத்தான் காரணம் தெரியவில்லை. சந்திர குப்தனுக்கு என்மீது உண்மையான அபிமானம் ஏற்பட்டிருந்தால் சிங்காதனத்தை என்னிடம் ஒப்புவிப்பதுமன்றி, வாஸந்திகையின் கலியாண விஷயத்திலும் நான் சொல்லிய படி செய்திருக்கமாட்டாரா? ஒன்றுமே செய்யாமல், இந்த அயோக்கியனிடத்தில் சிங்காதனத்தை ஒப்புவித்துவிட்டு, உஜ்ஜைனி நோக்கிப் படையெடுத்துச் சென்றுவிட்டாரே!

ஜயபாலன்:—அதிருக்கட்டும். உனக்கும் சேனாதிபதிக்கும் மனஸ்தாபம் உண்டாகக் காரணம் யாது?

கமலாஸனன்:—தான் இராஜ ஸ்தானத்திலிருப்பதால் தானே அரசனென்று எண்ணிக்கொண்டிருக்கிறான்! என்னைக்கண்டு லக்ஷியம்செய்து பேசுவதே பெருங்காரியமாயிருக்கின்றது. நானிருக்கவேண்டிய ஸ்தானத்தில் தானிருந்துகொண்டு என் வார்த்தைகளை இங்ஙனம் அலக்ஷியமாகத்தள்ளுவதா?

ஜயபாலன்:—நீ சொல்வது விளங்கவில்லையே. நீ என்ன சொன்னாய், அவன் அதற்கென்ன ஆக்ஷேபனை சொன்னான்?

கமலாஸனன்:—என்ன சொல்வதா! வாஸந்திகையின் கலியாணத்தைப்பற்றி சிற்சில சங்கதிகள் அவனிடத்தில் சொன்னேன். அவன் ஒன்றையுமே காதிற் போட்டுக்கொள்ளவில்லை. மேலும் மேலும் நான் அதைப்பற்றிப் பேசியபொழுது, இப்பொழுது அதைப்பற்றிப் பேசுவதில் பிரயோஜனமில்லையென்றும் எல்லாம் அரசர் திரும்பிவந்த பிறகுதான் யோசிக்கவேண்டுமென்றும் துடுக்காகப் பதிலளித்தானே! அவனுக்கு எவ்வளவு துணிவு!

ஜயபாலன்:—சந்திரகுப்தமன்னர் எப்பொழுது திரும்பிவரப் போகிறாராம்? மாளவதேசத்தையும் சௌராஷ்டிரத்தையும் நம் இராஜ்ஜியத்துடன் சேர்த்தாய் விட்டதாமே?

கமலாஸனன்:—அதுவும் என் துரதிருஷ்டந்தான். இந்த யுத்தத்தில் ருத்ரசிம்ஹன் ஏன் தோல்வியடையவேண்டும்? சந்திரகுப்தன் தோல்வியடைந்திருந்தால் பிறகு சேனாதிபதியின் வாழ்வு தெரிந்திருக்குமே!

ஜயபாலன்:—சந்திரகுப்தமன்னர்தோல்வியடைந்திருந்தால் உன் எண்ணங்களெல்லாம் எவ்வாறு நிறைவேறும்? ருத்ரசிம்ஹன் இவ்விராஜ்ஜியத்தையும் தன் இராஜ்ஜியத்துடன் சேர்த்துக்கொண்டிருப்பானே!

கமலாஸனன்:—அப்படியல்ல. ருத்ரசிம்ஹன் வெற்றியடைந்திருந்தால், நான் அவனுடன் சமாதானம் செய்துகொண்டு, அவனுடைய சிற்றரசனாக இவ்விராஜ்ஜியத்தையாள ஏற்பாடு செய்திருப்பேன். ஆனால் இதெல்லாம் வீண்பேச்சு! இப்படியெல்லாம் மனோராஜ்ஜியம் செய்துகொண்டிருப்பதில் யாது பயன்? இச் சேனாதிபதியுடன் நான் எவ்வாறு நேசமாய் வாழ்வது? சொல்வதொன்றையே கேட்க மாட்டேனென்கிறானே.

ஜயபாலன்:—இன்னும் எத்தனைநாள் இவனுடைய வாழ்வு? சந்திரகுப்தர் தான் வெகு சீக்கிரத்தில் திரும்பிவந்து விடுவாரே!

கமலாஸனன்:—நம்முடைய சேனைகளெல்லாம் திரும்பி வந்து விட்டன! அரசர் மாத்திரம் வரவில்லை! இவ்விஷயம் உனக்குத்தெரியுமா?

ஜயபாலன்:—இதென்ன ஆச்சரியம்! அரசர் எங்கே?

கமலாஸனன்:—உஜ்ஜைனி மன்னனைத் தோற்கடித்தபிறகு அரசர் தனிமையாக ஸிந்துவில்மூழ்கி ஸ்நாநம் செய்வதற்காகச் சென்றுவிட்டாராம்.———

ஜயபாலன்:—ஸிந்துவில் மூழ்கி மாண்டுவிட்டாரா? அப்படியென்றால்———

கமலாஸனன்:—இல்லையடா செவிடா, ஸிந்துவில் ஸ்நாநம்செய்யப்போய்விட்டாராம்.

ஜயபாலன்:— ஸ்நாநம் செய்யவா? அப்படியெனில் எப்பொழுது திரும்பிவருவார்?

கமலாஸனன்:— என்னமோ தெரியவில்லை. அரசர் ஸிந்துநதியில் ஸ்நாநம் செய்யப்போகும் விஷயமே எனக்குத் தெரியாது. ஆனால் சேனாதிபதியிடம் ஏதோ சொல்லிவிட்டுப் போயிருக்கிறார் போலிருக்கிறது. சேனாதிபதிதான் இவ் விஷயத்தை என்னிடம் சொன்னான்.

ஜயபாலன்:—எல்லாவற்றிற்கும் அரசர் திரும்பிவரட்டுமே! இதற்குள் ஏன் அவசரப்படுகிறாய்? சேனாதிபதி எப்படியிருந்தால் உனக்கென்ன? அரசர் வந்தபிறகு உன் எண்ணத்தை முடித்துக்கொள்ளேன்?

கமலாஸனன்:—உனக்குத்தெரியாது. அரசர் திரும்பிவருவதற்கு முன்னமேயே வாஸந்திகையை என் மைந்தனுடைய காதலியாக்கிவிடவேண்டும். ஏனெனில், அரசர் திரும்பி வந்துவிட்டால் என் எண்ணத்திற்குப் பற்பல இடையூறுகள் ஏற்படும். மகாராணிக்கு ஓர் ஆண்குழந்தை பிறந்திருக்கிறதல்லவா? அந்தக் குழந்தைக்காக அரசர் மகாராணியை மன்னித்து மறுபடியும் ஏற்றுக்கொண்டால் என்ன செய்வது? ஆகையால், முதலில் வாஸந்திகையின் கலியாணத்தை முடித்துவிட்டேனாயின், பிறகு மற்றவைகளைப் பார்த்துக்கொள்ளலாம்.

ஜயபாலன்: எல்லாம் உன்னிஷ்டப்படிச் செய். சேனாதிபதியைப்பார்த்து மறுபடி இவ்விஷயத்தைப்பற்றிப் பேசப் போகிறாயா?

கமலாஸனன்:—ஆம், அப்படித்தான் என் உத்தேசம். ஆனால் அவன் சம்மதித்தாலும் சம்மதிக்காவிட்டாலும் நான் என் எண்ணத்தை முடித்தே தீருவேன். வாத்ஸல்யனை வேரோடுகளைந்தும் இந்த ஒருவனாலா என் எண்ணம் கெடுவது? முடியாது! முடியாது! எப்படியும் என் எண்ணத்தை முடித்தே தீருவேன்!

ஜயபாலன்:—சரி, உன்னிஷ்டப்படி செய். என்னால் ஆகவேண்டிய காரியம் ஏதாவது இருந்தால்சொல். தயாராக இருக்கிறேன்.

கமலாஸனன்:—இப்பொழுது நீ செய்யவேண்டியது ஒன்று மில்லை. ஆனால் நகரில் ஏதாவது விசேஷமிருந்தால் ஜனங்கள் என்ன பேசுகிறார்களென்பதை என்னிடம் தவறாமல் தெரிவிக்கவேண்டும்.

ஜயபாலன்:—அப்படியே செய்கிறேன். ஆனால் நானோர் விஷயம் உன்னிடம் சொல்ல விரும்பினேன். ஆனால் நீ ஏதாவது நினைத்துக்கொண்டால் என்ன செய்வதென்று பயந்து—

கமலாஸனன்:—என்ன விஷயம்? தாராளமாய்ச்சொல்.

ஜயபாலன்:—இல்லை. நேற்று என் கிரகத்துக்கு ஓர் கடன்காரன் வந்துசேர்ந்தான். அவனை இன்றையதினம் வரச்சொன்னேன். இப்பொழுது என் கிரகத்திற்கு வந்திருப்பான். எனக்குக் கடனாகவாவது————

கமலாஸனன்:—உனக்கு எவ்வளவு பொன் வேண்டியதாயிருக்கின்றது?

ஜயபாலன்:—நான் அவனுக்கு 500 பொன் கொடுக்கவேண்டும். இப்பொழுது 400 பொன்னாவது கொடுத்தால்தான்————

கமலாஸனன்:—இதென்ன பிரமாதம்! இதோ 500 பொன்னையும் எடுத்துக்கொள். (ஓர் பணப்பையைக்கொடுத்தல்) இந்த பிரமாதத்தை நீ திருப்பிக்கொடுக்கவேணுமா என்ன? (தனக்குள்) நம்முடைய காரியம் முடியும்வரையில் இந்தப் பயல்களுக்கெல்லாம் பணத்தை அழுதுதான் தூலைக்க வேண்டும்.

ஜயபாலன்:—(பணப்பையை யெடுத்துக்கொண்டு) அனேக வந்தனம். நீ சொல்லியவாறெல்லாம் செய்யச் சித்தனாயிருக்கிறேன். வேறு விசேஷமில்லையே?

கமலாஸனன்:—வேறொன்றும் விசேஷமில்லை. என்னுடைய எண்ணம் கைகூடவேண்டியதற்காகப் பேசவேண்டியதையெல்லாம் நாம் கலந்து ஆலோசித்து முடிக்க இவ்விடம்

தான் தகுந்தது. என் மாளிகையில் பேசக்கூட எனக்கு இஷ்டமில்லை. ஏனெனில் என் சேவகர்களே துப்பாக இருந்து நாம் சொல்வதை மறைந்துநின்று கேட்டு நம்மைக் காட்டிக் கொடுத்துவிடலாம். ஆகையால் உலாவுவதற்காக வெளியே செல்வதைப்போல் அநுதினமும் மாலையில் இந் நேரத்தில் இங்குவா. நானும் வருகின்றேன். செய்ய வேண்டியதெல்லாம் கலந்து பேசிமுடிக்கலாம்.

ஜயபாலன்:—அப்படியே செய்கிறேன். இப்பொழுது நன்றாக இருண்டுவிட்டதே. நீயும் உன் மாளிகைக்குத் தானே போகிறாய்? இருவருமாக இராஜவீதிவரையில் சேர்ந்து போகலாமே?

கமலாஸனன்:—அப்படியே செய்வோம். வா. செல்லலாம்.

(இருவருமாகச் செல்லல்.)

காட்சி முடிகிறது.

---

## அங்கம் III.

### களம்—4.

### வாஸந்திகையின் அந்தப்புரத்தின் வெளிப்புறம்.

காலம்—காலை.

கமலாஸனன்:—(தனக்குள்) * நான் செய்த முயற்சிகளெல்லாம் வீணாகவில்லை. எனினும் என் காரியம் முழுதுங் கைகூடு முன் எவ்வளவு இடையூறுகள் உண்டாகின்றன! சேனாதிபதி நான் சொல்லும்வண்ணம் செய்யக்கூடாதா? அவன் எதற்காக என்னுடன் இப்படி வாதாடுகின்றான்? வாஸந்திகையின் கலியாணத்தைத் தன்னிஷ்டப்படி முடிக்கப்போகின்றானாமே! ஆனால் இவன் எப்படியிருந்தால் நமக்கென்ன? சந்திரகுப்தமன்னர் இவ்வளவு நாட்களாகியும் திரும்பி வாராததாலன்றோ இவன் இவ்வளவு கர்வங்கொண்டிருக்கின்றான்! அதிருக்கட்டும், சந்திரகுப்தன் ஏன் இன்னும் வா

---

* Vide Notes.

வில்லை? சேனைகளெல்லாம் திரும்பிவந்து ஒன்பது மாதங்களுக்கு மேலேயே ஆகின்றனவே! ஓர்கால் பொது ஜனங்கள் அஞ்சுகிறபடி அவர் ஸிந்துவில் மூழ்கி மாண்டிருப்பாரோ? அப்படியில்லாவிடின் அவர் வாராததற்குக் காரணமென்ன? ஒன்றும் விளங்கவில்லையே. நான் எப்படியாவது முதலில் வாஸந்திகையின் கலியாணத்தை முடித்துவிட்டால், பிறகு அரசர் வந்தாலும் பாதகமில்லை. அரசர் திரும்பிவராமலே யிருந்துவிடினும், மெத்த நலமாயிற்று! எல்லாவற்றிற்கும், முதலில் வாஸந்திகையின் மூலமாகவே தந்திரத்தால் அவளுடைய மணத்தை முடிக்க முயல்வோம். —அதோ வாஸந்திகையின் தோழி வருகிறாளே.

(சுலக்ஷணு பிரவேசித்தல்)

வாஸந்திகை அந்தப்புரத்தில் தானேயிருக்கிறாள்?

சுலக்ஷணு:—ஆம். ஏன்?

கமலாஸனன்:—நீ சென்று, ஓர் அவசரமான விஷயத்தைப்பற்றிப் பேச நான் காத்துக்கொண்டிருப்பதாகச்சொல்லி, இப்பொழுது சாவகாசமா யிருக்குமா வென்பதையறிந்து வா.

(சுலக்ஷணு செல்லல்)

கமலாஸனன்:—(தனக்குள்) வாஸந்திகையின் கலியாண விஷயத்தில் நான் சொல்வதைக் கேட்கமுடியாதென்று கண்டிப்பாகச் சொல்லச் சேனாதிபதிக்கு எவ்வளவு துணிவு! அவன் என்னுடன் பேசியபொழுது எனக்கு அவன்பேரில் வந்த கோபத்தில் அவ்விடத்திலேயே அவனைப்பிண்டம் செய்திருப்பேன்! என்னிடமா இவன் வால் காட்டுவது?

(சுலக்ஷணு பிரவேசித்தல்)

வாஸந்திகை என்ன சொன்னாள்?

சுலக்ஷணு:—இப்பொழுது சாவகாசந்தானென்று தெரிவித்து உடனே உள்ளே அழைத்துவரச் சொன்னார்கள்.

கமலாஸனன்:—மெத்த சந்தோஷம்.

(அந்தப்புரத்திற்குட் பிரவேசித்தல்)

வாஸந்திகை:—ஐயா, வாருங்கள். அதோ அந்நாற்காலியில் அமருங்கள். இவ்வளவு அவசரமாய் என்னிடம் சொல்ல வேண்டிய விஷயமென்ன? தயவுசெய்து தெரிவியுங்கள்.

கமலாஸனன்:—வாஸந்திகா, நான் பேசவந்த விஷயம் மிகவும் அவசரமும் இரகசியமுமானது. உன் தோழியைப்போகச் சொல்லுகிறாயா?

வாஸந்திகை:—சுலக்ஷணை இருக்கட்டும். எந்த இரகசியமும் அவளுக்குத் தெரியாததல்ல அவள் என் அந்தரங்க சகியல்லவா? தாங்கள் சொல்லவேண்டியதைத் தாராளமாய்ச் சொல்லுங்கள். என் தந்தையைப்பற்றி ஏதாவது சமாசாரம் தெரிந்திருக்கிறதா?

கமலாஸனன்:—ஐயோ வாஸந்திகா, நீ என்னைக் கண்டவுடன் உன் தந்தையைப்பற்றி வினவுவது எனக்கு அடக்கமுடியாத கிலேசத்தைத்தருகிறது. அரசர்சென்று இவ்வளவு காலமாகியும் திரும்பிவரவில்லையே யென்பதுதான் மிகுந்த கவலையாயிருக்கிறது. அரசர் எங்கேயாவது க்ஷேமமாயிருந்தால் தன் க்ஷேமத்தை அடிக்கடி நமக்குத்தெரிவிக்காமலிருப்பாரா? அரசர் சென்றதுமுதல் ஒரு லிகிதமுங் காணோம்! ஸிந்துவிலோ வெள்ளம் எப்பொழுதுமே கரைபுரண்டு ஓடும்! அதிலும் அரசர் சென்றசமயம் மழைகாலம். ஓர்கால் அவர் ஸ்நாநம் செய்வதற்காக இறங்கி வெள்ளத்திலகப்பட்டு எங்கே உயிரிழந்திருப்பாரோவென்று குடிகளெல்லோரும் அச்சப்படுகிறார்கள். அதுதான் எனக்கும் மிகுந்த கவலையாயிருக்கிறது.

வாஸந்திகை:—ஐயா, இவ்வித பயங்கரமான வார்த்தைகளையெல்லாம் தயவுசெய்து என் காதிற் போடாதீர்கள்! கடவுள் என்னை அவ்வளவுதூரம் பரீக்ஷிக்கமாட்டாரெனும் நம்பி

க்கை எனக்கிருக்கிறது. ஏதோ கொஞ்சம் காலதாமத மானபோதிலும், என் பிதா கடைசியில் க்ஷேமமாய்த் திரும்பி வருவாரென்றும், இச்சமயத்திலும் அவர் எங் கேயோ உயிருடன்தான் இருக்கிருரென்றும் நம்புகிறேன்.

கமலாஸனன்:—ஆ! வாஸந்திகா, நீ குழந்தை. உன்னிடம் உள்ளதைச்சொல்லவும் எனக்கு நாவெழவில்லை. எனினும் சொல்லுகிறேன். உன் தந்தை திரும்பிவருவாரெனும் நம்பிக்கையை அதிகமாக உன் ஹிருதயத்தில் வைத்துக் கொள்ளாதே. உன் பிதா மாண்டுவிட்டாரென்பது இந் நகரில் நடக்கும் சிற்சில விஷயங்களினின்றும் நன்ருகத் தெரிகிறது.

வாஸந்திகை:—ஐயா, இந்த சமாசாரத்தைச் சொல்வதற்காகத் தாஞ இங்கு வந்தீர்கள்? ஆ! என் ஹிருதயம் வெடிக்கும் போலிருக்கிறதே! ஐயா, தயவுசெய்து என்னென்ன விஷ யங்களினின்றும் என் பிதா மாண்டுவிட்டாரென்று தெரி கிறதென்பதைச் சொல்லவேண்டும். அவர் நிச்சயமாய் மாண்டுவிட்டதாகத் தெரிந்தால் என்மீது கருணைகூர்ந்து ஒன்றையும் ஒளிக்காமல் தெரிவியுங்கள். என் மனம் படும் பாட்டை என்னென்று சொல்லுவேன்.

கமலாஸனன்:—இத்தேசத்தில் இப்பொழுது நடந்துவருகிற சிற்சில விஷயங்களினின்றும் உன் பிதா மாண்டுபோயிருக் கத்தான் வேண்டுமென்பது நிச்சயமாகத் தெரிகிறது. அழாதே அம்மணி, கடவுளுடைய செயலை யாரறிவார்? விதியின் பயனை யாரால்தான் அநுபவியாமலிருக்க முடியும்? காரியம் நடப்பது என்ன நடந்துவிட்டாலும் மேல் நடக்க வேண்டியதை நாம் யோசிக்கவேண்டாமா?

வாஸந்திகை:—ஐயா, காரியம் நடந்துவிட்டதென்கிறீர்களே! அப்படியெனில், என் தந்தை இறந்துவிட்டது வாஸ்தவந் தானே? ஐயோ, ஒன்றையும் மறைக்காமற் சொல்லுங்கள்! என்னல் இனிப்பொறுக்கமுடியாது! மேல் நடக்கவேண் டிய காரியமென்ன? எனக்கொன்றும் விளங்கவில்லையே!

கமலாஸனன்:—வாஸந்திகா, சற்று அமைதியாயிருந்து பொறுமையுடன் கேள். உன் தந்தையின் கதியை மாத்திரம் யோசித்துக்கொண்டேயிருந்தால் போதுமா? ஐயோ! உன்னைச் சுற்றிலும் சத்துருக்கள் நிறைந்திருக்கின்றார்கள். சிரித்துக்கொண்டே உனக்குத் தீங்கிழைப்பவர்கள் உன்னரண்மனையிலேயேயிருப்பது உனக்குத் தெரியவில்லையே! பிறர் குடியைக்கெடுக்கும் உத்தேசத்தையும், மண்ணாசையையுங்கொண்ட கொடியவர்கள் கையிலல்லவோ நீ அகப்பட்டுக்கொண்டிருக்கின்றாய். இது உனக்குத் தெரியாமலேயே ஓர்விதக் கவலையுமின்றி இருக்கின்றாயே.

வாஸந்திகை:—தாங்கள் சொல்லும்வண்ணம் ஓர்கால் நான் என் தந்தையை யிழந்தவளாயிருப்பினும், தாங்கள் சொல்லும் துரோகிகளும் கொடியவர்களும் இங்கிருக்கக் காரணமில்லையே? அப்படியே யாராவது துரோகிகளிருந்தாலும், நம்முடைய விசுவாசமுள்ள சேனாதிபதியும் தாங்களுமிருக்கையில், எனக்கு அவர்கள் என்ன தீங்கு செய்யக்கூடும்? மேலும் நம்முடைய அரண்மனையில் வெகுகாலமாக உழைத்தவர்களும் விசுவாசமுள்ளவர்களுந்தா னிருக்கிறார்கள். என்பேரில் ஒருவருக்கும் துவேஷமேற்பட்டிருக்கவுங் காரணமில்லை. ஆகையால் எனக்கு யாதொரு தீங்கும் நேரிடாதென்பது என் எண்ணம்.

கமலாஸனன்:—ஆகா, வாஸந்திகா, இவ்வுலகத்தில் நிறைந்துள்ள சூதுகளை நீ எவ்வாறு அறிவாய்? நீ குழந்தை! ஏதோ உன்னுடைய ஹிருதயத்தைப்போலவே பரிசுத்தமாயும், களங்கமற்றதாயும் எல்லோருடைய ஹிருதயமும் இருக்குமென்று நினைத்துக்கொண்டிருக்கிறாய். அடடா, அப்படியிருந்தால் இவ்வுலகம் தெய்வலோகத்தினும் மேன்மையுள்ளதாயிருக்குமே! இல்லையில்லை. மனிதர்களுடைய குணாதிசயங்கள் உனக்குத் தெரியக்காரணமில்லை. மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசையெனும் மூன்று ஆசைகளும் பிடித்து ஆட்டும்பொழுது, மனிதர்கள் செய்யும்

அக்கிரமங்கள் இவ்வளவென்று சொல்லமுடியுமா? பிறர் பொருளைக்கவர்தலும், மோசஞ்செய்வதும், ஏமாற்றுவதும், தங்கள் காரியம் நிறைவேறுவதற்காகப் பிறர் உயிரைக்கூட வாங்க யத்தனிப்பதும் மானிடருடைய இயல்பு. இதெல்லாம் எனக்குத் தெரியாததல்ல. வாத்ஸல்யன் தன் காரியம் முடிப்பதற்காக அரசருக்கு என்ன துரோகம் நினைத்தான்! யோசித்துப்பார். இந்த வாத்ஸல்யனும் உன் பிதாவின் அன்னத்தையுண்டவனன்றோ? விசுவாசமென்பது அவன் சூழ்ச்சி செய்யும்பொழுது எங்கே ஓடிவிட்டது? ஆனால் அவன் துரோகம் யாரால் வெளிவந்தது? என்னாலன்றோ? நான் அமைச்சனாயில்லாதிருப்பின், அரசர்கதியும் இவ்விராஜ்ஜியத்தின் கதியும் யாதாகியிருக்கும்? வாத்ஸல்யனன்றோ இப்பொழுது இந்நகர் சிங்காதனத்தில் வீற்றிருப்பான்! ருத்ரசிம்ஹனுடைய சிற்றரசாகவன்றோ இவ்விராஜ்ஜியம் ஆகியிருக்கும்! நான்எப்பொழுதும் அரசருடையவும், உன்னுடையவும், ஹிதத்தையே யுத்தேசிப்பேனென்பதில் உனக்கேதாகிலும் சந்தேகமுண்டோ?

வாஸந்திகை:—தங்களைப்போன்ற உத்தம அமைச்சர்கள் ஓர் அரசனுக்கிருந்தால் அவ்வரசனுக்கு யாது குறையுளது? (தனக்குள்) இவன் வாத்ஸல்யரைச் சிறைசெய்த சாமர்த்தியத்தை என்னிடம் சொன்னால் நான் இவனை மெச்சுவேனென்று நினைத்துக்கொண்டான்போலும்! வாத்ஸல்யரைச் சிறைசெய்ததாலன்றோ புருஷோத்தமரை மணக்கலாமெனும் நம்பிக்கைக்கு ஓர் ஹானி வந்திருக்கிறது? என் கதி யாதாயிருக்குமோவென்று நான் பயப்பட்டுக்கொண்டிருக்கையில், இவன் என்னைப் பயமுறுத்தியும், துக்ககரமான செய்திகளைச்சொல்லியும் என் கவலைகளை யதிகரிக்கின்றான். மேலும், இவன் சொல்லவந்த காரியத்தைச் சொல்லாமலேயே இப்படியெல்லாம் பேசுவதைப்பார்த்தால், ஏதோ நோக்கத்துடன் பேசுவதாகத் தெரிகிறது. ஆகையால் உடனே இவனைவிட்டு நீங்கவேண்டும்.————

கமலாஸனன்:—வாஸந்திகா, ஏன் மௌனமாயிருக்கிறாய்?

வாஸந்திகை:—ஐயோ, மிகுந்த நாழிகையாய்விட்டது. என் அந்தப்புரத்தில் எனக்குவெகு அவசரமான வேலையிருக்கிறது. இதுவரை அதைப்பற்றி முற்றிலும் மறந்துவிட்டேன். என் க்ஷேமத்திற்காக வேண்டிய காரியங்களைத் தாங்களும் சேனாதிபதியுமாயிருந்து யோசித்துச் செய்யுங்கள். நான் அவசரமாகப் போகவேண்டியிருப்பதால்———

(செல்ல யத்தனித்தல்)

கமலாஸனன்:—வாஸந்திகா, சற்றுப்பொறு. தயவுசெய்து நான் சொல்வதைக்கேள். ஐந்து நிமிஷத்திற்குள் சொல்லிவிடுகின்றேன்! நானும் சேனாதிபதியுமாயிருந்து உனக்குத் தீங்கு வாராமலிருக்க ஏற்பாடுகளைச் செய்யும்படி சொன்னாயே! குழந்தாய், உண்மையைச் சொல்லட்டுமா? (தாழ்ந்த தொனியுடன்) குழந்தாய், உன் தந்தையோ ஸிந்துவில் மூழ்கி மாண்டுவிட்டார்! உன் தாயாரோ உன்னை இப்படி அநாதையாய் விட்டுவிட்டு இறந்துபோய்விட்டாள்! உன் சிற்றன்னையான துருவதேவியும் இப்பொழுது சிறைச்சாலையிலிருக்கிறாள்! ஆகையால் நீ ஓர்வித ஆதரவுமின்றி இருக்கின்றாய்! இப்பொழுது சிங்காதனத்தில் வீற்றிருக்கும் சேனாதிபதியோ இவ்வளவு நாட்களாக இராஜ ஸ்தானத்திலிருந்து ருசியைக் கண்டுவிட்டான்! அரசரும் மாண்டுவிட்டதனால் இனி இவ்விராஜ்ஜியம் தனக்குத் தானென்று நிச்சயமாயிருக்கிறான். சந்திரகுப்தருக்கோ ஆண் சந்ததியில்லை—

வாஸந்திகை:—ஏனய்யா அப்படிச் சொல்லுகிறீர்கள்? என் சிற்றன்னைக்குக் குழந்தையிருப்பதை மறந்துவிட்டீர்களோ?

கமலாஸனன்:—ஐயோ, வாஸந்திகா, நான் இதையெல்லா முன்னிடம் எவ்வாறு சொல்வது? ஏதோ சந்தேகம் வந்துதான் அரசர் உன் சிற்றன்னையைச் சிறையிலடைத்துவிட்டாரே. அவளுக்குப்பிறந்த குழந்தையை அரசராவது குடிகளாவது ஏற்றுக்கொள்வார்களா? ஆகையால்———

வாஸந்திகை:—என்ன வார்த்தை சொன்னீர்? தயவுசெய்து தாங்கள் இவ்விடம்விட்டுச் செல்லுங்கள். இப்படியும்—

கமலாஸனன்:—கோபித்துக்கொள்ளாதே, அம்மணி, நான் சொல்லவேண்டுவதைச் சொல்லவேயில்லையே. சேனாதிபதி இராஜ ஸ்தானத்திலிருந்து ருசியைக் கண்டுவிட்டானாகை யால், தனக்குப்பின் தன் சந்ததிகளுக்கு இராஜஸ்தானம் உரித்தாகவேண்டுமெனும் ஆசை பிடித்தலைகிறான். அரசர் மாண்டுபோனதும், இராணி சிறையிலிருப்பதும், நீ அநாதை யாயிருப்பதும் அவனுக்குச் சாதகமாகவேயிருக்கின்றன. ஆனால், தன் ஆசை நிறைவேறுவதற்குக் குறுக்கே இடைஞ் சலாயிருப்பவள் நீ ஒருவள்தான். நீ நாளையொருவனை மணஞ்செய்துகொண்டால் உன் புருஷன் இவ்விராஜ்ஜியத் தின் அதிபத்யத்திற்கு உரிமையுடைத்தானவனாயிருப்பா னாதலால், சேனாதிபதி இப்பொழுது உன்னை எப்படியாவது கொன்றுவிடவேண்டுமென்று பற்பல சூழ்ச்சிகளைச் செய்தி ருக்கிறான்!

வாஸந்திகை:—(திடுக்கிட்டு ஆச்சரியத்துடன்) இதென்ன ஆச்சரிய மாயிருக்கிறது! சேனாதிபதி என்னைக் கொல்லயத்தனிக்கி றாரா! இந்த இராஜ்ஜியத்தையபகரிக்கும் எண்ணங்கொண் டிருக்கிறாரா! இதையெல்லாம் நான் எவ்வாறு நம்புவது? எனக்கு ஞாபகம்வந்த நாள்முதல் சேனாதிபதியை எனக் குத்தெரியும். எப்பொழுதும் விசுவாசமாயும் பயபக்தியோ டுந்தான் அவர் இருந்துவருகிறார். என்னைத் தன் குழந் தையைக்காட்டிலும் மேலாகப் பாவித்து வந்தவர் இப் பொழுது என்னைக்கொல்ல யத்தனிக்கிறாரென்றால் அதை எவ்வாறு நம்புவது? மேலும் சென்ற ஒன்பது தலைமுறை களாக இச்சேனாதிபதியின் முன்னோர்கள் எங்கள் முன் னோர்களிடத்தில் விசுவாசத்துடனிருந்து உழைத்தவர்க ளென்று என் தந்தை எவ்வளவோ தடவைகளில் சொல்லி யிருக்கிறார்! அப்படியிருக்கத் தாங்கள் சொல்வது விந்தை யாகவன்றோ இருக்கிறது?

கமலாஸனன்:—வாஸந்திகா, நீ சொல்வது இன்னதென்று உன க்கே தெரியாமற் பேசுகிறாய். குழந்தாய், வெளுத்ததெல் லாம் பாலாகுமா? அக்கினியானது பார்வைக்கு எவ்வளவு

அழகாயிருப்பினும், அதைப்புஷ்பமென்று கையிலெடுத்தால் அது கையைப் பொசுக்கிவிடாதா? பார்வைக்கு நல்லதாயிருந்தால் குணாதிசயங்களைக் கவனிக்கவேண்டாமா? உனக்கிப்பொழுது என்னைவிட்டால் வேறு யார் துணைவரிருக்கின்றார்கள்? சேனாதிபதி உன்னைக்கொல்ல யத்தனிக்கின்றானென்றால் நம்பமாட்டேனென்கிறாய். உனக்கோ தகப்பனார், தாயார், ஒருவருமில்லாமற் போய்விட்டது. ஆகையால் நான் சொல்லுவதைக்கேட்டு, அவ்வாறு நடந்தாலன்றோ நீ க்ஷேமமாய் வாழலாம்? வேறு யாரிடமாவது நான் இவ்விதம் வற்புறுத்திச்சொல்வேனா? நீ என்னரிய மன்னரான சந்திரகுப்தருடைய குழந்தையாயிருப்பதாலன்றோ நான் இப்படிச் சொல்லுகிறேன். என் இராஜபக்தியும் விசுவாசமுமே இவ்விதம் சொல்லச்சொல்லுகின்றனவன்றி வேறொன்றுமில்லை. ஆகையால் நான் சொல்வதைக்கேள். நான் சொல்லும் வண்ணம் செய்.

வாஸந்திகை:—ஐயா, எனக்கொன்றும் தோன்றவில்லை. தாங்கள் சேனாதிபதியைக் கொடியவரென்கிறீர்கள். அதையும் நம்பக்கூடவில்லை. அப்படியே நம்பினாலும், அப்படி நம்புவதால் என் கதி எப்படி மேலாகும்? தாங்கள்தான் நான் அநாதையென்பதைப் படித்துப்படித்துச் சொன்னீர்களே! அநாதையான என்னால் இராஜஸ்தானத்திலிருக்கும் மிக வலிமையுள்ள ஓர் சேனாதிபதியின் இஷ்டத்திற்கு மாறாக என்ன செய்யக்கூடும்? ஆ! எது எப்படியிருந்தபோதிலும் எல்லாம் என் தலைவிதிப்படி நடக்கட்டுமென்று சும்மா இருத்தல்தான் என்னாலாகக்கூடிய காரியம். வலிமையற்றும், நாதனற்றும், நாதியற்றும், நேசர்களற்றும் இருக்கும் என்னால் வேறு யாது செய்யமுடியும்?

கமலாஸனன்:—வாஸந்திகா, உன்னை அநாதையென்று சொல்லியதில் நீ இவ்வளவு வருத்தப்படுகிறாயென்பது இப்பொழுதுதான் எனக்குத் தெரிகிறது. நான் அப்படிச் சொல்லியது தவறு. ஆகையால் தயவுசெய்து என்னை க்ஷமித்தருள்.

ஆனால், நீ போற்றுவார் ஒருவருமின்றிப் போகவில்லை உன் தலையிலிருக்கும் ஓர் மயிரிழைக்கும் தீங்கு வருமுன் அத்தீங்கைத் தடுப்பதற்கு என் உயிரையும் கொடுக்கத் தயாராயிருக்கிறேன்! இவ்வளவுகாலம் சந்திரகுப்தருடைய அன்னத்தையுண்டு, கடைசியில் அவர் குழந்தையைக் காப்பாற்றுவதற்காக என்னுயிரையிழந்தால், அது எனக்குத் தீராப்புகழை விளைவிக்கும். ஆகையால், வாஸந்திகா, நான் சொல்லுவதைக்கேள். நான் சொல்லும்வண்ணம் செய்—

வாஸந்திகை:—ஐயா, என்னை யாது செய்யச் சொல்லுகிறீர்கள்? எனக்குத் தெரியவில்லையே!

கமலாஸனன்:—சொல்லுகிறேன். சேனாதிபதி உன்னையடியோடு தொலைப்பதற்காக உன்னையோர் இராஜகுமாரனுக்கு மணஞ் செய்து வைப்பதைப்போல் பாவனைசெய்வான். பிறகு ஒருவருக்குந்தெரியாமல் உன்னைக்கொன்றுவிட்டு உன் புருஷன் உன்னை அழைத்துக்கொண்டு எங்கேயோ சென்று விட்டதாகச் சொல்லிவிட்டு இராஜ்ஜியத்தை யபகரித்துக் கொள்ளலாமெனும் எண்ணங்கொண்டிருக்கின்றான். ஆகையால் சேனாதிபதி உன் மணவிஷயத்தைப்பற்றி உன்னிடம் பேசும்பொழுது அவன் சொல்லும் இராஜகுமாரனை மணக்க முடியாதென்று கண்டிப்பாய்ச் சொல்லிவிடு. நீ தைரியமாய்ச் சொல். நானிருக்கின்றேன்.

வாஸந்திகை:—நான் மறுப்பதற்குக் காரணமென்னவென்று கேட்டால்?

கமலாஸனன்:—அதற்கும் ஓர்வழி சொல்லுகிறேன். நீ ஏற்கனவே உன் மணவாளனைத் தேர்ந்தெடுத்துவிட்டதாகச்சொல்லிவிடு! சந்திரகுப்தருடைய சந்ததி உன்னிடமிருந்தன்றோ பெருகவேண்டும்! இவ்வளவு கீர்த்திபெற்ற அரசருடைய சந்ததி அற்றுவிடுவது? கூடாது! ஆகையால் உனக்குத் தகுந்த மணவாளன் ஒருவனையும் நானே தேடிவந்திருக்கின்றேன். அவன் எல்லா இலக்ஷணங்களும் பொருந்தி

யுள்ளவன். உருவில் மன்மதனையொப்பான். பலத்தில் வீமனையொப்பான். எல்லாவற்றிற்கும் மேலாக மெச்சத் தகுந்தது அவன் குணம். உயர்குலத்திற் பிறந்து அதி செல்வமாய் வளர்ந்தவன். ஓர் நாளாயினும் உழைத்தறி யாதவன். உனக்குத் தகுந்த மணவாளன் அவனொருவன் தான். அவன் இன்னானென்று சொல்லவேண்டுமென்ப தும் இப்பொழுதே தெரிவிக்கின்றேன். சேனாதிபதி உன் மணவிஷயத்தைப்பற்றி உன்னிடம் பேசும்பொழுது நான் சொல்லும் புருஷனையன்றி வேறொருவரையும் மணக்கமுடி யாதென்று உறுதியாய்ச் சொல்லிவிடவேண்டும். நான் சொன்னபடி செய்வாயா?

வாஸந்திகை:—தாங்கள் யாரைக் குறிப்பிட்டுப் பேசுகிறீர்களெ ன்பது அறியக்கூடவில்லையே!

கமலாஸனன்:—என்ன! நான் சொல்லியதிலிருந்து யூகிக்கமுடிய வில்லையா? நான் விவரித்தபடியெல்லாமிருக்கும் சுந்தரபுரு ஷன் என் மைந்தனான பிரதாபனேயன்றி வேறு யார்? நீயும் அவனைப் பார்த்திருக்கிறாயே!

வாஸந்திகை:—(தனக்குள்) இப்பொழுதன்றோ இவனுடைய நோக்கம் வெளியாகிறது! சிங்காதனம் அபகரிக்க யத்தனிப்ப வன் சேனாதிபதியல்லன்———இவன்தான்! இவன் சேனாதி பதியைப் பற்றிச் சொல்லியவெல்லாம் இவனுக்கே பொருந் தும்போலிருக்கிறதே! எனினும் இவனிடத்தில் நமக்கெ ன்ன பயம்? என் மனதிலிருப்பதைச் சொல்லிவிட்டா லென்ன? என்பேரில் இவனுக்குக்கோபம்வந்தாலும் என்னை என்ன செய்யமுடியும்? இதற்காகவா இவ்வளவு பீடிகை! பேஷ்!

கமலாஸனன்:—பெண்ணரசியே, ஏன் மௌனமாயிருக்கின்றாய்? நான் சொல்லியவண்ணம் செய்ய உனக்கு யாது ஆக்ஷே பனையிருக்கின்றது?

வாஸந்திகை:—ஐயா, தாங்கள் வந்த சங்கதி இதற்காகவென்று முன்னமேயே தெரிந்திருந்தால் நான் இவ்வளவுநேரம் தங்களுடன் உரையாடித் தங்களைச் சிரமப்படுத்தியிருக்க மாட்டேன். எனினும் நான் சொல்லவேண்டுவதைச்சொல்லிவிடுகிறேன். முதலில், எனக்குக் கலியாணம் செய்து வைக்கக் கடமைப்பட்டவர்கள் தாங்களல்ல. நான் சொல்வதிற் கோபங்கொள்ளக்கூடாது. தாங்கள் இவ்விஷயத்தில் சிரமப்படவேண்டிய அவசியமேயில்லை. ஆயினும், என் நன்மையைக்கருதி இவ்வளவு பிரயாசை எடுத்துக்கொண்டதற்கு அனேக வந்தனம். சேனாதிபதி கொடியவரென்பதையும், என் பிதா மாண்டுவிட்டாரென்பதையும் நான் நம்பவில்லை. என் தந்தை எப்படியும் திரும்பிவந்துவிடுவாரென்று என் ஹிருதயத்தில் ஏதோ சொல்லுகிறது. ஆகையால் அவர் வந்த பிறகுதான் நான் என் கலியாணத்தைப் பற்றி யோசிக்கப்போகிறேன். ஆனாலொன்று, தங்கள் குமாரருக்கு நான் காதலியாகி வாழ்தல் அசாத்தியமான காரியம். ஏனெனில், என்பர்த்தாவை நான்முன்னமேயே நிச்சயம்செய்துவிட்டேன்! இனிமேல் திருமூர்த்தியிலொருவரல்லாது வேறு மனிதர்கள் என் சித்தத்தைக் கலைக்கமுடியாது! இவ்வளவுநேரம் நானிங்கிருந்து பேசியதே தவறு என்று எனக்குத் தோன்றுவதாலும், எனக்கும் வேறு வேலையிருப்பதாலும் நான் சென்று வருகிறேன்.

(செல்லயத்தனித்தல்)

கமலாஸனன்:—(ஆச்சரியத்துடன்) வாஸந்திகா! வாஸந்திகா! ஒரே வார்த்தை! ஒரேகேள்வி! அதற்குமாத்திரம் பதிற்சொல்லிவிட்டுப் போ!

வாஸந்திகை:—என்ன அது?

கமலாஸனன்:—நீ தேர்ந்தெடுத்திருக்கும் உன் பர்த்தாவின் பெயரை மாத்திரம் சொல்லக்கூடாதா?

வாஸந்திகை:—அது உமக்கென்ன அவருக்கேதாவது தீங்கிழைக்கவா?

கமலாஸனன்:—வாஸந்திகா, நீ என்னைக் கொடியவனென்றல்லவோ நினைத்துவிட்டாய்! நான் உன் பர்த்தாவுக்குத் தீங்கிழைப்பேனா? உன் பர்த்தாவின் பெயரை மாத்திரம் சொல்லக்கூடாதா?

வாஸந்திகை:—சொல்லித்தான் தீரவேண்டுமோ?

கமலாஸனன்:—தயவுசெய்து சொல்லென்றல்லவோ வேண்டிக்கொள்ளுகின்றேன்!

வாஸந்திகை:—(தனக்குள்) சொன்னால்தானென்ன? புருஷோத்தமருடைய பெயரைச்சொன்னால் இந்த அயோக்கியனைப் பதின்மடங்கு அவமானம் செய்ததாகுமே! ஆ! அதுதான் சரி. என் பர்த்தாவின் பெயரையும் சொல்லிவிட்டு அவரிடமும் இவன் சொல்லியவெல்லாம் சொல்லிவிடுகிறேன். அதுதான் சரி.

கமலாஸனன்:—சொல்லமாட்டாயா, வாஸந்திகா!

வாஸந்திகை:—அதையும் சொல்லிவிடுகிறேன். நான் தேர்ந்தெடுத்திருக்கும் என் பர்த்தாவின் பெயர் புருஷோத்தமர் என்பது. ஆனால் அவர் இப்பொழுது இங்கில்லை. உதயகிரி சென்றிருக்கிறார். நான் சென்று வருகிறேன்.

கமலாஸனன்:—யார்! புருஷோத்தமனா! யார்! அந்தத் துரோகி வாத்ஸல்யனுடைய குமாரனா?

வாஸந்திகை:—துரோகி வாத்ஸல்யனுடைய குமாரனல்ல. வாத்ஸல்யப் பிரபுவினுடைய குமாரர்! தங்களுக்கென்ன இவ்வளவு கவலை? யாராயிருந்தால தங்களுக்கென்ன!

(சுலக்ஷணாவுடன் அந்தப்புரத்திற்குட் சென்றுவிடல்)

கமலாஸனன்:—(தனக்குள்) ஆ! என்னுடைய தந்திரமெல்லாம் இவளிடத்திற் பலிக்கவில்லையே! இதென்ன வாச்சரியம்? இசசிறுமியா என்னை இங்ஙனம் இகழ்ந்து பேசுவது!

இவளும் இப்படிச் சொல்வாளென்று நான் கனவிலும் நினைக்கவில்லையே! சேனாதிபதியோ வாஸந்திகையின் மண விஷயத்தில் நான் சொல்வதைக் கேட்கமாட்டேனென்கிறான்! இவளோ புருஷோத்தமனை மணக்கப்போகிறாளாம்! இது எவ்வாறு முடியும்? மேலும், அந்தப்பாவி வாத்ஸல்ய னுடைய குமாரனா இந்நகர் அரசனாவது? நானதை எவ்வாறு சகிப்பேன்! நான் செய்த சூழ்ச்சிகளெல்லாம் எதற்காக? வாத்ஸல்யனையும் இராணியையும் அரசனுடைய கோபாக் கினிக்கிரையாக்கியும், இந்தச்சேனாதிபதியும் வாஸந்திகை யுமா என் எண்ணம் கைகூடாமற் செய்துவிடுவது? இவ்வ ளவு உழைத்தும், கஷ்டப்பட்டும், நஷ்டப்பட்டும், என் எண்ணம் வீணாவதா? முடியாது! முடியாது! எப்படியும் என் எண்ணத்தை முடித்தே தீரவேண்டும்! ஜயபாலனை யொத்த சமர்த்தர்களிருக்கும்வரை எந்தக் காரியத்தைத் தான் செய்ய முடியாது?—ஆ! இப்பொழுது என்ன செய்ய லாம்? (சற்று யோசித்தல்) மறுபடியும் சேனாதிபதியிடம் சென்று இவ்விஷயத்தைப்பற்றிப் பேசினாலென்ன?—சீ, அது பெரும் பேதமை! அவன் முன்னிலும் துடுக்காகப் பதிலளிப்பானென்பதிலையமில்லை. மேலும், வாஸந்திகை அவனிடஞ்சென்று நான் இன்றுரைத்த விஷயங்களைச் சொல்லிவிட்டாலென்செய்வது? நம்மிருவருக்கும் பகிரங்க மாக மனஸ்தாபம் ஏற்பட்டுவிடுமே!———ஆ! ஏற்பட்டால் தானென்ன! இனி நானும் அந்தப்பாவியும் சிநேகமாயிருத் தல் எவ்வாறு சாத்தியம்? இவனுடன் நமக்கென்ன நட்பு வேண்டியிருக்கிறது! (சற்றுயோசித்துப் பிறகு) ஆ! இச்சே னாதிபதியொருவன் இருக்கும்வரையில் நம் காரியம் நிச்சயம் நிறைவேறாது! இவனைத் துலைத்துவிட்டால்!——— ஆ! பிறகு சிங்காதனம் என்னைச் சேர்ந்ததேயன்றோ? ஆ! அது தான் சரி! நான் அரசனானபிறகு என்னிஷ்டத்திற்கு மாறாக யார் நடந்துகொள்ளுகிறார்களென்று பார்க்கின்றேன்! அது தான் சரி! இந்தச் சேனாதிபதியைக் கொன்றுவிட்டுப்பிறகு சிங்காதனத்தைக் கைப்பற்றவேண்டியதுதான்! வேறுவழி

யில்லை. ஹே காளிதேவி! நான் செய்ய எண்ணும் கொலையைப் பிறர் கண்டுகொள்ளாவண்ணம் நீதான் அருள் புரியவேண்டும்! ஹே, பராசக்தி! இதுவரை என் முயற்சிகள் கைகூடுமாறு அநுக்கிரகம் செய்ததுபோல், இவ்விஷயத்திலும் அருள் புரியவேண்டும்!

ஆ! அதுதான் சரி. சந்திரகுப்தனும் மாண்டுபோயிருக்கத்தான் வேண்டும். ஓர்கால் உயிருடனேயே யிருப்பினும், நான் சிங்காதனத்தைக் கைப்பற்றியபின் ஓர் பெருஞ் சேனையைத் திரட்டிக்கொண்டு தயாராயிருக்கிறேன்! அரசர் வரின் அவருடன் போர்புரிந்து அவரைத் தோற்கடிக்கிறேன்! சிங்காதனத்தை யபகரித்தபின், வாஸந்திகை இன்றுரைத்த மறுமொழிக்குச் சரியான பதில் வாயால் சொல்லாவிட்டாலும் காரியத்தால் காட்டுகிறேன். ஹூம்! இருக்கட்டும். உடனே ஜயபாலனிடம் சென்று, அவனுக்கு இன்னும் கொஞ்சம் பணத்தையழுதுவிட்டு அவனுடன் ஆலோசித்துச் சேனாதிபதியைக்கொல்ல சரியான ஓர் சூழ்ச்சி செய்கிறேன்!

(செல்லல்.)

**காட்சி முடிகிறது.**

---

## அங்கம் IV.

## களம்—I.

### புஷ்பபுரம்—அரண்மனையிலோர் அறை.

(புருஷோத்தமன் பிரவேசித்தல்.)

புருஷோத்தமன்:—தெய்வமே, நானிப்பொழுது என்னசெய்வது? நாளைப்பொழுது விடிந்தால் சேனாதிபதியின் உயிருக்கு ஹானி வந்துவிடுமே! அந்தத்துரோகி கமலாஸனனுடைய சூழ்ச்சியை எவ்வாறு தடுப்பது? அடடா, இப்பொழுது தோட்டக்காரனை வேடம்பூண்டிருப்பதாலன்றோ சேனாதிபதியிடம் சென்று கமலாஸனனுடைய சூழ்ச்சியைச்சொல்லி

விடத் தயங்கவேண்டியிருக்கின்றது! தயங்காமற் சொல்லி விடுவோமெனின், பின்னால் நான் யாரென்பதைப்பற்றி விசாரிக்க ஹேதுவுண்டாகுமே! அப்பொழுது, எனக்கும் வாஸந்திகைக்குமிருக்கும் நேசம் வெளிப்பட்டுவிடுமே! என் சுயரூபத்தோடு சென்று சொல்லலாமெனினும், நான் உதயகிரிக்குச் சென்றிருக்கிறேனென்று எல்லோரும் நினைத்துக்கொண்டிருக்கையில் எவ்வாறு இந்நகரில் திடீரென்று தோன்றுவது?——ஆ! எனக்கோர் உபாயம் தோன்றுகின்றது. சேனாதிபதியோ இந்த அறைக்கு இன்னும் ஒரு நாழிகையில் வந்துவிடுவார். நான் சொல்லவேண்டுவதைச் சங்கிரகமாக இச்சுவற்றின்பேரில் கரியினால் எழுதிவிட்டாலென்ன? அதுதான் சரி. பெரிய எழுத்துக்களில் எழுதிவிட்டு, ஒளிந்திருந்து, சேனாதிபதி என்ன செய்கிறாரென்பதைப் பார்க்கின்றேன். கமலாஸனனுடைய செயல்களை இரகசியமாகக் கவனித்ததும் வீண்போகவில்லை. (கரியினால் சுவற்றின்பேரில் சிற்சில வார்த்தைகளை எழுதிவிட்டு ஒளிந்துகொள்ளல்)

(சேனாதிபதியும் ஸர்தாரும் பிரவேசித்தல்.)

சேனாதிபதி:—ஸர்தார், நான் வந்ததைக்கூட கவனியாமல் வெளியில் மறைந்து நின்றுகொண்டு அவ்வளவு ஊக்கத்துடன் உள்ளே என்ன பார்த்துக்கொண்டிருந்தீர்?

(ஸர்தார் சுவற்றைப்பார்க்க,)

சேனாதிபதி—(சுவற்றிலிருந்த வாக்கியத்தைப்பார்த்து ஆச்சரியத்துடன்) ஸர்தார்! இதென்ன விந்தை! இச்சுவற்றின்பேரில் இங்ஙனம் யார் எழுதினது? என்ன எழுதப்பட்டிருக்கிறது?

(படித்தல்)

ஹே சேனாதிபதி! சந்திரகுப்த மன்னருடைய இராஜ்ஜியம் நிலைதலையாமலும், உன்னுடைய ஆயுளும் இன்றிரவோடு முடிவடையாமலும் இருக்கவேண்டுமாயின் இந்தக்கணமே மந்திரி கமலாஸனனுடைய கிரஹத்தை உப்பரிகைமுதல் அஸ்திவாரம் வரையில் பரிசோதித்துப்பார்!

"தேவதூதன்"

ஸர்தார்! ஸர்தார்! இதென்ன இது! எனக்கொன்றும் விளங்கவில்லையே! இதென்ன இது! தேவதூதனா!

(ஓர் சேவகன் பிரவேசித்தல்)

சேவகன்:—மகாராஜ், அரண்மனைக்கு ஓர் கனவான் வந்திருக்கிறார். அவர் வெகு அவசரமாக ஏதோ ஓர் முக்கியமான விஷயத்தைப்பற்றி உடனே மகாராஜாவிடம் பேசவேண்டுமென்கிறார். இதோ அறையின் வெளிப்புறத்தில் காத்துக்கொண்டிருக்கிறார்! அவரை உள்ளே அழைத்து வரட்டுமா?

சேனாதிபதி:—ஸர்தார்! இன்று நடக்கும் விஷயங்களெல்லாம் மிகவும் ஆச்சரியமாயிருக்கின்றனவே! இவ்வளவு அவசரமாக என்னைப்பார்க்க யார் வந்திருக்கக்கூடும்? (சேவகனைப் பார்த்து) சேவகா, யாராயிருந்தாலும் உடனே வரச்சொல்?

(சேவகன் செல்ல விசித்திரவீரியன் பிரவேசித்தல்)

யார்! விசித்திரவீரியரா! வாருங்கள்! இந்நாற்காலியிலமருங்கள்! என்ன விசேஷம்?

விசித்திரவீரியன்:—மகாராஜ், நான் சொல்லவந்த விஷயம் வெகு இரகசியமானது! இங்கு சொன்னால் பிறருடைய காதுகளில் விழாதே!

சேனாதிபதி:—அவ்விஷயத்தில் தாங்கள் பயப்படவேண்டாம்! தாங்கள் சொல்லவேண்டுவதைச் சீக்கிரம் சொல்லுங்கள்.

விசித்திரவீரியன்:—ஐயா தங்களுயிர் அபாயத்திலிருக்கின்றது! இந்த இராஜ்ஜியமும் நிலைகுலைந்துவிடும் போலிருக்கிறது!

சேனாதிபதி:—இதென்ன விபரீதம்! தாங்களும் இவ்விதம்சொல்வது ஆச்சரியமாகவன்றோ இருக்கின்றது! ஐயா, இன்று திடீரென்று இச்சுவற்றின்பேரில் இவ்வெழுத்துக்கள் தோன்றியிருக்கின்றன! அவைகளைப் படித்துப்பாருங்கள்!

விசித்திரவீரியன்:—மகாராஜ், இதென்ன ஆச்சரியம்! நான்சொல்லவந்த விஷயமே இச்சுவற்றிலும் எழுதப்பட்டிருக்கின்றதே!

சேனாதிபதி.—ஐயா, தயவுசெய்து விஷயங்களை விவரித்துரைக்க வேண்டும்!

விசித்திரவீரியன்:—சொல்லுகிறேன். அமைச்சரான கமலாஸனன் தங்கள்பேரில் பகை கொண்டிருக்கின்றார்! ஆகையால் தங்களைக்கொன்று இந்நகர் சிங்காதனத்தை யபகரிக்க எண்ணங் கொண்டிருக்கிறார்! அவர் தங்களைக் கொல்லச் செய்திருக்கும் சூழ்ச்சியைத் தங்களிடம் தெரிவிக்கத்தான் இங்கு ஓடி வந்தேன்.

சேனாதிபதி:—என்னைக்கொல்லவா! அவர் செய்திருக்கும் சூழ்ச்சி யாது? சிக்கிரம் தெரிவியுங்கள்!

விசித்திரவீரியன்:—தங்கள் மாளிகை கமலாஸனருடைய மாளிகைக்கு அடுத்தாற்போன்றிருக்கின்ற தல்லவா? தாங்களும் அநுதினமும் இராஜகாரியங்களானதும் தங்கள் மாளிகைக்குத் திரும்பிச் சென்றுவிடுகின்றீர்களல்லவா? ஆகையால், தங்களைத் தங்கள் மாளிகையிலேயே கொன்றுவிட உத்தேசங்கொண்டு, கமலாஸனன் தன் மாளிகையிலிருந்து ஆரம்பித்துத்தங்கள் மாளிகையில், தங்கள் அறையினடியில் தங்களுக்குத் தெரியாமல், ஓர்பெரும் சுரங்கம் வெட்டியிருக்கின்றார். அச்சுரங்கத்தில் பெரும்தூண்களை நிறுத்தியிருப்பதால் தங்களறையின் தரை பலமாக இருக்கின்றது. தாங்கள் அவ்வறையிலிருக்கையில் தூண்களைத் தட்டிவிட்டால், தங்களடியிலிருக்கும் தரை பிளந்து தாங்கள் அப்பெருஞ்சுரங்கத்தில விழுந்துவிடுவதுடன் தங்கள் மாளிகையின் ஓர்பாகமும் இடிந்து தங்கள்மேல் விழுந்து மூடிவிடுமாகையால், அவ்விதம் தங்களைக் கொல்வதற்காகச் சகல ஏற்பாடுகளையுஞ் செய்திருக்கின்றார். அதற்கும் நாளையதி

ணம் நாள் பார்த்திருக்கின்றார். இதையறிந்தகணமே தங்களை எச்சரிக்கவேண்டுமென்று ஓடிவந்தேன். ஆனால் அதற்குமுன் கடவுளே தங்கள்பேரில் கருணைகூர்ந்து தன் தூதனை யனுப்பியிருக்கிறார் போலும்!

சேனாதிபதி:—என்னருமைப்பிரபு, என்மீது இவ்வளவு விசுவாசமாய்த் தாங்கள் செய்திருக்கும் இப்பேருபகாரத்தை நான் என் ஆவியுள்ளளவும் மறக்கமாட்டேன். இதற்காக நான் தங்களுக்கு யாது கைம்மாறு செய்யப்போகின்றேன்?—— யார் சேவகா!

(சேவகன் பிரவேசித்தல்)

சேனாதிபதி:—நீ சென்று இன்னும் ஐந்துநிமிஷங்களுக்குள் ஐம்பது போர்வீரர்களை ஆயுதபாணிகளாக இங்கழைத்துவரும்படி ஜமேதாரிடம் சொல். ஜனூர்!

(சேவகன் செல்லல்)

(விசித்திரவீரியனைப்பார்த்து) ஐயா, தாங்கள் இன்று எனக்கு உயிர்ப்பிச்சை கொடுத்தீர்கள்! நான் என் போர்வீரர்களைக் கொண்டு முதலில் கமலாஸனனைச் சிறை செய்கின்றேன். பிறகு அவனுடைய மாளிகையைப் பரிசோதிப்போம். சுரங்கம், தூண்கள் முதலியன காணப்படின், அவனைப் பகிரங்கமாக நியாயசபையில் நிறுத்தி விசாரித்துத் தகுந்ததண்டனை விதிக்கின்றேன்.

விசித்திரவீரியன்:—அப்படியே செய்யுங்கள். தாங்கள் பின்னுமொருகாரியமும் செய்யவேண்டும். இந்தச் சூழ்ச்சியில் கமலாஸனனுடைய கூட்டாளியான ஜயபாலனென்பவனையும் சிறைசெய்து அவனுடைய கிரஹத்தையும் பரிசோதிக்கச் சொல்லவேண்டும்.——

சேனாதிபதி:— தாங்கள் சொல்லும் வண்ணம் அந்த அயோக்கியனையும் சிறை செய்கிறேன்! அவனையும் நியாய சபையில் நிறுத்தி விசாரித்துத் தகுந்ததண்டனை விதிக்கின்றேன்!—

ஆ சந்திரகுப்தமன்னர் வந்துவிடக்கூடாதா! வந்துவிட்டால் எனக்கு இந்தக்கவலைகளெல்லாம் ஒருவாறு ஒழியுமே! மேலும் என்னையே கொல்லயத்தனித்தவர்களை நானே விசாரித்துத்தண்டிப்பதெனில் அது அவ்வளவு சரியன்று.

விசித்திரவீரியன்:—மகாராஜ், நான் விடைபெற்றுக்கொள்ளுகிறேன். தான் சிறைபடுவதற்கு முன் நானிங்கிருந்தேனென்று கமலாஸனர் அறிவரேல், நான்தான் அவரைக்கெடுத்தவனென்று என்பேரில் வீண் மனஸ்தாபங்கொள்வார். ஆகையால், இப்பொழுது நானிவ்விஷயத்தில் மறைந்திருத்தலே நலம்.

சேனாதிபதி:—பிரபு, அப்படியே செய்யுங்கள். தாங்கள் செய்த உதவிக்கு நான்யாது கைம்மாறு செய்யப்போகின்றேன்!

விசித்திரவீரியன்:—நான் என் கடமையைச் செய்தேனேயன்றி வேறு என்ன பிரமாதமாகச்செய்துவிட்டேன்? நான் சென்று வருகிறேன்.

(செல்லல்)

சேனாதிபதி:—ஸர்தார், சந்திரகுப்தமன்னர் சென்றபொழுது கமலாஸனன் ஓர் கொடுந்தன்மையுள்ளவனென்றும், அவனுடைய செயல்களைக்கவனித்தலே நலமென்றுஞ் சொல்லிவிட்டுப் போனதை முற்றும் மறந்தேன்! மேலும் கமலாஸனன் எனக்கேதாவது தீங்கிழைத்தாலுமிழைக்கலாமென்று வாஸந்திகை பயந்து என்னை எச்சரித்ததையும் மறந்தேன். தெய்வாதீனமாய் கடவுள் என்மீது கருணைகூர்ந்து தேவதூதனையும் விசித்திரவீரியனையும் என்னை இவ்வாபத்தினின்றும் விடுவிக்க அனுப்பியிருக்கிறார். இல்லாவிடில், என் ஆயுள் இன்றிரவோடு முடிவடைந்திருக்கும். இருக்கட்டும். அவ்விருபாதகர்களையும் உடனே சிறைசெய்து அவர்களுடைய மாளிகைகளைப் பரிசோதிப்போம். (தனக்குள்) ஹே! ஜகதீச்வரா!

ஸர்தார்:—மகராஜ்! இதையெழுதியது யாரென்று நினைக்கிறீர்கள்?

சேனாதிபதி:—ஸர்தார், அதுதான் தெரியவில்லை. தேவதூதனென்று கையொப்பமிட்டிருப்பதாலும், இவ்வெழுத்துக்கள் திடீரெனத் தோன்றுவதாலும் இவை தெய்வத்தன்மையுடைத்தனவாயிருக்கவேண்டுமென்று நம்புகிறேன்.

ஸர்தார்:—மகாராஜ், நான் சொல்வதைச் சற்றுகாதுகொடுத்துக் கேட்கவேண்டும். இவ்வெழுத்துக்கள் தெய்வத்தன்மை பொருந்தியனவன்று. நான் சற்றுமுன் வெளியில் மறைவாக நின்று உள்ளே நடப்பதைக்கவனித்துக்கொண்டிருக்கவில்லையா? அப்பொழுது ஒருவன் இவ்வறையில் நுழைந்ததைப் பார்த்தேன். அவன் இவ்வாக்கியங்களை இச்சுவற்றில் எழுதியதையும் பார்த்தேன். அவன் எதற்காக இப்படியெழுத வேண்டுமென்பது எனக்கு விளங்கவில்லை. அவன் எழுதிவிட்டு என்ன செய்கிறானென்பதைப்பார்க்கவே மறைவாக நின்று பார்த்தேன். அதற்குள் ——

சேனாதிபதி:—நீர் சொல்வது ஆச்சரியமாயிருக்கின்றது. இவ்வாக்கியத்தை எழுதிய மனிதன் யாரென்பது உமக்குத்தெரியுமோ? பார்வைக்கு அவன் சாதாரண மனிதனைப்போலிருந்தானோ, அல்லது தேவதூதனைப்போலத்தோன்றினானோ?

ஸர்தார்: மகாராஜ். இதை எழுதியவனை நான் நன்கறிவேன். அவன் தேவதூதனுமல்ல, ஒன்றுமல்ல! இராஜகுமாரியவர்களின் உய்யான வனத்தில் வேலைசெய்யும் கண்ணன்தான் இவ்வுகளை யெழுதினான்.

சேனாதிபதி: –(ஆச்சரியத்துடன்) என்ன! கண்ணனா! யாரவன்? கண்ணனா? அவன் எங்கே?

ஸர்தார்:—மகாராஜ், கண்ணன் இதையெழுதிவிட்டு இக்கதவின் பின்னால்தான் ஒளிந்துகொண்டிருக்கிறான். இதோ அவனைக் கொண்டுவருகிறேன்.

(சென்று கதவின்பின்னிருந்த புருஷோத்தமனை இழுத்துக்கொண்டு வரல்.)

சேனாதிபதி:—அடா, உன் பெயர் கண்ணனா? அரண்மனைத்தோட்டத்தில் வேலை செய்பவனா?

புருஷோத்தமன்: ஆமா, ஆண்டவரே—

சேனாதிபதி:—அடே கண்ணா, ஏதாவது என்னிடம் தெரிவிக்க வேண்டியிருந்தால் என்னிடம் நேராகச் சொல்வதற்கென்ன? ஏன் இப்படிப்பொய்யாக தேவதூதனெழுதியதாக இச்சுவற்றின்பேரில் எழுதவேண்டும்? நீ இவ்வாறு செய்ததின் நோக்கமென்ன?

புருஷோத்தமன்:—ஆண்டவரே, அந்த மந்திரி கமளாசனருடைய சூழ்ச்சியெள்ளாம் சேவுகப்பயல் நான் சொன்னா நம்பமாட்டீங்களேன்னு இப்படி எழுதினேன்.

சேனாதிபதி:—அடே——இரு——உன் குரல் எனக்கு மிகவும் பழக்கமான குரலாகவன்றோயிருக்கின்றது! இங்கே சமீபத்தில் வா!

(கண்ணன் முகத்தை உற்றுநோக்கி)

யார், புருஷோ—த்தமா!

புருஷோத்தமன்:—(தனக்குள்) ஆ! தெய்வமே! நானிப்பொழுது என்ன செய்வேன்? இப்பொழுது எல்லாம் வெளிப்பட்டு விடுமே! நான் என்ன செய்வேன்!

சேனாதிபதி:—புருஷோத்தமா, ஏன் மௌனமாயிருக்கிறாய்? நீ எதற்காக இத்தோட்டக்காரன் வேடம் போட்டுக்கொள்ள வேண்டும்? என்ன விஷயம்? ஒன்றையும் ஒளிக்காமற்சொல்.

புருஷோத்தமன்:—மகாராஜ், கமலாஸனனுடைய செயல்கள் எனக்குச் சந்தேகத்தை விளைவித்ததால் அவைகளைக் கவனிக்க முயன்றேன். ஆனால் என் சுயரூபத்தோடு கவனிப்பதைக்காட்டிலும் சேவகனாக வேடம்பூண்டு கவனித்தால் ஒருவரும் என்பேரில் சந்தேகங்கொள்ளாமலிருக்க ஹேதுவிருக்குமென்று இவ்வேடம் பூண்டேன். அவ்வளவுதான்.

ஸர்தார்:—மகாராஜ், இவர் சொல்வது சரியான காரணமாகத் தோன்றுகிறதா? பெரிய மகாராஜா அவர்கள் செல்வதற்கு முன்னாலேயே இவர் தோட்டக்காரனாக அரண்மனைக்கு வந்துவிட்டாரே!

சேனாதிபதி:—புருஷோத்தமா! இதென்ன நீ இத்தாழ்ந்த உடையைத்தரித்ததுமன்றி, கீழ்க்குடியிற் பிறந்தவனைப்போல் பொய்யையும்சொல்ல ஆரம்பித்துவிட்டாயே! சந்திரகுப்த மன்னர் இங்கிருந்தபொழுதே நீ தோட்டக்காரனாக வந்துவிட்டாயாமே! உன் தந்தை சிறைசெய்யப்பட்ட பிறகு நீ உதயகிரி சென்றதாகவன்றோ சொன்னார்கள். அப்படியிருக்க, நீ இவ்வேடத்துடன் இங்கிருக்கக் காரணமென்ன?

புருஷோத்தமன்:—மகாராஜ், நான் உதயகிரி சென்றது வாஸ்தவந்தான். ஆனால் நான் சென்றபொழுது என் பாட்டி சௌக்கியமாகவேயிருந்தாள். அவளுக்கு உடம்பு அசௌக்கியமாயிருந்ததாகக் கடிதம் எழுதவேயில்லையென்று அங்குள்ளோர் சொன்னார்கள்! ஆகையால் நான்———

சேனாதிபதி:—ஆ! அப்படியா! அடடா! உன் தகப்பன் மகாபாதகனென்பது இப்பொழுது நிச்சயமாயிற்றே! சந்திரகுப்த மன்னர் காரணமில்லாமலா ஒருவரைச் சிறையிலிடுவார்! உன் தந்தை ஒருக்கால் குற்றமற்றவராயிருந்தாலுமிருக்கலாமென்று சிற்சில சமயங்களில் எண்ணினேன்! ஆ! தன் தாயார் சௌக்கியமாயிருக்கும்பொழுதே அவள் மரணவேதனைப்பட்டுக் கொண்டிருந்ததாகக் கடிதம் வரவழைத்துத் திருட்டுத்தனமாக உஜ்ஜைனி செல்ல யத்தனித்தவனன்றோ உன் தகப்பன்! சரி, இருக்கட்டும். நீ சொல்ல வேண்டுவதைச் சீக்கிரம் சொல்!

புருஷோத்தமன்:—மகாராஜ், நான் இன்று தங்களுயிரைக் காப்பாற்ற முயன்றேனென்பதையுத்தேசித்து, நான் உண்மையைச் சொன்னபிறகு, நான் பிசகு செய்திருப்பதாகக்

காணப்படினும் என்னை மன்னிப்பதாகச் சொன்னால் எல்லாம் சொல்லிவிடுகின்றேன்!

சேனாதிபதி:—இல்லாவிட்டால் சொல்லமாட்டாயோ? அயோக்கியப்பயலே! என்னுடன் விளையாடுகிறாயோ! எனக்குவெகு அவசரமான வேலையிருக்கிறது. எதற்காக இவ்வேடம் பூண்டாய்? சீக்கிரம் சொல்! சொல்லாவிட்டால் உன்னை உயிருடன் உரித்துவிடச் சொல்லுவேன்! உஷார்!

புருஷோத்தமன்:—மகாராஜ், கோபங்கொள்ளக்கூடாது—என்னை மன்னிக்கவேண்டும்! நான் ஒரு பாவமுமறியேன்! என் தந்தை என்ன குற்றம் செய்தாரென்பதே எனக்குத் தெரியாது! மகாராஜ்——

சேனாதிபதி:—புருஷோத்தமா! இந்தக் கதையெல்லாம் இப்பொழுது எதற்காகச் சொல்லுகிறாய்! நான் கேட்ட கேள்விக்குப் பதிற்சொல்லுகிறாயா யென்ன!

புருஷோத்தமன்:—மகாராஜ், உண்மையைச்சொல்லிவிடுகிறேன்! என்னை மன்னிக்கவேண்டும்! மகாராஜ், (மண்டி போட்டுக்கொண்டு) மகாராஜ், அனேக வருடங்களாய் நான் வாஸந்திகையை நேசிக்கின்றேன்! மகாராஜ், அவளும் என்னைத்தன்னுயிரினும் மேலாக நேசிக்கிறாள்! ஆனால், நம்மிருவருக்குமிருக்கும் காதல் இந்தக் கணம்வரை ஒருவருக்குந்தெரியாது. என் தந்தை பிரதான வமைச்சராயிருந்தபொழுது நான் தாராளமாய் அரண்மனைக்கு வருவதும், நானும் வாஸந்திகையும் உய்யானவனத்தில் சந்திப்பதும் வழக்கமாயிருந்தது. ஆனால், என் தந்தை சிறை செய்யப்பட்டபின் நான் அரண்மனைக்கு வரமுடியாமலேயே போய்விட்டது. ஆகையால், தோட்டக்காரனைப்போல் வேடம் போட்டுக்கொண்டாகிலும் வாஸந்திகையைச் சந்திக்கலாமென்று——

சேனாதிபதி:—போதும்! போதும்! அடே அயோக்கியப்பயலே! மூடு உன்வாயை! இல்லாவிட்டால்———தெரியுமா! உன்

தந்தை படுபாவியென்றால் நீ கொலைபாதகனாயிருப்பாய் போலிருக்கிறதே!

புருஷோத்தமன்:—மகாராஜ், நான் முன்னமேயே கேட்டுக்கொள்ளவில்லையா? ——

சேனாதிபதி:—போதும்! நிறுத்து உன் பிரசங்கத்தை! உன்மானத்தை விற்றுவிட்டு இப்படிச் செய்ததுமன்றி இப்பொழுது என் மன்னிப்பையும் கேட்கிறாயே! உனக்கு வெட்கமாயில்லையா? சந்திரகுப்தமன்னர் இப்பொழுது இங்கிருந்தால் உன்னை இக்கணமே கழுவிலேற்ற உத்தரவளித்திருப்பார்! எனினும் இன்றையதினம் நீ என்னுயிரைக் காப்பாற்றியதால், உன்னை அதிகமாகத் தண்டிக்கப் போவதில்லை! உன் அயோக்கியத்தனத்தைக் கண்டிக்க வேண்டியிருந்தாலும் என்னிடத்தில் உனக்கிருக்கும் விசுவாசத்தை மெச்சவேண்டியதாயிருக்கிறது. ஆகையால் நான் சொல்வதைக்கேள். இனிமேல் நீ இந்த அரண்மனையண்டையிற்கூட வரக்கூடாது!

புருஷோத்தமன்:—ஆ! இது கடுமையான தண்டனையன்றோ? ஆ! இதைக்காட்டிலும் கடுமையான தண்டனை வேறு என்னவிருக்கின்றது?

சேனாதிபதி:—பேசுவதிற் பிரயோசனமில்லை! இனி நீ அரண்மனை சமீபத்திற்கூட வரக்கூடாது! வாஸந்திகையைப் பார்க்கவேண்டுமென்றாவது, அவளுடன் உரையாடவேண்டுமென்றாவது கனவிலும் எண்ணாதே' வாஸந்திகை உன் மனைவியாதல் இயலாத காரியம்! உன் தந்தையோ இராஜத்துரோகி! நீயோ அயோக்கியன்! நீயா வாஸந்திகைக்குத் தக்க மணவாளன்? போடா! மூடா! உடனே அரண்மனையை விட்டுச் செல்லடா! உன்னுடன் பேசவும் எனக்கு வெட்கமாயிருக்கின்றது!

புருஷோத்தமன்:—ஆ! தெய்வமே!—மகாராஜ்!

சேனாதிபதி:—ஏன் வீண்வாதம் செய்கிறாய்! உன்னுடன் வாதாட எனக்கிப்பொழுது அவகாசமில்லை! உடனே அரண்மனையை விட்டுச்செல்! மறுத்தால், ஓர் சேவகனைக்கொண்டு உன்னை வெளியில் பிடித்துத் தள்ளச்சொல்லுவேன்!———ஆனால் ஓர் விஷயம் சொல்லுகிறேன். கமலாஸனனுடைய கிரஹத்தைப் பரிசோதித்தபின் அவன் குற்றவாளியென்று காணப்படின், அவனைப் பகிரங்கமாக நியாயஸ்தலத்தில் நிறுத்தி விசாரிக்கவேண்டியிருக்கும். அப்பொழுது நீ உன் சுயரூபத்துடன் சாக்ஷிசொன்னால் அனேக கேள்விகள் கேட்கவேண்டிவரும். அப்பொழுது வாஸந்திகையைப்பற்றிய இச்சங்கதிகளெல்லாம் நியாய ஸ்தலத்தில் வெளிப்பட்டுவிடும்! ஆகையால் நீ தோட்டக்காரக் கண்ணனாகவேவந்து சாக்ஷி சொல்லவேண்டும்! உன் உண்மையான பெயர் ஒருவருக்கும் தெரியக்கூடாது! மேலும் இந்த விஷயங்களைப்பற்றி நீ ஊரில் ஏதாவது பிரஸ்தாபம்செய்தால் சிக்ஷிக்கப்படுவாய்! உஷார்! நான் சொன்னதெல்லாம் ஞாபகமிருக்கட்டும்! (ஸர்தாரைப்பார்த்து) ஸர்தார், யாதொரு காரணத்தை முன்னிட்டும் இவர் அரண்மனையில் ஓர் நிமிஷமேனும் இருக்க இடம் கொடுக்காதீர்!

(சென்றுவிடல்)

புருஷோத்தமன்:—ஆ! தெய்வமே! சேனாதிபதியை ஆபத்தினின்றும் விடுவிக்க முயன்றதற்கு இதுதானோ கைம்மாறு! ஆ, ஜகதீசா!

(ஸர்தார் புருஷோத்தமனை அழைத்துக்கொண்டு சென்றுவிடல்)

காட்சி முடிகிறது.

---

## அங்கம் IV.

### களம் 2. புஷ்டபுரம். ஓர்தெரு.

காலம்—காலை.

(சந்திரகுப்தன் மாறு வேடத்துடன் பிரவேசித்தல்)

சந்திரகுப்தன்:—(விசித்திரவீரியனைப்பார்த்து) ஐயா தயவுசெய்து நான்கேட்கும் சிற்சில கேள்விகளுக்கு விடையளிப்பீர்களா?

விசித்திரவீரியன்:—நீர் யார்? என்ன விஷயமாய் என்னை வினவப் போகின்றீர்.

சந்திரகுப்தன்:—

"அதிபதிரந்சித" என்றவர்ணமெட்டு. தாளம்: ஆதி.

கண்ணிகள்.

1. பாவலர் புகழ்ந்திடும் புஷ்பபுரம் போய்ப்
பார்க்க வேண்டிவந்த பரதேசி—(நான்)
பாரினிற் புலவர்கள் பாமாலை சூட்டிடும்
பார்த்திபன் பெயரைப் புகன்றிடுவீர்.

2. நாகரீக மான நாடுகளை நான்
நன்று நோக்கவந்த நாடோடி—(நான்)
நாடு நகரிலேன், நாதனற்றவன் நான்
நண்பரே, நானோர் நாடோடி.

(பாவலர்)

ஐயா, நானோர் பிரயாணி. இந்நகரின் பெருமையும், இந்நகர் அரசருடைய புகழும் எங்கும் பரவியுள்ளதால், நானே ஓர்முறை இந்நகரைப் பார்த்துவிட்டுச் செல்லலாமென வந்தேன். இந்நகரையாளும் அரசர் அதி நீதிமானோ?

விசித்திரவீரியன்:—ஐயோ, அந்தக்கதையை ஏன் கேட்கிறீர்கள்! அரசர் உஜ்ஜைனி நோக்கிப் படையெடுத்துச்சென்று சுமார்

இரண்டு வருடங்களாகியும் அவர் எவ்விடத்திலிருக்கின்ற ரென்பதே ஒருவரும் அறிகிலோம். உஜ்ஜைனி மன்னனைத் தோற்கடித்துவிட்டு ஸிந்துவில் ஸ்நாநம் செய்யச் சென்றவர் எங்கே வெள்ளத்திலகப்பட்டு மூழ்கி மாண்டுவிட்டாரோ வென்று குடிகள் அச்சப்படுகிறார்கள்.

சந்திரகுப்தன்:—அரசர்சென்று இரண்டு வருடங்களாகிறதெனில் இராஜ்ஜியபாரம் எவ்வாறு நடந்துவருகின்றது?

விசித்திரவீரியன்:—அதுவும் ஓர் பெருங்கதைதான். அரசர் நகர் விட்டுச் சென்றபொழுது இராஜ்பத்தைத் தன் சேனாதிபதியிடம் ஒப்புவித்துச்சென்றார். சேனாதிபதி மிகுந்த யோக்கியர். அரசரில்லாமையைப் பற்றிக்குடிகள் வருந்தாவண்ணம் வெகு சாமர்த்தியமாய்ச் செங்கோல் கோணமல் அரசாக்ஷி செய்துவருகின்றார். ஆனால், அவருக்கும் சத்துருக்களேற்பட்டு அவரை வாளுக்கிரையாக்க இருந்தனர்.

சந்திரகுப்தன்:—அதென்ன?

விசித்திரவீரியன்:—இந்நகரில் கமலாஸனனென்று ஓர் அமைச்சரிருந்தார். அவர்————

சந்திரகுப்தன்:—அவர் இப்பொழுது இல்லையோ?

விசித்திரவீரியன்:—இருக்கிறார். ஆனால் சிறையிலிருக்கிறார். கேளுங்கள். அவர் மிகக்கொடிய இராஜத்துரோகியாயிருப்பினும் வெளிப்பார்வைக்கு வெகு யோக்கியர் போலக் காட்டிக்கொண்டிருந்தார். அரசர் சென்று வெகுகாலம் வாராததால், அவர் ஸிந்துவில் மூழ்கி மாண்டுவிட்டாரென நம்பி சிங்காதனத்தை யபகரிக்கவேண்டுமெனும் பேராசை கொண்டு சேனாதிபதியைக் கொன்றுவிடுவதற்காக ஓர் சூழ்ச்சிசெய்திருந்தார். ஆனால் அது எவ்வாறோ சேனாதிபதிக்குத் தெரிந்துவிட்டது உடனே, கமலாஸனரையும், அவருடைய சூழ்ச்சியிற் சம்மந்தப்பட்டிருந்த ஜயபாலனென்பவனையும் சேனாதிபதி சிறை செய்துவிட்டார்! இந்த மாதம்

26-ம் தேதியன்று அவ்விருவரையும் பகிரங்கமாக நியாய ஸ்தலத்தில் நிறுத்தி விசாரித்து, அவர்களுக்குத்தகுந்த தண்டனை விதிக்கப்போகிறார்கள்.

சந்திரகுப்தன்:—நியாய சபைக்கு எல்லோரும் செல்லலாமோ ?

விசித்திரவீரியன்:—எல்லோரும் போகலாம். இம்மாதிரியான விசாரணை இதுவரை நடந்ததேயில்லை! இனியும் நடக்கப் போவதில்லை! ஆகையால், அன்றைய தினம் நியாயசபையில் அசாத்தியக்கூட்டம் கூடுமென்பதிலேயமில்லை.

சந்திரகுப்தன்: —அந்த நியாய சபைக்கு நானும் செல்லலாமோ? நான் அந்நியநாட்டு மனிதனாயிற்றே!

விசித்திரவீரியன்:—அதொன்றுமில்லை. யாராயிருந்தாலும் செல்லலாம்.

சந்திரகுப்தன்:—கமலாஸனர் என்பவர் அமைச்சரென்றீர்களே! அவர் என்ன அவ்வளவு கொடியவரா?

விசித்திரவீரியன்:—நன்றாயிருக்கிறது! அவர் எவ்வளவு சாமர்த்தியமாய் ஒருவருக்குந்தெரியாமல் சேனாதிபதியைக்கொல்ல யத்தனித்திருந்தார். எல்லாவற்றிற்கும் காரணம் இராஜ்ஜியத்தை யபகரிக்கவேண்டுமெனும் பேராசையன்றோ?

சந்திரகுப்தன்:—சேனாதிபதியும் இவ்விராஜ்ஜியத்தைக்கைப்பற்ற வேண்டுமெனும் எண்ணங்கொண்டிருப்பாரே?

விசித்திரவீரியன்:—ஒருக்காலுமில்லை! அரசர்வரவை அவர் ஒவ்வோர்கணமும் எதிர்பார்க்கிறார். அரசர் மரித்துப் போயிருக்கக்கூடாதென்றும், கொஞ்சம் காலதாமதமானபோதிலும், திரும்பித் தன் நகரடைந்து செங்கோல் செலுத்த வேண்டுமென்றும் அநுதினமும் கடவுளைப் பிரார்த்தித்து வருகின்றார்.

சந்திரகுப்தன்:—குடிகள் குறை கூறுவண்ணம் சேனாதிபதி அரசாக்ஷி செய்துவருகின்றாரா?

விசித்திரவீரியன்:—குடிகளிலொருவரேனும் சேனாதிபதி அநியாயமாய் ஓர் காரியத்தைச் செய்தாரென்று சொல்லத் துணியார்.

சந்திரகுப்தன்:—இப்பொழுது அரசர் இந்நகர் வருவரேல் சேனாதிபதி சிங்காதனத்தை அவரிடம் திரும்பி ஒப்புவிக்கத் தயாராயிருப்பாரோ?

விசித்திரவீரியன்:—அதில தடையென்ன! அரசர் காதவழிதூரத்தில் வந்துகொண்டிருக்கிறாரென்று கேள்விப்பட்டாலும், உடனே சென்று எதிர்கொண்டழைத்து உபசரிப்பாரென்பது திண்ணம்!

சந்திரகுப்தன்:—அரசர் திரும்பி வருவாரா? தங்கள் அபிப்பிராயமென்ன?

விசித்திரவீரியன்:—அரசர் திரும்பி வரவேண்டுமென்பதே என்னுடைய கோரிக்கை.

சந்திரகுப்தன்:—அரசர்—சேனாதிபதி, இவ்விருவருள் யார் இராஜ்ஜியபாரம் செய்யத்தகுந்தவர்? குடிகளுடைய அபிப்பிராயமென்ன?

விசித்திரவீரியன்:—இதெல்லாம் தங்களுக்கென்ன? தாங்கள் ஏன் இவ்வளவு ஆவலுடன் விசாரிக்கின்றீர்கள்?

சந்திரகுப்தன்:—இல்லை, குடிகள் அரசரை அதிகமாக நேசிக்கின்றார்களோ அல்லது சேனாதிபதியை அதிகமாக நேசிக்கின்றார்களோவென்பதை யறியவே கேட்டேன். வேறொன்றுமில்லை.

விசித்திரவீரியன்:—(சற்று இழப்புடன்) சேனாதிபதி—எவ்வளவு மேம்பட்டவரா யிருந்தபோதிலும், — — — * நமது சந்திரகுப்த மன்னருக்கு யார் ஈடாவர்?

* Vide Notes.

சந்திரகுப்தன்:— அப்படியா! அரசரென்றால் அப்படியன்றோ யிருக்கவேண்டும்! ஐயா, மிக்க வந்தனம். தங்களை யிது வரைச் சிரமப்படுத்தியதற்கு என்னை மன்னிக்கவேண்டும். நான் சென்று இந்நகர் அழகைக்கண்டு வியந்து பிறகு வேறு நகர் செல்கின்றேன்.

விசித்திரவீரியன்:— அப்படியே செய்யுங்கள். இந்நகர் வெகு அழகானது. நகருக்குத் தென்புறத்தில் ஓர் பெருந் தோப் பிருக்கிறது. *அசோக மகாராஜாவால் கட்டப்பட்ட அர ண்மனையையும் பார்த்துவிட்டுச் செல்லுங்கள். அந்தப் பளிங்குக் கட்டடத்தைப் போன்றகட்டடத்தை வேறு எங் கும் காணமுடியாது. நகருக்குத் தென்கிழககில் ஓர் பெரிய தடாகமும், அதன் பக்தியில் ஓர் மண்டபமும், தடாகத் தைச் சுற்றிலும் சோலைகளு மிருக்கின்றன. *புத்த சம யத்தோர்களுடைய மடங்களிரண்டையும் அவசியம் பாருங் கள். எல்லாம் வெகு அழகாயிருக்கும். சந்திரகுப்த மன் னருடைய *தலைநகர் அழகாயிருக்கக் கேட்கவும் வேண் டுமோ?

சந்திரகுப்தன்:—ஐயா, அனேக வந்தனம். நான் அப்படியே அவைகளை யெல்லாம் பார்த்து ஆனந்திக்கிறேன். ஆனால் நாம் பிரியுமுன்னர் தாங்கள் யாரென்பதைச் சொல்லவேண் டும்.

விசித்திரவீரியன்:—நான் விசித்திரவீரியனெனும் பெயர் பூண்ட வன். இந்நகர் பிரதான நகரத்தோர்களிலொருவன்.

சந்திரகுப்தன்:—ஐயா, விசித்திரவீரியரே, அனேக வந்தனம். நான் சென்றுவருகின்றேன்.

(இருவரும் பிரிதல்)

(தனக்குள்) நான் திரும்பி என் நகரடைந்தவுடன் கேள்விப் படும் செய்தி எனக்கே ஆச்சரியமா யிருக்கிறதே! விசித்தி ரவீரியன் சொன்னதைப்பார்த்தால், கமலாஸனன்,

---

*Vide Netes.

கொலைபாதகன் என்றல்லவோ தோன்றுகிறது! அவன் கொடியவனென்று எப்பொழுதும் எனக்கோர் சந்தேகமுண்டு. ஓர் கால், வாத்ஸல்யனையும் என் மனைவியையும் சிறைசெய்த விஷயத்திலும் அவன் என்னை மோசஞ்செய்திருப்பானோ? ஒன்றுந் தெரியவில்லையே! நான் வாத்தாமதமாகி விட்டபடியால், நான் உயிரிழந்து விட்டேனென்று எல்லோரும் நினைத்துக்கொண் டிருக்கிறார்கள் போலும்! என்ன விந்தை! எல்லாவற்றிற்கும், நான் முதலில் மாறு வேடத்துடன் என் தலைநகருக்கு வந்தது நலமாயிற்று. இருக்கட்டும். நான் சேனாதிபதியை நம்பியது தவறுதல்லவென்பதை யுணர்ந்தேன்! ஆனால் சிங்காதனத்தை மறுபடியும் பெற்றுக்கொள்ளுமுன், இந்தமாதம் 26உ நடக்கும் நியாயசபைக்கு மாறு வேடத்துடனேயே சென்று என்ன நடக்கின்ற தென்பதைக் கவனிக்க வேண்டும். விசித்திரவீரியன் சொன்னதைப் பார்த்தால் நியாயஸ்தலம் மிகுந்த கூட்டமாயிருக்குமென்பது திண்ணம். நான் இந்த வேடத்துடன் சென்றால் ஒருவருமென்னை மதியார்! நானும் கூட்டத்தில் ஒன்றுமே யறிய முடியாது. ஆகையால் என்னசெய்யலாம்? (சற்று யோசித்து) அதுதான் சரி. நான் ஓர் பெரிய மகரிஷியைப்போல் வேடம்போட்டுக் கொள்ளுகிறேன். அப்படிச்செய்தால் சேனாதிபதியே என்னை யுபசரித்து ஓர் ஆசனம் அளிப்பானென்பதில் தடையில்லை. ஆகையால் நடப்பதையெல்லாம் நன்றாகக் கவனிக்கலாம். பிறகு சமயோசிதம்போல் நடந்து கொள்ளுகிறேன்.

(செல்லல்)

காட்சி முடிகிறது.

---

# அங்கம் IV.

## களம்—3.

## புஷ்பபுரம்—நியாயஸ்தலம்.

காலம்—முற்பகல்.

(நியாயசபை கூடியிருத்தல்—சேனாதிபதி, வக்கீல்கள், சில கனவான்கள், எல்லோரும் அமர்ந்திருத்தல் - சந்திரகுப்தன் ஓர் யோகீஸ்வரரைப்போல் வேடம்பூண்டு ஓர் ஆஸனத்திலமர்ந்திருத்தல் - கமலாஸனனும் ஜயபாலனும் குற்றவாளிகளாய் நிற்றல்)

சேனாதிபதி: – (இராஜாங்க வக்கீலைப்பார்த்து) வக்கீலவர்களே, நியாயசபை கூடியிருக்கிறது. கமலாஸனரும் ஜயபாலனும் அதோ நிற்கிறார்கள். ஆகையால், விசாரணை நடவடிக்கைகளை நடத்தலாமே?

வக்கீல்:—கமலாஸனா! ஜயபாலா! சபையோர்களே! எல்லோரும் கவனமாய்க் கேளுங்கள். சந்திரகுப்த மன்னர் ஸிந்துவில் நீராடித் திரும்பிவராமையால், கமலாஸனன் சிங்காதனத்தை யபகரிக்க வேண்டுமெனும் எண்ணத்துடன் தற்காலம் இராஜஸ்தானத்திலிருக்கும் சேனாதிபதி யவர்களைக் கொன்றுவிடுவதற்காக ஓர் சூழ்ச்சி செய்தானென்றும், ஜயபாலன் அச் சூழ்ச்சியிற் சம்மந்தப்பட்டிருக்கிறானென்றும் குற்றஞ் சாற்றப்பட்டு இருவரும் கைதிகளாய் இதோ நிற்கிறார்கள். அவர்களில் கமலாஸனன் குற்றவாளியென்று ருஜூப்படுத்தும் ஆதாரங்களை இதோ படிக்கின்றேன்.

(ஓர் காகிதச்சுருளைப் பிரித்துப் படித்தல்)

1. கமலாஸனனுடைய மாளிகையைப் பரிசோதித்த பொழுது, அம்மாளிகையினின்று அடுத்தாற்போன்ற சேனாதிபதியவர்களின் மாளிகைக்கு ஓர் சுரங்கம் வெட்டப்பட்டிருந்தது.

2. சேனாதிபதியவர்களின் அறையினடியில் ஓர் நிலவறை வெட்டப்பட்டிருக்கிறது.

3. அந்நிலவறையில் ஆறு தூண்கள் சேனாதிபதியவர்களுடைய அறையின் தரைக்கு உதவாக நிறுத்தப்பட்டிருந்தன.

4. நிலவறையில் மண்வெட்டி, கோடாரி, கடப்பாறை முதலிய ஆயுதங்களிருந்தன.

5. கடைசியாக, கமலாஸனனுடைய குற்றம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்குவதால், இந்நகரில் ஒருவரேனும் கமலாஸனனுக்குச் சாதகமாக அவன் குற்றவாளி யல்லவென்பதை ருஜுப்படுத்த முன்வரக்காணோம்.

இவையெல்லாம் கமலாஸனன் குற்றவாளி யென்பதைப் புலப்படுத்தும் ஆதாரங்களா யிருக்கின்றன. ஜயபாலன் இக்குற்றத்திற் சம்மந்தப்பட்டிருக்கிறானென்பதற்கு ஆதாரங்கள் சாக்ஷிகளை விசாரிக்கும்பொழுது தானாகவே வெளிப்படும்.

சேனாதிபதி:—கமலாஸனரே, வாசித்ததைக் கேட்டீரா? நீர் குற்றவாளியென்பதை இப்பொழுதே ஒப்புக் கொள்ளுகிறீரா, அல்லது விசாரணையை மேல் நடத்தச் சொல்லலாமா?

கமலாஸனன்:—இந்நகர் அரசரான சந்திரகுப்த மன்னருடைய அமைச்சனா யிருக்கும் என்னை நியாயஸ்தலத்தில் நிறுத்தி அரசர் ஒருவர்தான் விசாரிக்கலாம். சம யோக்கியதை கூட யில்லாத தங்களுக்கேது அதிகாரம்?

சேனாதிபதி:—நான் தற்காலத்தில் இராஜஸ்தானத்தி லிருப்பதால் உம்மை நியாயஸ்தலத்தில் நிறுத்தி விசாரிக்கவும், தண்டிக்கவும் எனக்கு அதிகார மிருக்கின்றது. (வக்கீலைப்பார்த்து) வக்கீலவர்களே, விசாரணையை மேல் நடத்துங்கள்.

வக்கீல்:—கமலாஸனா, உனக்கு வக்கீல் ஒருவரு மில்லைபோ லிருக்கிறதே! கேட்கும்கேள்விகளுக்கு நீயே விடையளிக்கிறாயா?

**கமலாஸனன்:**—நீ கேவலம் பிறனுடைய வியாஜ்ஜியங்களைக் கொண்டு வீண்வாதம் செய்யும் கூலிக்குழைப்பவன். ஆனகையால், உனக்கு மரியாதை யென்பது எப்படித்தெரியும்? தெரியாததினுல்தான் என்னை அடா என்று அழைக்கிருய். அதிருக்கட்டும். நீ கேட்கும் கேள்விகளுக்கு நான் விடையளிக்கக் கடமைப்பட்டவனல்ல.

**சேனுதிபதி:**—கமலாஸனரே, நியாயஸ்தலத்தில் கேட்கும் கேள்விகளுக்கு விடையளிக்கத்தான் வேண்டுமென்பதை நீர் இவ்வளவு நாள் அமைச்சராயிருந்தும் அறிந்து கொள்ளவில்லையே! அவர் கேட்கும் கேள்விகளுக்கு நேராக விடையளிப்பீர்.

**வக்கீல்:**—கமலாஸனப்பிரபு! உம்க்குப் பாதகமாயிருக்கும் சாக்ஷிகளை முதலில் விசாரிப்போம் வேண்டுமானல் நீர் அவர்களைக் குறுக்குக் கேள்விகள் கேட்கலாம். உமக்குச் சாதகமான சாக்ஷிகள் யாராவதிருந்தால் அவர்களையும் விசாரிப்போம். (சேவகனைப்பார்த்து) ஸர்க்கார் தரப்பில் முதல் சாக்ஷி தோட்டக்காரக் கண்ணன்!

**சேவகன்:**—தோட்டக்காரக் கண்ணன்! தோட்டக்காரக் கண்ணன்!! தோட்டக்காரக் கண்ணன்!!!

(கண்ணன் பிரவேசித்தல்.)

**கண்ணன்:**—கும்புடுகிறேன்.

**வக்கீல்:**—கடவுளுக்குப் பொதுவாக நீ சொல்வதெல்லாம் சத்தியம் என்று பிரமாணம் பண்ணு.

**கண்ணன்:**—ஆண்டவருக்குப் பொதுவாக நான் சொல்றதெல்லாம் சத்தியம்!

**வக்கீல்:**—கமலாஸனன், ஜயபாலன், இவ்விருவர்களும் குற்றவாளிகளென்பது உனக்கு நிச்சயமாகத் தெரியுமா?

கண்ணன்:—தெரியும்.

வக்கீல்: எப்படித் தெரியும்?

கண்ணன்:—ஆண்டவரே, அந்தச் சின்ன ஐயா (ஜயபாலனைச் சுட்டிக் காட்டி) ஒருநாள் என்னெ வேலெ செய்யுரெயான்னு கேட்டாங்க. நல்ல கூலி குடுக்கரேன்னுங்க. சாமி, நான் ஏளெ. ஒடனே சரின்னு சொன்னேன். அப்பறம் என்னெ அந்தப் பெரிய ஐயா (கமலாஸனனைச் சுட்டிக் காட்டி) ஊட்டுக்குக் கூட்டிப் போனுங்க. அங்கே யாரோ ரண்டு பேரு சொரங்கம் வெட்டிக்கினு இருந்தாங்க. எனக்கும் ஒரு மம்பட்டி குடுத்தாங்க ஆனு பெரிய ஐயா (மறுபடியும் கமலாஸனனைச் சுட்டிக் காட்டி) அங்கே வந்து என்னைப்பாத்து, நான் அரமணெலெ இருக்சரவன்னு சொல்லி என்னெப் போவச்சொல்லிப்புட்டாங்க. ஆனு நான் சொரங்கத் தெப்பத்தி மூச்சு வுடக்கூடாதுன்னு சொன்னுங்க. சொன்னு, என்னெக் கொண்ணுடுவேன்னுங்க. அம்புட்டுத்தான்.

வக்கீல்:—ஜயபாலா, நீ இவனைச் சுரங்கம் வெட்டுவதற்காக அழைத்தது வாஸ்தவந்தானே?

ஜயபாலன்:—இந்தப்பட்டிக்காட்டானை நானிதுவரை பார்த்ததே யில்லை யென்று சத்தியமாகச் சொல்லுவேன்.

வக்கீல்:—உன் சத்திய மிருக்கட்டும். (கமலாஸனனைப்பார்த்து) கமலாஸனப்பிரபு! தாங்கள் இக்கண்ணனைத் தங்கள் கிரஹத்தில் பார்த்ததாக ஞாபக மிருக்கின்றதோ?

கமலாஸனன்:—எனக்கு இத்தகைய மனிதர்களுடைய சிநேகம் இதுவரையில் உண்டாகவில்லை. ஆகையால் என்னுடைய வீட்டுக்கு இப்படிப்பட்டவர்கள் வரக் காரணமேயில்லை.

வக்கீல்:—இவனை நீங்களிருவரும் பார்த்ததே யில்லையா? சரி, இருக்கட்டும். கமலாஸனரே, நீர் இக்கண்ணனை ஏதாவது கேள்விகள் கேட்கிறீர்களா?

கமலாஸனன்:—இந்த இழியோனுடன் பேசுவதே எனக்கு அகௌரவமென்று தோன்றுகிறபடியால் – நான் –

சேனாதிபதி:—அப்படியா! பேஷ்! அப்படியென்றால் அடுத்த சாக்ஷியை யழைக்கின்றேன். அவரோடாவது பேசுவீரா? (சேவகனைப்பார்த்து) இரண்டாவது சாக்ஷி, விசித்திரவீரியர்!

சேவகன்:-விசித்திரவீரியர்!விசித்திரவீரியர்!!விசித்திரவீரியர்!!!

(கண்ணன் சென்றுவிடல், விசித்திரவீரியன் பிரவேசித்தல்)

வக்கீல்:—சொல்வதெல்லாம் உண்மையென்று சத்தியம்பண்ணும்.

விசித்திரவீரியன்:—சர்வ வல்லமையுள்ள ஈசன்மேல் ஆணையாக, நான் சொல்வதெல்லாம் உண்மையென்று உறுதியாய்ச் சொல்லுகிறேன்.

வக்கீல்:—ஐயா, இதோ இங்கு நிற்கும் இவ்விரண்டு குற்றவாளிகளையும் தாங்கள் அறிவீர்களோ?

ஜயபாலன்:—(பரபரப்புடன்) நான் குற்றவாளியா! நானெவ்வாறு குற்றவாளியாவேன்? நான் குற்றத்தில் சம்மந்தப்பட்டிருந்தால் குற்றவாளியென்றே என்னை யழைப்பதோ?

வக்கீல்:—அப்படியெனில் நீ குற்றத்திற் சம்மந்தப்பட்டிருக்கிறாயென்பதை நீயே ஒப்புக்கொள்ளுகிறாயா! நீ சம்மந்தப்பட்டிருக்கும் குற்றம் யாது?

ஜயபாலன்:—(தனக்குள்) அடடா! என்ன மறதி! இப்பொழுது என்னசொல்வது? (உரக்க) சேனாதிபதி யவர்களே!— தாங்களே இப்பொழுது நியாயாதிபதியாயு மிருக்கின்றீர்கள்— நான் சொல்லவந்த தென்னவெனில், தாங்களே இதுவரை என்னைக் குற்றவாளியென்று சொல்லவில்லை. ஏதோ ஓர் குற்றத்திற் சம்மந்தப்பட்டவனென்றுதான் சொன்னீர்கள். ஆனால் இப்பொழுது என்னைக் குற்றவாளியென் றழைக்கிறீர்களே! நான் யாதொரு குற்றத்திலும் சம்மந்தப்பட்டவன் அன்று என்பதை நிரூபிக்கத்தயாராயிருக்கிறேன்!

சேனாதிபதி:—சற்றுப்பொறு நிரூபிக்கலாம். (விசித்திரவீரியனைப் பார்த்து) ஐயா, இவர்கள் என்னைக் கொல்ல யத்தனித்தார்களென்பது தங்களுக்கு நிச்சயமாகத் தெரியுமா?

விசித்திரவீரியன்:—நன்றாகத்தெரியும்.

சேனாதிபதி:—தங்களுக்குத் தெரிந்ததை நியாயஸ்தலத்திற்குத் தெரியப்படுத்தவேண்டும்.

விசித்திரவீரியன்:—நான் சென்ற மாதம் 29ம் தேதியன்று மாலை நகருக்கு வெளியே சென்று உலாவி வருகையில் நன்றாக இருண்டு விட்டது. வரும் வழியில் புதர்களடைந்த மலையடிவாரத்தில் கமலாஸனரும் ஜயபாலனும் பேசிக்கொண்டிருந்ததைக் கேட்டேன். நான் வந்ததை அவர்கள் கவனிக்கவில்லை. முதலில் நானும் அவர்கள் என்ன பேசினார்களென்பதைக் கவனிக்கவில்லை. ஆனால், அவர்கள் சேனாதிபதியவர்களுடைய பெயரை யடிக்கடி உச்சரித்ததால், சற்று மறைவாக நின்று கவனித்தேன். ஜயபாலன் சற்றுச் செவிடனாகையால், கமலாஸனர் சற்று உரக்கவே பேசவேண்டி யிருந்தது. ஆகையால், அவர்கள் செய்த சூழ்ச்சி எனக்குத் தெரியவந்தது. அப்பொழுது, கமலாஸனருடைய மாளிகைக்கும், நிலவறைத்தூண்களைத் தட்டிவிடுபவனுக்கும் ஆபத்து நேரிடுமே யென்று ஜயபாலன் கேட்டதற்கு, கமலாஸனர், தான் இன்னும் சில நாட்கள் வரையில்தான் மந்திரியாயிருப்பாரென்றும் சேனாதிபதியைக் கொன்ற பிறகு தனக்கு அரண்மனை கிடைக்குமாதலால், தன் மாளிகை போனாலும் பாதகமில்லை யென்றும் சொல்லிவிட்டு, சுரங்கத்தூண்களைத் தட்டிவிடும்படி யாரோ ஓர் அடிமையைக் கட்டளையிடப் போவதாயும், அவன் மறுத்தால் அவனைச் சித்திரவதை செய்வதாகப் பயமுறுத்தித் தன் காரியத்தை முடித்துக்கொள்ளப் போவதாயும் சொன்னார். கமலாஸனருடைய மாளிகையிலிருந்து சுரங்கம் வெட்டியிருந்ததும், அதில் இந்த ஆயுதங்க ளகப்பட்டதும் இப்

பொழுது எல்லோருக்கும் தெரிந்ததே. இதிலிருந்தே இவர்கள் குற்றம் தெளிவாய் விளங்கவில்லையா?

வக்கீல்:— ஏது, கமலாஸனருக்குக் கொஞ்சம் ஜோஸ்யமும் தெரியும் போலிருக்கிறதே! தான் சில நாட்கள் தான் மந்திரியாயிருப்பாரென்று, அப்பொழுதே தெரிந்து கொண்டு விட்டாரே! (கமலாஸனனைப்பார்த்து) சுரங்கம் வெட்டியது நீர்தானே?

கமலாஸனன்:—நான் ஒரு நாளாயினும் உழைத்தறியாதவன். நான் அந்தச் சுரங்கத்தை வெட்டுதல் சாத்தியமா?

சேனாதிபதி:— கமலாஸனரே, நியாயஸ்தலம் விளையாடுமிடமன்று என்பதை நீர் அறிந்துகொள்ளவேண்டும்; கேட்ட கேள்விகளுக்கு நேராக விடையளிப்பீர்!

வக்கீல்: — கமலாஸனரே, ஜயபாலனுடைய இல்லத்தைப் பரிசோதித்த பொழுது நீர் உம் கைப்பட வெழுதியிருக்கும் சில கடிதங்கள் கிடைத்திருக்கின்றனவே. அக்கடிதங்களை நீர் தானே எழுதியது?

கமலாஸனன்:—கடிதங்களைப் பார்த்தால்தான் சொல்லமுடியும். (ஓர் கடிதத்திலுள்ள கமலாஸனனுடைய கையெழுத்தை மாத்திரம் காண்பித்து) இது உம்முடைய கையெழுத்துத்தானே?

கமலாஸனன்:—என்னுடைய கையெழுத்தைப் போலத்தான் காண்கிறது. ஆனால் இவ்வளவு சாமர்த்தியமாய் யார் என் கையெழுத்தைப் போட்டிருக்கலாமென்பதுதான் எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது.

வக்கீல்:—அப்படியெனில், இக்கையெழுத்து நீர் போட்டதல்லவோ?

கமலாஸனன்:—இடையன் ஆட்டுக்குட்டியைத்தேடும்பொழுது ஓர் ஆட்டுக்குட்டியின் வாலை மாத்திரம் அவனிடம் காண்

பித்து 'இது உன் ஆட்டுக்குட்டியின் வாலா? சொல்' லென்று கேட்டால் அவன் எவ்வாறு சொல்லமுடியும்? அவ்விதமே என் கையெழுத்தைமாத்திரம் என்னிடம் காண்பித்தால் நானென்னசெய்யமுடியும்? கடிதத்தைப் படித்துத்தான் சொல்லவேண்டும்

வக்கீல்:—கமலாஸனர் சரியாக விடையளிக்க மாட்டார் போலிருக்கிறது. இந்தக் கனவான் என்ன சொல்லுகிறுரென்று பார்ப்போம். (ஜயபாலனைப் பார்த்து) ஜயபாலா, சுரங்கம் வெட்டியது யார்?

ஜயபாலன்:—எனக்குத் தெரியாது.

வக்கீல்:—நீங்களிருவரும் சென்ற மாதம் 29-ம் தேதி மலையடிவாரத்தில் சந்தித்தது மெய்தானே?

ஜயபாலன்:—ஆம்.

வக்கீல்:—அப்பொழுது ஏதாவது பேசிக்கொண்டிருந்தீர்களா?

ஜயபாலன்:—ஆயிரம் விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்திருக்கலாம்.

வக்கீல்:—கமலாஸனர் இவ்விஷயத்தைப்பற்றி ஏதாவது சொன்ஞரா?

ஜயபாலன்:—எனக்கு ஞாபகமில்லை.

சேஞதிபதி:—ஏ, ஜயபாலா, நீ குற்றவாளியல்ல, ஏதோ இதில் சம்மந்தப் பட்டிருக்கிறுயென்றுதான் எண்ணியிருந்தோம். இப்பொழுது நீ கமலாஸனரைத் தப்புவிக்க முயல்வதிஞல் நீயும் குற்றவாளி யென்பதைப் பகிரங்கப்படுத்திக் கொள்ளுகிறுய். ஏதோ கமலாஸனர் செய்திருக்கும் குற்றத்தைச் சொல்லிவிட்டாயாஞல், நீ தப்பித்துக் கொள்ளலாம். இல்லாவிட்டால், அனேக கேள்விகள் கேட்கவேண்டிவரும். அப்பொழுது நீயும் குற்றவாளி யென்பது வெளிப்பட்டுவிடும். ஆகையால் உள்ளதைச்சொல்லிவிடு.

வக்கீல்: நீ சொல்லாவிட்டால் நான் உன்னை எளிதில் விடேன்! நான் சிற்சில கேள்விகள் கேட்பேன், அப்பொழுது நீ திரு திருவென்று விழிப்பாய்! ஓர் கேள்வி கேட்கின்றேன்; அதற்குப் பதிற் சொல்லுகிறாயா? வாத்ஸல்யருடைய கையெழுத்தையும், விசுவசேனனுடைய கையெழுத்தையும், கமலாஸனன் எழுதியனுப்பிய இரு கடிதங்களில் நீ போட்டனுப்ப வில்லையா?

ஜயபாலன்:—(நடுநடுங்கி) ஐயா, நானொரு பாவமு மறியேன்! உள்ளதைச் சொல்லிவிட்டால், என்னைத் தண்டியாம லிருப்பதாகச் சொன்னால் சொல்லி விடுகின்றேன்!

கமலாஸனன்:—(தனக்குள்) நான் சிநேகிதனென்று பாவித்திருந்த இந்த அயோக்கியனே எனக்குச் சத்துருவாக வாய்ப்பான் போலிருக்கிறதே!

சேனாதிபதி:—ஜயபாலா, உண்மையைச் சொன்னபிறகு நீ குற்றவாளி யல்லவென்று காணப்படின், உன்னைத் தண்டியாமல் விட்டுவிடுகின்றோம். ஆனால் குற்றத்தில் சம்மந்தப்பட்டிருப்பதாகத் தெரிந்தால் மிகவும் கடுமையான தண்டனை விதிக்கப்படமாட்டாதென்பது உறுதியாய்ச் சொல்லுகிறேன்.

ஜயபாலன்:— அப்படியென்றால் சொல்லிவிடுகிறேன்! இந்தக் கமலாஸனன் தங்களைக் கொன்று இவ்விராஜ்ஜியத்தைக் கைப்பற்ற வேண்டுமெனும் எண்ணத்துடன் தங்கள் அறையின் கீழ்ச் சுரங்கம் வெட்டித் தங்களைக் கொல்ல யத்தனித்தது வாஸ்தவந்தான். அதை யென்னிடம் அன்றிரவு சொன்னான். அதை மறுநாள் தங்களிடம் சொல்லிவிட வேண்டுமென்றிருந்தேன். அதற்குள் வீரர்கள் என்னைச் சிறைப்படுத்தி விட்டார்கள்.

வக்கீல்;—ஓகோ! மறுநாள் தூண்களைத் தட்டிவிட்டபிறகு சொல்வதென்றிருந்தாயோ! வெகு யோக்கியன்!

கமலாஸனன்:—இந்தப்பயல் இப்படிச் சொல்லிவிட்டால் நான் குற்றவாளியாய் விடுவேனு? ஐயா, இவன் செய்திருக்கும் அக்கிரமங்கள் அனேகம்! அவைகளையெல்லாம் நான் எங்கே நியாயஸ்தலத்தில் தெரியப்படுத்தி விடுவேனோ வென்று பயந்து, அப்படிச் செய்வதற்கு முன் என்னைத் துலைத்து விட வேண்டுமென்று இவ்வாறு பொய் சொல்லுகிருன்! ஆகையால் இவன் சொல்வதை நம்பக்கூடாதென்று பிரார்த்திக்கிறேன்.

வக்கீல்:—ஜயபாலனைப் பார்த்தால் குற்றஞ் செய்திருப்பவனுகத் தோன்றவில்லையே!

கமலாஸனன்:—குற்றஞ் செய்யவில்லையா! ஓர் பாவமுமறியாத வாத்ஸல்யரையும், சிறு மாசுமற்ற மகாராணியையும், அரசர் சிறைசெய்தது இவனுல்தான்! அவர்கள் – பாவம் – ஓர் குற்றமும் செய்தவர்களல்லர்!

சேனுதிபதி:—(ஆச்சரியத்துடன்) அதெப்படி?

கமலாஸனன்:—இவன்தான் ஓர் கடிதத்தை யெழுதி, கீழே வாத்ஸல்யருடைய கையெழுத்தைப்போட்டு, என்னிடமனுப்பினுன்! நான் அதை வாத்ஸல்யர்தான் எழுதியிருக்க வேண்டுமென்று நம்பி அரசரிடம் காண்பித்தேன்! அரசர், வாத்ஸல்யரையும் மகாராணியையும் சிறை செய்துவிட்டார்! இங்ஙனம் பிறருடைய கையெழுத்தைப் போட்டு மகாராஜாவையே ஏமாற்றின துரோகி இவன்தான்!

ஜயபாலன்:—நியாயாதிபதியவர்களே! நான் சொல்வதைக் கவனிக்கவேண்டும். இவன் கொலைபாதகன்! என்னை ஆதி முதல் ஏய்த்தும், மோசம் செய்தும், என்னைக் கடைசியில் இப்படிச் சந்தியில் நிறுத்திவிட்டான்! மகாராஜ், இவன் தான் இரண்டு கடிதங்களை யெழுதி, என்னிடமனுப்பி, ஒன்றில் வாத்ஸல்யருடைய கையெழுத்தையும், மற்ருென்றில் விசுவசேனனுடைய கையெழுத்தையும் போட்டனுப்

பச்சொன்னான். நான் விளையாட்டாகப் பிறருடைய கையெழுத்துக்களைப் போடுவது வழக்கம். அப்படிச்செய்தல் குற்றமென்றறியாதவனாய் கமலாஸனன் சொல்லியவாறு செய்தேன்.— மகாராஜ், நான் பரம ஏழை! ஒரு பாவமுமறியேன்! நான் குற்றவாளியல்ல! பெரும் பிள்ளைகுட்டிக்காரன்! என்னை மன்னிக்க வேண்டுமாய்ப் பிரார்த்தித்துக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

சேனாதிபதி:—கமலாஸனரே, இப்பொழுதாகிலும் நீர் குற்றவாளியென்பதை ஒப்புக்கொள்ளுகிறீரா?

கமலாஸனன்:—இந்த அயோக்கியன் சொல்வதையே நம்பி என்னைக் குற்றவாளியென்கிறீர்களே! நான் சொல்வதை மாத்திரம் நம்பமாட்டேனென்கிறீர்களே! இதென்ன அநியாயம்!

சேனாதிபதி:—அட துரோகி! வாயை மூடு!

நியாயஸ்தலத்திலுள்ள மகா ஜனங்களே! இதோ நிற்கும் இவ்விருவர்களும் குற்றவாளிகளென்பதை இனிச் சந்தேகிக்க முடியாது. அவர்கள் செய்திருக்கும் குற்றம் என்னைக் கொல்ல யத்தனித்தது மாத்திரமன்று. வாத்ஸல்யையையும் மகாராணியாரையும் அரசர் சிறைசெய்தது இவர்களுடைய துரோகத்தால் தான்! ஆகையால், அரசர் வந்துதான் இவர்களைத் தீரவிசாரித்துத் தண்டிக்கவேண்டும். ஆகையால் இவர்களைக் கழுவிலேற்ற உத்தரவளிக்க நானிப்பொழுது தயாராயில்லை. என்னைக் கொல்ல யத்தனித்த குற்றத்திற்காக, இவர்களைத் தனித்தனியாக ஒவ்வோர் சிறைச்சாலையிலடைத்து வைக்கவேண்டியதுதான். சந்திரகுப்தமன்னர் வரும் வரையில் இவர்கள் சிறைச்சாலையிலேயே கிடந்து வருந்தவேண்டியதுதான். சேவகர்களே! இவ்விருவரையும் உடனே சிறைச்சாலைக்கு இழுத்துச் செல்லுங்கள் (கமலாஸனனையும் ஜயபாலனையும் சேவகர் இழுத்துக்கொண்டு செல்லல்)

சேனாதிபதி:—சபையோர்களே! நான் உங்களிடம் ஓர் விஷயத்தைப்பற்றிப் பேச விரும்புகிறேன். ஆனால், என் மனதிலுள்ளதை யெவ்வாறு விரித்துரைப்பேன்! அவ்விஷயத்தை நினைத்தாலும் என் உள்ளம் கலங்குகின்றதே! கனவான்களே! நாமெல்லோரும் துயரத்திலாழ்ந்து வருந்தவேண்டுமென்று பகவான் தீர்மானித்து விட்டார்போலும்! கமலாஸனன் செய்த சூழ்ச்சி உங்களெல்லோருக்கும் கொஞ்சம் கிலேசத்தை விளைவித்திருக்கலாம். ஆனால், அதில் எனக்கு அவ்வளவு துக்கமில்லை. ஏனெனில், இதைவிட அதிகமான துயரங்கள் நம்மைப் பீடிக்கவில்லையா? நம்மெல்லோரினும் மேன்மையும், கீர்த்தியும் வாய்ந்த உத்தம சீலரான வாத்ஸல்யர் சென்ற இரண்டு வருடங்களாகச் சிறையிலிருந்து வருந்துகின்றார். நமக்கெல்லோருக்கும் மாதாவான நம் அரசிக்கு ஜயில்வாசம் ஏற்குமோ? ஆனால், இவர்களைப்பற்றியும் நான் அதிகமாகத் துக்கப்படவில்லை. ஏனெனில், அவர்களை நாளையே சிறைமீட்டி விடுவோம்! ஆனால், நாமெல்லோரும் தாயை யிழந்த கன்றைப்போல் தலைவனின்றித் தவிக்க என்ன பாபம் செய்தோமோ? நமதரிய அரசர் எவ்விடத்தி லிருக்கின்றாரோ ஒருவருமே யறியோம்! அவரைத் தேடிவரும்படி அனுப்பிய தூதர்களெல்லோரும் எல்லாத்தேசங்களிலும் சென்று அவரைத் தேடியும் காணமல் திரும்பி வந்துவிட்டனர்! ஐயோ! நாளை நான் மகாராணியைச் சிறையினின்றும் அரண்மனைக் கழைத்துவரச் செல்லும்பொழுது, அரசரைப்பற்றி யவர்கள் ஏதாவது கேட்டால், நானெவ்வாறு பதிற்சொல்வேன்! அரசர்கதி யாதாயிற்றோ ஒன்றுந் தெரியவில்லை. இதை மகாராணியார் அறிந்தால் மனம் நொந்து துடிப்பார்களே! ஐயோ, இவைகளையெல்லாம் நான் அநுபவிக்க வேண்டுமென்றே பகவான் என்னைப் படைத்தார்? ஆ! கடவுள் நம்மெல்லோரையும் இவ்வளவு பரீக்ஷிப்பாரென்று நான் கனவிலும் எண்ணவில்லையே!

(எல்லோரும் கண்ணீர்விட்டுக்கொண்டு மௌனமா யிருத்தல்)

சந்திரகுப்தன்:—(தானும் ஆனந்தக் கண்ணீர் பெருக்கி) சேனாதிபதி, மகாஜனங்களே, உங்கள் அரசரில்லாமையைக் குறித்து நீங்கள் வருந்தவேண்டியது நியாயந்தான்! ஆனால், வீணாய்ப் புலம்புவதிலென்ன பயன்? உங்கள் அரசர் கதி என்னவாயிற்றென்பதே உங்களுக்குத் தெரியாதா?

சேனாதிபதி:—சுவாமின், எங்கள் அரசர் மாளவ, சௌராஷ்டிர தேசங்களை வென்றபிறகு, ஸிந்துநதியில் நீராடி, பரதேசிக்கோலத்துடன் ஸிந்துநதியின் முகத்துவாரத்திலிருக்கும் தன் குலதெய்வத்தின் கோயிலுக்குச் சென்று, *ஸ்ரீமந் நாராயணமூர்த்தியைத் தரிசித்துவிட்டுப் பிறகுதான் தன் நகரடைந்து ஆளுவதென்று ஓர் பிரதிக்ஞை செய்துகொண்டிருந்தார். அதற்காகச் சென்றவர், சென்று சுமார் இரண்டு வருடங்களாகியும் திரும்பி வாராததால் நாமெல்லோரும்——

சந்திரகுப்தன்:—சேனாதிபதி, மனம் நோவதிற் பயனில்லை. உலகத்தில் எவ்வளவோ அரசர்களிருந்து பரலோகம் அடைந்ததில்லையா? அவ்விதமே உங்கள் மன்னரும் பரலோகமடைந்திருந்தால், அற்ப மனிதர்களாகிய நாம் என்னசெய்யலாம்? மேல் நடக்கவேண்டியதை யோசிக்கவேண்டியதுதான்! சந்திரகுப்தரைப் போன்ற மற்றோர் அரசர் தங்களுக்குக் கிடைப்பதென்ன அரிதா?

சேனாதிபதி:—யோகீஸ்வர, சந்திரகுப்த மன்னரைத் தாங்கள் அறியீர்போலும்! இனி அவரைப்போன்ற உத்தம சீலரும், ஸத்திய ஸந்தரும், செங்கோல் மன்னரும் உலகத்தில் தோன்றுவது அரிதே! ஆ! அவரை யிழக்க நேர்ந்த எங்களுடைய துர்ப்பாக்கியத்தைத்தான் என்னென்று சொல்வேன்! இனி நாம் வேறு அரசரை யடைந்தபோதிலும், அவ்வரசர் சந்திரகுப்த மன்னராவாரா?

---

*Vide Netes.

சந்திரகுப்தன்:—சேனாதிபதி, உங்கள் அரசரிடத்தில் உங்களுக்கிருக்கும் பக்தியை மெச்சினேன்! எனினும் விதிவசத்தின் கொடுமையால் நடந்த விஷயத்தைப்பற்றி யோசிப்பதில் என்ன பயன்? (ஆவலுடன்) உங்களரசருக்குச் சந்ததியில்லையோ?

சேனாதிபதி:—ஆ! எங்கள் அரசருக்கு ஸ்ரீ கிருஷ்ணபகவானே உருவெடுத்து வந்தாற்போன்ற ஓர் குமாரனிருக்கின்றான்! ஆனால் துரதிருஷ்டத்தால்————

சந்திரகுப்தன்:—(சந்தோஷ மிகுதியால் தனக்கே தெரியாமல் தாழ்ந்த குரலில்) ஆ! என்ன என் பாக்கியம்!

சேனாதிபதி:—ஸ்வாமின், நாங்களெல்லோரும் கிலேசத்துடனிருக்கத் தங்கள் முகத்தில் மாத்திரம் சந்தோஷக்குறி தோன்றக் காரணமென்ன?

சந்திரகுப்தன்:—ஒன்றுமில்லை. தாங்கள் என்ன புலம்பியும் என்னபயன்! மகா புத்திசாலியான தாங்கள் கூட இப்படிச் சிறு குழந்தையைப்போல் வருந்துகிறீர்களே யென்று நினைத்துக் கொஞ்சம் சிரித்தேன்! வேறொன்றுமில்லை.

சேனாதிபதி:—மகா ஜனங்களே! நம்முடைய அரசர் இறந்துவிட்டாரென்பதை யார் நம்பினாலும் நான் மாத்திரம் நம்பவில்லை. நம் அரண்மனை *ஜோஸ்யர்களும் அரசர் இறந்திருக்க முடியாதென்றும், சற்றுக் காலதாமதமானபோதிலும் கட்டாயம் திரும்பிவருவாரென்றும், திண்ணமாய்ச் சொல்லுகின்றனர். அவர்கள் சொல்லுவதில் எனக்குப் பூர்ண நம்பிக்கையிருக்கின்றது. ஆகையால், அரசர் இப்பொழுது எங்கிருக்கின்றாரென்பதை நான் நிச்சயமாய்ச் சொல்லமுடியாவிட்டாலும், அவர் வெகு சீக்கிரத்தில் திரும்பிவந்து செங்கோலோய்ச்சுவாரென்று என் மனதில் ஏதோ சொல்லுகின்றது. ஆனால் அவர் வரும்வரையில்

* Vide Netes.

இராஜ்ஜியபாரம் நடைபெற ஏதாவது ஏற்பாடு செய்யவேண்டியதாயிருக்கின்றது. ஏனெனில், நான் எவ்வளவு நாட்கள்தான் இராஜ்ஜியபாரம் வகிப்பது? ஆகையால், நான் ஓர் ஏற்பாட்டை யோசித்திருக்கின்றேன். அதென்னவெனில், நமது சந்திரகுப்தமன்னர் திரும்பிவரும் வரையில், அவருடைய அருந்தவப்புதல்வரான குமாரகுப்தரை இந்நகர் மன்னராக்கி அவர் பெயராலேயே இராஜ்ஜியபாரம் நடத்தவேண்டும். ஆனால், குமாரகுப்தர் சிறு குழந்தையாயிருப்பதால், அவர் பெயரால் இராஜ்ஜியபாரம் நடத்த இராஜப்பிரதிநிதி யொருவரைத் தேர்ந்தெடுக்கவேண்டுமல்லவா? ஆகையால், நான் யோசிப்பதென்னவெனில், தற்காலம் சிறையிலிருக்கும் மகா உத்தமசீலரான வாத்ஸல்யரையும், மகாலக்ஷிமியையொத்த மகாராணியையும், சிறையிலிருந்து மீட்டி, அவ்விருவர்களிலொருவரை இராஜப்பிரதிநிதி யாக்கிவிடலாமென்பதே! இவைகளையெல்லாம் யோசித்துச்செய்வதற்காக அடுத்தமாதம் முதல்தேதியன்று ஓர் மகாசபை கூட்டவேண்டியதாயிருக்கின்றது. மகாஜனங்களுடைய சம்மதத்தையறிவித்தால் அந்தப்படியே செய்யலாம்.

மகாஜனங்கள் எல்லோரும்:—சம்மதம்! எங்களுக்குச்சம்மதம்! சம்மதம்!

சந்திரகுப்தன்:—(தனக்குள்) ஹே, ஜகதீசா! இனி நான் எதற்காக என் நிஜரூபத்தை மறைக்கவேண்டும்? (உரக்க) ஹே சபையோர்களே! இராஜபக்தியும் விசுவாசமுமே உருவெடுத்து வந்த சேனாதிபதி! உங்கள் அரசரிடத்தில் உங்களுக்கிருக்கும் பக்தியை மெச்சினேன்! நான் இதுவரையில் நீங்கள் என்ன சொல்லுகிறீர்களென்பதைப் பார்ப்பதற்காகவே சும்மாவிருந்தேன். நீங்கள் அடுத்தமாதம் முதல்தேதியன்று சபை கூட்டவேண்டிய அவசியமேயில்லாமல் கடவுள் செய்துவிட்டார். ஏனெனில், உங்கள் சந்திரகுப்த மன்னர் உயிருடன்தானிருக்கிறார்!

எல்லோரும்:—(பேரானந்தத்துடன்) மகாராஜா எங்கே? சந்திர குப்த மன்னர் எங்கே? எங்கே! எங்கே! எங்கே! ஹே, யோகீஸ்வர, எங்கள் இறைவன் எங்கே யிருக்கின்றார்? தயவு செய்யவேணும்!

சேனாதிபதி:—(சந்திரகுப்தனை வணங்கி) ஹே, முனி சிரேஷ்டரே! பகவன்னு! எங்கள் வேந்தர் இருக்குமிடம் தங்களுக்குத் தெரியுமோ? தெரிந்தால் உடனே தெரிவிக்கவேண்டுமாய்ப் பிரார்த்திக்கிறேன்! அவர் க்ஷேமமாயிருக்கும் செய்தியை யறிவித்த தங்களையே நாங்கள் எங்கள் தெய்வமாகக் கொண்டாடுகின்றோம்! எங்கள் இறைவன் எங்கே?

சந்திரகுப்தன்:— (கண்ணீர் ததும்ப) சபையோர்களே! உங்கள் அரசிடம் உங்களுக்கிருக்கும் பக்தியை என்னென்றுரைப்பேன்! ஹே புஷ்பபுரத்து மகாஜனங்களே! ஹே சேனாதிபதி! ஹே பிரபுக்களே! ஹே சபையோர்களே! உங்கள் அரசன் உங்கள் முன்னேயே யிருக்கின்றான்! இப்பொழுது உங்களுடன் உரையாடிக்கொண்டிருப்பது, உங்கள் பக்தியைக்கண்டு ஆனந்தக்கண்ணீர் பெருக்கும் சந்திரகுப்தனே! (மகரிஷியின் வேடத்தைக் களைந்துவிட்டுத் தன் சுயரூபத்துடன் தோன்றல்) சந்திரகுப்தன் இதோ நிற்கின்றேன்! எல்லோரையும் நமஸ்கரிக்கின்றேன்!

எல்லோரும்:—ஜயவீஜயீ பவா! ஜயவீஜயீ பவா!

(சேனாதிபதியும், மற்றெல்லோரும், ஆச்சரியத்துடன் எழுந்து வணங்கிக் கைகூப்பியும், அந்தணர் வயோதிகர் முதலானோர் சந்திரகுப்தனை ஆசீர்வதித்தும், கரகோஷம் செய்தல். எல்லோரும் பேரானந்தத்தால் குழப்பமா யிருத்தல்)

சபையோர்களே! நான் நெடுநாள் என் தேசத்தை விட்டுச் சென்றிருந்து கடைசியில் என் நகரடைந்தவுடன், என் சிங்காதனத்தைப் பெற்றதுமன்றி, என் ஸ்ரீமந்தப் புதல்வனை *குமாரகுப்தனையும் அடைய என்ன பாக்கியம்

* Vide Notes.

செய்தேனே! இனிமேல் நீங்களெல்லோரும் எனக்கு வார்சு இல்லையென்று குறை கூற இடமில்லை. குழந்தையைப் பார்க்கவேண்டுமென்று நான் பதறினாலும், நான் மாளவ சௌராஷ்டிர தேசங்களை வென்றதன் அறிகுறியாக உங்கள் அநுமதியின்பேரில், உஜ்ஜைனி மன்னர்கள் பரம்பரையாகச் சூட்டிக்கொண்டு வந்திருக்கும் *விக்கிரமாதித்ய னெனும் பட்டத்தை யென் பெயருடன் சேர்த்துச் சூட்டிக்கொள்ளலாமென்றிருக்கிறேன்! தயவுசெய்து எல்லோரும் அநுமதிகொடுத்து ஆசீர்வதிப்பீர்களென்று—

எல்லோரும்:—(கரகோஷம் செய்து) சந்திரகுப்த விக்கிரமாதித்ய மகாராஜ் நீடூழி வாழ்க! அவர் செங்கோல் தழைத்தோங்குக! விக்கிரமாதித்ய மகாராஜ் கீர்த்தி பெருக!

காட்சி முடிகிறது.

---

## அங்கம் V.

### களம்—1.

### புஷ்பபுரம்—அரண்மனை வஸந்தமண்டபம்.

(சந்திரகுப்தனும் சேனாதிபதியும் சம்பாஷித்தல்)

சந்திரகுப்தன்:—என்னருமைச் சேனாதிபதி, உன் இராஜபக்தியையும், நற்குணத்தையும், உன் விசுவாசத்தையும் எவ்வாறு புகழ்வேன்! சென்ற ஒன்பது தலைமுறைகளாக உன்னுடைய முன்னோர்கள் என் முன்னோர்களிடத்தில் விசுவாசமாய் உழைத்தவர்கள். அப்பெரியோருடைய வம்சத்திற் பிறந்த நீயும் விசுவாசமாய் உன் கடமையைச் செய்தது எனக்கு அளவிறந்த ஆனந்தத்தைத் தருகிறது. என்னருமை நண்ப, நான் கடவுளைப் பிரார்த்திப்பதெல்லாமென்ன வெனில், நீ நீடூழிகாலம் வாழவும், உன்னுடைய பெயர் எங்கும் பரவி உனக்குத் தீராப் புகழை விளைவிக்க

வும் வேண்டுமென்பதே! உன்னையும், வாத்ஸல்யனையு மொத்த மகான்களை நண்பர்களாகக் கொண்டிருக்கும் என் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம்!

சேனாதிபதி:—மகாராஜ், நான் என் கடமையைச் செய்தேனே யன்றி, வேறொன்றும் பிரமாதமாகச் செய்துவிடவில்லை. ஆனால்,மகாராஜாவை யோர்விஷயம் கேட்கவேண்டுமென்று விரும்புகிறேன். தாங்கள் சென்ற ஒரு வருடத்திற்குள் மாளவ சௌராஷ்டிர தேசங்கள் நம் இராஜ்ஜியத்துடன் சேர்க்கப்பட்டன வெனும் செய்தி கிடைத்து விட்டது. நம் சேனைகளெல்லாம் திரும்பியும் வந்துவிட்டன. ஆனால் தாங்கள்மாத்திரம் ஸிந்து நதியில் ஸ்நாநம் செய்து திரும்பி வர இவ்வளவு காலதாமதமானதற்குத்தான் காரணம் தெரியவில்லை.——

சந்திரகுப்தன்:—சேனாதிபதி, நான் திரும்பிவராமலிருந்தது என் பேரில் பிசகல்ல. அதற்குக் காரணம் நானே ஓரரசனுடைய சிறைச்சாலையில் கைதியாயிருந்ததுதான்!

சேனாதிபதி:—தாங்கள் கைதியா யிருந்தீர்களா! இதென்ன விபரீதம்!

சந்திரகுப்தன்:—ஆம். நான் மாளவ சௌராஷ்டிர தேசங்களை வென்றபிறகு, தனியே ஸிந்துவில் நீராடுவதற்காகச் செல்லும்பொழுது சூரசேனனுடைய தலைநகரை யடைந்தேன். சூரசேனன் நம் எதிரியான ருத்ரசிம்ஹனுக்கு யுத்தசமயத்தில் உதவிபுரிந்தானென்று நான் கேள்விப்பட்டதால் உண்மையை யறியவெண்ணி, அங்குள்ளோர் பலரிடம் இராஜாங்க விஷயங்களைப்பற்றி இரகசியமாய் விசாரித்தேன். சூரசேனனுடைய அதிகாரிகள் என்னை யோர் துப்பறிபவனென்று சந்தேகித்து ஓர் சிறைச்சாலையி லடைத்துவிட்டனர். நல்ல வேளையாய் நான் பரதேசிக் கோலத்துட னிருந்தமையால் என்னை இன்னானென்று அவர்கள் அறிந்துகொள்ளவில்லை. அறிந்திருந்தால், சூரசேனன்

என்னை வெளியில் விடுவானா? நான் அந்தச் சிறைச்சாலையில் சுமார் பத்துமாதங்கள் வரை வருந்தினேன். கடைசியாக, அச்சிறையி னின்றும் தப்பிவருவதே வெகு கடினமாகிவிட்டது. தப்பியபிறகு, ஸிந்துவில் நீராடி, ஸ்ரீ மந்நாராயணமூர்த்தியைத் தரிசித்துவிட்டுத் திரும்பி இந்நகரடைந்தேன். அதுதான் விஷயம்.

சேனாதிபதி —தாங்கள் சிறையிலடைக்கப்பட்டு வருந்தியது என்ன கொடுமை! அவ்வாறு ——

சந்திரகுப்தன்:—சேனாதிபதி, நானப்படி நினைக்கவில்லை. நான் தீர விசாரியாமலும், ஆலோசியாமலும், ஒரு பாவமுமறியாத என் நண்பன் வாத்ஸல்யனையும், என் மனைவியையும் சிறை செய்ததற்குத் தண்டனையாகவே நானும் சிறைச்சாலையிற்கிடந்து வருந்தவேண்டுமென்று பகவான் ஆக்கினை செய்தார் போலும்! அதிருக்கட்டும். சென்ற இரண்டு வருடங்களுக்குள் எவ்வளவு விசேடங்கள் நடந்திருக்கின்றன! கமலாஸனன் உன்னைக் கொல்ல யத்தனித்ததும், நீ அதை யறிந்தவிதமும், நியாயஸ்தலத்தில் அவனை நிறுத்தி விசாரித்ததும், புருஷோத்தமன் வாஸந்திகையைக் காதலித்த விதமும், அவ்விஷயம் உனக்குத் தெரிந்தவிதமும், எல்லாவற்றிற்கும் மேலாக, நானே இறந்துவிட்டேனென்று எல்லோருமெண்ணி என் செல்வப் புதல்வனை யரசனாக்க ஓர் சபை கூட்ட யத்தனித்ததும், எல்லாம் எனக்கு அடக்கமுடியாத ஆச்சரியத்தை விளைவிக்கின்றன. ஆனால், அவையெல்லாம் கிடக்கட்டும். நீ உடனே வாத்ஸல்யனையோர் பல்லக்கிலேற்றி வாத்ய கோஷங்களுடனும், சகல வைபவங்களுடனும் இங்கழைத்துவர ஏற்பாடு செய்.

சேனாதிபதி:—அப்படியே செய்கிறேன்.

(சேனாதிபதி செல்லல்)

(ஓர் சேவகன் பிரவேசித்தல்)

சேவகன்.—மகாராஜ், ஜயிலதிகாரி வந்து மகாராஜாவின் பேட்டிக்காகக் காத்துக்கொண்டிருக்கிறார்.

சந்திரகுப்தன்:—உள்ளே வரச்சொல்.

(சேவகன் செல்லல்)

(ஜயிலதிகாரி பிரவேசித்தல்)

ஜயிலதிகாரி:—நமஸ்தே மகாராஜ்.

சந்திரகுப்தன்:—ஹே ஜயிலதிகாரி, நீ உடனே சென்று கமலாஸனன், ஜயபாலன் இவ்விரு பாவிகளையும் இருப்புச் சங்கிலிகளாற் பின்கட்டு முறையாகக் கட்டி இங்கிழுத்துக் கொண்டு வருவாய்! ஜரூர்!

ஜயிலதிகாரி:—மகாராஜ், ஓர் விஞ்ஞாபனம். நாங்கள் எவ்வளவோ ஜாக்கிரதையா யிருந்தும், ஜயபாலன் எவ்வாறோ நேற்றிரவு ஜயிலிலிருந்து தப்பி யோடிவிட்டான்!

சந்திரகுப்தன்:—நீங்கள் சிறைச்சாலையைப் பாதுகாப்பது வெகு அழகாயிருக்கிறது! இருக்கட்டும், இதைப்பற்றிப் பிறகு சொல்லுகிறேன்! நீ உடனே சென்று அந்தப் பாவி கமலாஸனனை யாகிலும் இங்கிழுத்துக் கொண்டுவா.

(ஜயிலதிகாரி செல்லல்)

சந்திரகுப்தன்:—யார், சேவகா,

(சேவகன் பிரவேசித்தல்)

நீ சென்று, இந்நகரத்தார்களி லொருவராகிய விசித்திரவீரியரை இங்கழைத்துவா.

(சேவகன் செல்லல்)

(தனக்குள்) என்னரிய கண்மணி, துருவதேவி! உன்னை நான் அநியாயமாய் வருத்தினேனே! ஐயோ, நான் உன் அழகைக்கண்டு மயங்கிவிட்டேனென்று என்னையே நொந்துகொண்டேனே! உனது அழகுடன் நான்முகன் உனக்

குப் பெண்டிருக்குள்ள அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு, முதலிய எல்லாக் குணங்களையும் அளித்திருப்பதை மறந்து, உன்னை இவ்வாறு வதைத்தேன். ஆகா, ஓர் சிறு மாசுமில்லாத ஓர் பேதைப்பெண்ணை இங்ஙனம் அநியாயமாய் வருத்திய நானோ செங்கோல் மன்னன்? இருக்கட்டும். வாத்ஸல்யனையழைத்துவரச் சொன்னதுபோல், உன்னையு மழைத்துவரச் சொல்லல் அழகல்ல. இன்று மாலையில் நானே உன் சிறைச்சாலைக்கு வந்து உன்னைச் சகல வைபவங்களுடன் அரண்மனைக்கழைத்து வருகின்றேன். ஹா துருவதேவி! உன் கஷ்டங்களெல்லாம் முடியுங்காலம் சமீபித்துவிட்டது. நீ இழிகுலத்திற் பிறந்த பெண்ணென்று சொல்லக் கமலாஸனனுக்கு எவ்வளவு துணிவு! அதிலும், அவன் வார்த்தைகளில் நம்பிக்கை வைத்த நான் மூழுமூடனல்லவா? எனினும், விதியை வெல்ல யாராலாகும்? துருவதேவியும், நானும், வாத்ஸல்யனும் எவ்வளவோ உயர்ந்த பதவியிலிருந்தும் குற்றஞ் செய்தவர்களைப்போல் சிறைச்சாலையிலடைக்கப்பட்டு வருந்தவேண்டுமென்று நான்முகன் நம்முடைய தலையி லெழுதியிருந்தால் அது அவ்வாறு நடவாமலிருக்குமோ? எனினும் ஓர் துரோகியின் தந்திரத்தால் நாம் மூவரும் வருந்த நேர்ந்தது விந்தையே!

(வாத்ஸல்யனும் சேனதிபதியும் பிரவேசித்தல்)

சந்திரகுப்தன்:— எனதரிய வாத்ஸல்ய, (சென்று அணைத்துக்கொள்ளல்) என்னை நீ க்ஷமித்தருளவேண்டும். உன் காலவிதிபாசத்தால் நான் மதியின்றிச் செய்த அபராதத்தைத் தயவுசெய்து பொறுத்தருள்வாய்!

வாத்ஸல்யன்:—இராஜாதிராஜ, நான் இன்ன குற்றத்திற்காகச் சிறையி லடைக்கப்பட்டேனென்பது எனக்கு இன்னும் விளங்கவில்லையே! எனினும், மகாராஜாவின் சித்தமென்றிருந்தேன். இப்பொழுதாவது நான் செய்த குற்றம் யாதென்பதை யறிவிக்கக் கூடாதா?

சந்திரகுப்தன்:—வாத்ஸல்ய, உன்னைச் சிறைசெய்ததின் காரணம் தயவு செய்து என்னைக் கேட்காதே! அதைச் சொல்லவும் என் நா வெழவில்லை. நீ யாதொரு குற்றமும் செய்தவ னல்லன்!— ஐயோ, நடந்தது நடந்துவிட்டது. ஆனால் உன்னுடைய பெருமையும், தூய்மையும், இப்பொழுது குன்றின்மேலிட்ட விளக்கைப்போல் பிரகாசிக்கின்றன. இனி நீதான் என் பிரதான மந்திரி! நீதான் என் நண்பன்!—

(போர்வீரர்கள் கமலாஸனனை யிழுத்துக்கொண்டு வரல்)

இதோ நம்முடன் சிநேகம் பாராட்டுவதைப் போல் பாசாங்கு செய்து நம்மெல்லோருக்கும் தீங்கிழைத்த கொடிய துரோகியைக் காண்! இவனே எல்லாவற்றிற்கும் காரணம்! (கமலாஸனனைப் பார்த்து) அடே பாபி, கமலாஸனா! கொலைபாதகா! நீ இப்பொழுதாவது குற்றஞ் செய்தவனென்று ஒப்புக் கொள்ளுகிறாயா?

கமலாஸனன்:— (தாழ்ந்த குரலுடன்) ஆ—ம்.

சந்திரகுப்தன்:—ஹே சேனாதிபதி, ஜயபாலன் எச்சமயத்தில் நம்முடைய தேசத்தின் எல்லைக்குள் காணப்படினும், அவனை உடனே சிரச்சேதம் செய்யவோ, அல்லது அவனது *வலது கரத்தைத் துண்டித்து விடவோ, உனக்கு அதிகாரம் கொடுத்திருக்கின்றேன்! இதோ குற்றவாளியென்று ஒப்புக்கொண்டு நம்முன் நிற்கும் இப்பாதகனை உடனே கழுவிலேற்ற உத்தரவு செய்!

வாத்ஸல்யன்:—மகாராஜ், நான் பேசுவதை மன்னிக்கவேண்டும். ஓர் வலிமையற்ற புழுவை வலிமையுள்ளவன் நசுக்குவது கடினமன்று. ஆனால் வலியோன் மெலியோனைக் கொல்லாமல் அவனுக்கு உயிர்ப்பிச்சை கொடுத்தலே அழகாகும். மேலும், கமலாஸனர் ஓர்கால் தங்கள் அமைச்சரா யிருந்தாரென்பதையும் மறந்துவிடக் கூடாது!

---

* Vide Netes.

சந்திரகுப்தன்:—என்ன வாத்ஸல்யா! என்னே உன் பெருந்தன்மை! உனக்கிவன் இவ்வளவு தீங்கிழைத்தும் நீ அவனுடைய உயிருக்காக என்னிடம் மன்றாடுகிறாயே! என்னே உன் குணம்! ஒருவன் தீங்கிழைத்தாலும், அதைப் பொருட்படுத்தாது, அவனுக்கு நன்மையே செய்யவேண்டுமெனும் மேலான தருமத்தைக் கொண்டவனாயிருக்கிறாய்! நானும் அத்தருமத்தைக் கடைப்பிடித்தலே நலம். மேலும், நீ சொல்லும் வார்த்தைகளை இனி நான் மீறி நடப்பேனா? இனி நீதான் என் பிரதான அமைச்சனன்றோ? இதோ நமது நட்பை மற்றோர் விதத்திலும் காண்பிக்கிறேன்! எனது குமாரத்தியை மணக்க நீ முன் சொல்லிய இராஜகுமாரன் தகுந்தவனன்று. அவளை மணக்க உன் குமாரனான புருஷோத்தமனே தகுந்தவன்! புருஷோத்தமனும் உன்னைப்போல் பரிசுத்த சீலனென்பது நானறிந்ததே. மேலும், அனேக வருடங்களாய் அவன் வாஸந்திகையை நேசிக்கின்றானாம். அவளைச் சந்திக்க வழியில்லாமற் போனபொழுது, அவன் தோட்டக்காரனைப்போல் வேடம்பூண்டு கண்ணனெனும் பெயருடன் அவளுடைய தோட்டத்திலுழைத்தானாம்! இப்படிக் காதலிக்கும் புருஷோத்தமனால் வாஸந்திகையைச் சந்தோஷப்படுத்த முடியாவிட்டால், வேறு யாரால் முடியும்? வாஸந்திகையும் புருஷோத்தமனையே காதலிக்கின்றாள். இவ்விருவரும் கணவனும் மனைவியுமாதலில், நாம் ஆக்ஷேபித்தல் பேதமையே. ஆகையால் என் குமாரத்திக்கு உன் குமாரனைக்காட்டிலும் தகுந்த மணவாளன் எவனிருக்கின்றான்?

(கமலாஸனனைப் பார்த்து) அடே, கமலாஸனா! உனக்கு உயிர்ப்பிச்சை கொடுத்தோம்! போ! நீ உன் சத்துருவென்றெண்ணிய வாத்ஸல்யனே இன்று உன்னுயிரைக் காப்பாற்றியவனாயினன்! ஆனால் நீ இனிமேல் நம்முடைய தேசத்தின் எல்லைக்குள்ளிருக்கக் கூடாது! இருந்தால், உனது சிரம் உனது உடலைவிட்டு நீங்கும்! போ!

(கமலாஸனன் மெதுவாகச் செல்லல்)

வாத்ஸல்ய, உன் அரும்பெருங் குணங்களை என்னென்று சொல்வேன்! இத்தகைய அமைச்சன் ஓரரசனுக்கு அமைவனேல், அவனுக்கு யாது குறையுளது? நாழிகையாகிறது. வா, இருவருமாகச் சென்று உண்டிசெய்வோம்.

வாத்ஸல்யன்:—அரசே, என் அன்னை உயிருடனிருக்கின்றனளோ மேலுலகமேகிவிட்டனளோ அறிகின்றிலேனே!

சந்திரகுப்தன்:—உன் அன்னை மரணவேதனைப் பட்டுக்கொண்டிருந்ததாகக் கடிதமெழுதியது உன் மைத்துனனல்லன்! உன் சத்துரு கமலாலனன் செய்ததே! அதுவும் முழுப்பொய்! உன் அன்னை சுகமாகவேயிருக்கின்றாளாம்!

வாத்ஸல்யன்: — ஹே ஜகதீசா! என்மீது என்னே நின் கருணை! அரச, என் அன்னை உயிருடனிருக்கின்றனளா! ஆ! ஆனந்தத்தால் பேசவும் நாவெழவில்லை! இச்செய்தியைக் கேட்டு ஆனந்த சாகரத்தில் மூழ்கிப் புளகாங்கிதனுனனக்கு இனி யாது குறையுளது? ஹே ஜகதீசா! தீமைவரினும் ஒன்றன்மேலொன்றாய் வருகின்றது, நன்மைவரினும் அடுக்கடுக்காய் வருகின்றது! என்னே யுன் மாயை!

(விசித்திரவீரியன் பிரவேசித்தல்)

சந்திரகுப்தன்:—விசித்திரவீரிய, நீ ஏதோ சத்துருவின் நகரத்திலிருந்து வந்த ஓர் துப்பறிபவனிடம் இந்நகர் விஷயங்களையெல்லாம் சொல்லி, என்னைப்பற்றி ஏதோ தூஷணையாகவும் சொல்லிக்கொண்டிருந்ததாகக் கேள்விப்படுகிறேனே. நீ சமீபத்தில் யாதாகிலும் அவ்வாறு செய்தாயா? அப்படிச் செய்திருந்தால், உன்னை ஏன் தண்டிக்கக் கூடாது?

விசித்திரவீரியன்:—(பதைபதைத்து) மகாராஜ், சில தினங்களுக்கு முன் ஓர் மனிதன் இந்நகருக்கு வந்திருந்தான். அவன் ஓர் தேசாந்திரி யென்றும், இந்நகர் பார்க்கவந்ததாகவும்

சொன்னான். அவன் ஏறக்குறைய மகாராஜாவின் உயரமே தானிருப்பான். அவனோர் துப்பறிபவனென்று நான் கனவிலும் எண்ணவில்லை. அவன், மகாராஜாவைப் பற்றியும், சேனாதிபதியைப் பற்றியும், பல கேள்விகள் கேட்டான். நானும் ஒன்றும் சந்தேகியாமலே எல்லாம் சொன்னேன். நான் செய்தது தவறு என்று இப்பொழுது தான் எனக்குத் தெரிகிறது. ஆனால், நான் ஆணையாகச் சொல்லுகிறேன்; மகாராஜாவை அவனிடம் புகழ்ந்தேனே யன்றி, ஒரு நிமிஷமேனும் தூஷிக்கவில்லை. மகாராஜ், நான் ஏதாவது பிசகு செய்திருந்தால் தயவுசெய்து என்னை மன்னிக்கவேண்டுமாய்ப் பிரார்த்திக்கிறேன். (தண்டம் சமர்ப்பித்தல்)

சந்திரகுப்தன்:—விசித்திரவீரிய, நான் விளையாட்டாகப் பேசினேன்! உன்னுடைய இராஜபக்தியும், விசுவாசமும் சில தினங்களுக்கு முன்தான் நானறிந்துகொண்டேன். எப்படியெனில், நாடோடியைப்போல் வேடந்தரித்து வந்தவன் நான்தான்! மேலும், சேனாதிபதியை ஆபத்தினின்று நீக்கியதும் நீதானென்று அறிந்து சந்தோஷப்பட்டேன். உன்னுடைய இராஜபக்தியை மெச்சினேன்! நான் இப்பொழுது கமலாஸனனை வேலையினின்றும் நீக்கிவிட்டேன். அவனுக்குப் பதிலாக உன்னையே என் மந்திரியாக நியமித்திருக்கிறேன்! நீ இப்பொழுதைப் போலவே எப்பொழுதும் விசுவாசத்துடன் உன் கடமையைச் செய்துகொண்டிருப்பாயா?

விசித்திரவீரியன்:—மகாராஜ், இவ்வளவு உந்நதப்பதவிக்கு நான் பாத்திரனாவேனோ வென்றுதான் பயப்படுகின்றேன். எளியோன்மீது வைத்திருக்கும் கிருபைக்காக எப்பொழுதும் கடமைப்பட்டவனா யிருக்கிறேன்.

சந்திரகுப்தன்:—விசித்திரவீரிய, உன் அரும் பெருங் குணங்களை நான நன்கறிவேன். இன்னும் சிலதினங்களில் தர்பார் நடத்துவதாக உத்தேசித்திருக்கிறேன். அப்பொழுது உன் உத்தியோகத்தின் அறிகுறிகளான வீரகண்டாமணி, ரத்னமகுடம், பட்டாக்கத்தி மூன்றையும உனக்கு அளிக்கிறேன். நீ சென்று வருவாய்.

(விசித்திரவீரியன் செல்லல்)

வாத்ஸல்ய, வா, உண்டிசெய்யப் போவோம்.

(இருவரும் செல்லல்)

காட்சி முடிகிறது.

---

## அங்கம் V.

## களம் 2. கமலாஸனன் மாளிகை.

காலம்—பிற்பகல்.

(கமலாஸனன் புலம்புதல்)

கமலாஸனன்:—ஆ! நான் பிறருக்கு வெட்டிவைத்த குழி எனக்கே பிரயோசனப் பட்டதுபோலாயிற்றே! நான் செய்த ஏற்பாடுகளெல்லாம் வீணாயினவே! வெகு பாடுபட்டு வாத்ஸல்யனையும் அரசரையும் பிரித்துவைத்தேன். ஆனால் அவர்கள் இப்பொழுது முன்னிலும் அதிகமாகச் சிநேகம் பாராட்டும்படி யாயிற்று! பிரதாபன் சிங்காதன மேறவேண்டு மென்பதற்காக அரசரையும் இராணியையும் பிரித்துவைத்தேன்! ஆனால் அரசர் இனி இராணியை ஏற்றுக்கொள்வா ரென்பதில் என்ன சந்தேகம்? என் குமாரன் வாஸந்திகையை மணந்துகொள்ள வேண்டுமென்று அனேக ஏற்பாடுகளைச் செய்தேன். நான் சொன்னதை யரசரும் அலக்ஷியம் செய்தார்! சேனாதிபதியும் கேட்கவில்லை! வாஸந்திகையிடம் பேசிய பொழுது அவள் புருஷோத்தம

னேயே கணவனுகக் கொள்வேனென்ருள்! இப்பொழுது அரசர் தன் குமாரத்தியை அந்தப் புருஷோத்தமனுக்கே பாணிக்கிரஹணஞ் செய்து கொடுப்பதாகச் சொல்லியதை யும் என் காதுகளாலேயே கேட்டுவிட்டேன்! சிங்காதனம் அபகரிக்க எண்ணங்கொண்டு சேனதிபதியைக் கொன்று விட யத்தனித்தேன் எனக்குக் காலனகப் புருஷோத்த மனும் விசித்திரவீரியனும் தோன்றினர்கள்! எல்லாவற் றிற்கும் மேலாக, அரசர் என்னைக் கழுவிலேற்ற உத்தர வளித்தார்! ஆ! அப்படிச் செய்திருந்தாலும் என் ஜன்மம் ஒருவாறு முடிந்திருக்கும். ஐயோ, அவமானத்திற்கு மேல் அவமானமாக நான் பகைத்த வாத்ஸல்யனே என் னுயிருக்காக அரசரிடம் மன்ருடும்படி யாயிற்று. ஆ, தெய்வமே, இவ்வளவு காலம் இவ்வளவு உந்நதப் பதவியி லிருந்த எனக்கு இவ்விதக் கஷ்டங்களும் அவமானங்களும் சம்பவிக்கலாமோ? இதுவரையில் நான் பட்டதெல்லாம் போதாதென்று வாத்ஸல்ய ரென்னைப் பிழைப்பித்தார்! ஐயோ! இனிப் பிறருடைய முகத்தில் எவ்வாறு விழிப் பேன்! நான் சிநேகிதர்களென்று பாவித்திருந்த ஜயபாலன் முதலியோர், என்னிடம் பொருளைக் கவர்ந்து கொண்டது மன்றி, நியாயஸ்தலத்திலு மென்னைக் காட்டிக்கொடுத்து விட்டுத் தாங்கள் தப்பியோடும் சமயத்திலும் என்னைக் கைவிட்டுப் போய்விட்டார்கள்! நான் சத்துருவென் றெண் ணிய வாத்ஸல்யனே என் மித்திரனகி என்னுயிரை இன் றையதினம் காப்பாற்றினன்! எனினும், நான் இனி உயிர் வைத்துக் கொண்டிருப்பதால் யாருக்கு என்ன பயன்? ஒன்றுமில்லை. என்னுடனுடன் பிறந்த பழி என்னை யொரு நாளும் விட்டகலாது!

ஆ! நான் எவ்வளவோ உந்நதப் பதவியிலிருந்தும், எனக்கு இக்கதி சம்பவிக்கக் காரணமென்னே? நமக்கு மேல் கடவுள் ஒருவ ரிருக்கிருரென்பதை மறந்து காரியத் தைச் செய்ததே யன்ருே? நமக்குள்ள அற்ப புத்தியைக் கொண்டு, கடவுளே யில்லையென்றும், எல்லாம் புத்திதான்

கடவுளென்றும் சொல்லும்படி அபீக்ஷமான காலத்தில் புத்தி மயங்குகின்றது. நான் அவ்வாறு நினைத்துத்தான் கெட்டேன்! இனியாகிலும் எனக்கேதாவது நற்கதி கிடைக்குமோ? ஹே ஜகதீசா! என் கதி இப்படியும் ஆகவேண்டுமா? நான் ஏன் இன்னும் உயிர்வைத்துக்கொண் டிருக்கின்றேன்? இவ்வுலகில் தீராப் பழியைச் சம்பாதித்து விட்டேன். உடம்பில் வலிமை யிருக்கும் வரையில் என் புத்தி கெட்டு, இனிக் காலன் வருங்காலத்தில் மனம் நடுங்குகின்றது. ஆ, கடவுளே! நான் நேசித்தவர்களு மென்னைக் கைவிட்டு, அரசரும் பகைத்து, எல்லோருக்கும் பொல்லனாய், ஏழ்பிறப்பும் தீயனாய் ஆனபிறகு உன்னையன்றி எனக்கு வேறு யார் துணைவ ரிருக்கின்றார்க ளப்பா! ஹே ஜகதீசா! ஹே ஆபத்பாந்தவா! ஹே அநாதரக்ஷகா! நீதான் என்னைக் கரையேற்றவேண்டும்!

"பொய்யினேன், புலையினேன், கொலையினேன், நின்னருள்
புலப்படவறிந்து நிலையாப்
புன்மையேன், கல்லாத தன்மையே, னன்மைபோற்
பொருளலாப் பொருளை நாடும்
வெய்யனேன், வெகுளியேன், வெறியனேன், சிறியனேன்,
வினையினே, னென்றென்னை நீ
விட்டுவிட நினைவையேற் றட்டழிவ தல்லாது
வேறுகதி யேதுபுகலாய்;
துய்யனே, மெய்யனே, யுயிரினுக் குயிரான
துணைவனே, யிணையொன்றிலாத்
துரியனே, துரியமுங் காணு வதீதனே,
சுருதிமுடி மீதிருந்த
ஐயனே, யப்பனே, யெனுமறிஞ றறிவைவிட்
டகலாத கருணைவடிவே!"

**   **   **   **   **   **

ஆ! ஏதோ மயக்கம் வருவது போன்றிருக்கின்றதே! ஏதோ உலகமே சுற்றுவதுபோ லிருக்கின்றதே! ஏ பிரதாபா! பிரதாபா! உனக்காகவன்றோ நான் இவ்வளவெல்லாம் கஷ்டப்பட்டேன்! பிரதாபா!— பிரதாபா!— ஆ!

(மயக்கமாய்க் கீழேவிழல்)

(காட்சி முடிகிறது)

## அங்கம். V.

### களம். 2. வாஸந்திகையின் அந்தப்புரம்.

காலம்—பிற்பகல்.

வாஸந்திகை:—சுலக்ஷணு, நான் பூர்வஜன்மத்தில் என்ன பாபம் செய்தேனே தெரியவில்லையே! எக்காலமும் எனக்கு ஒரு கஷ்டமில்லாவிட்டால் மற்றொரு கஷ்டம் இருந்துகொண்டே யிருக்கின்றதே! என் காதலரைப்பற்றி ஓர் விஷயமும் தெரிந்துகொள்ளாமல் இன்னும் எவ்வளவு காலம்தான் இருப்பது? அவர் எங்கிருக்கிறாரென்பதே தெரியவில்லையே! ஆ, நாதா, தங்களை யடிக்கடிச் சந்திக்கும் பாக்கியம் நான் அடையாமற் போனாலும், தங்கள் உருவத்தையாவது பார்த்து மனதிற்கோர் ஆனந்தத்தை வரவழைத்துக் கொள்ளுகிறேன். (புருஷோத்தமனுடைய பட மொன்றை யெடுத்துப் பார்த்தல்)

சுலக்ஷணு: வாஸந்திகா, உன் காதலர் இந்த ஊரிலேயே தானிருக்கிறா ரென்று தோன்றுகிறதம்மா. கமலாஸனனை அன்று விசாரித்த பொழுது அவர் தோட்டக்காரனுடைய வேடத்துடனேயே வந்து சாக்ஷி சொன்னாரமே!

வாஸந்திகை:—இவ்வூரிலேயே யிருந்தாலும், அவர் எப்படி இங்கு வரமுடியும்? (படத்தைப் பார்த்துக்கொண்டே) நாதா, துர்ப்பாக்கியையான என்னுடன் சேர்ந்ததினால் தங்களுக்கும் இக்கஷ்டங்களெல்லாம் சம்பவித்திருக்கின்றனவோ? நான் எதற்காகக் கமலாஸனனுடைய செயல்களைக் கவனிக்கும்படித் தங்களை வற்புறுத்தினேன்? அந்தப்பாவி கமலாஸனன் எல்லோருக்கும் தீங்கிழைத்தது போல், தங்களுக்கும் ஏதாவதுதீங்கு இழைத்திருக்கலாமோ! ஆ, நாதா, தாங்களிப்பொழு திங்கிருந்தால், நான் எவ்வளவு சந்தோஷமாயிருப்பேன்! என் தந்தை க்ஷேமமாய்த் திரும்பிவந்த சந்தோஷத்தைப் பூர்த்திசெய்யத் தாங்கள் இங்கிருக்க வேண்டாமா?

சுலக்ஷணை:—இதென்ன வாச்சரியம்! வாஸந்திகா! வாஸந்திகா! இதோ, இந்த ஜன்னல்வழியாய்ப்பார்! உன் பூந்தோட்டத்தில் வந்துகொண்டிருப்பது யாரென்று பார்! அதற்குள் நான் சென்று உன் நகைப்பெட்டியை யெடுத்துக் கொண்டு வருகிறேன். (செல்லல்)

வாஸந்திகை:—(புருஷோத்தமன் தன் சுயரூபத்துடன் வந்துகொண்டிருப்பதைப் பார்த்து பிரமித்து) ஆ! என் கண்களே என்னை மோசம் செய்கின்றனவா யென்ன? நானென்ன விழித்துக்கொண்டிருக்கிறேனா, அல்லது கனவு காண்கிறேனா? ஏதாவது மாயாதேவதை இப்படி மாறுவேடத்துடன் என்னை மோசம் செய்கிறதா என்ன? என் காதலர் எப்படி இவ்வழியாய் வரக்கூடும்? அதிலும் தன் சுயரூபத்துடனா வருவார்? (வாஸந்திகையைக் கண்டவுடன் புருஷோத்தமன் பரபரப்புடன் அந்தப்புரத்திற்குள் ஓடிவந்து)

புருஷோத்தமன்:—கண்மணி! என்னைப்பார்த்து எவ்வளவு காலமாகிவிட்டது! (வாஸந்திகையின் கையிலிருந்த படத்தைப் பார்த்து) என் கண்மணி, என செல்வமே, நீ என்னை மறந்திருப்பாயோ வென்று நான் சிற்சில சமயங்களிற் சந்தேகித்தது என்ன கொடுமை! என் படமொன்றை நான் உன்னிடம் கொடுத்து வைத்திருந்ததைப்போல் உன் படமொன்றை என்னிடம் கொடுத்திருந்தாலும் நானதைப் பார்த்தாவது கொஞ்சம் களிப்படைந்திருப்பேன்!

வாஸந்திகை:—(ஆச்சரியத்துடன் பின் நகர்ந்து) நாதா இதென்ன தாங்கள் என் அந்தப்புரத்துக்கு வந்திருப்பது மன்றித் தங்கள் சுயரூபத்துடனும் வந்திருக்கிறீர்களே! சேனாதிபதிக்குத் தெரிந்தால் பிறகு நம்முடைய கதியென்னவாகும்!

புருஷோத்தமன்:—(ஆச்சரியத்துடன்) என்ன வாஸந்திகா! நடந்த விஷயம் ஒன்றுமே உனக்குத் தெரியாது போலிருக்கிறதே! நான் சொல்லவந்த சந்தோஷ சமாசாரம் உனக்கு முன்னமேயே தெரிந்திருக்குமென்றல்லவோ எண்ணினேன்!

வாஸந்திகை:—என் துணைவ, என் தகப்பனார் க்ஷேமமாய்த் திரும்பி வந்ததைத்தான் குறிப்பிட்டுப் பேசுகிறீர்களென்று நினைக்கிறேன்.

புருஷோத்தமன்:—கண்மணி, அவ்வளவுதானா உனக்குத் தெரியும்? அரசர் வந்தபிறகு நடந்த சமாசாரங்களொன்றையும் நீ யறியாயோ!

வாஸந்திகை:—எனக்கொன்றுமே தெரியாதே! தாங்கள் எதைக் குறிப்பிட்டுப் பேசுகிறீர்களென்பதே யூகிக்க முடியவில்லையே!

புருஷோத்தமன்:—அரசர் திரும்பிவந்ததும், என் தந்தை குற்றமற்றவரென்றறிந்து அவரைச் சிறையினின்றும் விடுவித்தபின்——

வாஸந்திகை:—தங்கள் தந்தை விடுவிக்கப்பட்டாரா? இதுவரையில் இச்சங்கதி எனக்குத் தெரியாதே! ஆ, என் ஹிருதயம் சந்தோஷத்தால் பொங்குகிறது. நாதா, இனி என் கஷ்டங்களெல்லாம் முடியுங் காலமும் சமீபித்து விட்டதென்றே எண்ணுகிறேன். தங்கள் தந்தை குற்றமற்ற சீலரென்பதை யரசர் அறிந்துவிட்டாராகையால், இனி என் மண விஷயத்திலென்னிஷ்டப்படி——

புருஷோத்தமன்:—கண்மணி, வாக்கியத்தை முடிக்காமல் ஏன் நிறுத்திவிட்டாய்? என் செல்வமே, ஒரே சமயத்தில் பற்பல சந்தோஷ சமாசாரங்களை ஒருங்கே சேர்த்துச் சொல்ல வேண்டி யிருக்கின்றது! பொறுமையுடன் கேள். சந்தோஷமிகுதியால் கலங்காதே! நமது விவாகத்திற்கும் அரசர் சம்மதித்து விட்டார்! முகூர்த்தமும் வெகு சீக்கிரத்தில் நிச்சயிக்கப் போகிறார்களாம்!

வாஸந்திகை:—ஆ! (அங்கிருந்த ஓர் பீடத்திற் சாய்தல்)

புருஷோத்தமன்:—கண்மணி, சந்தோஷத்தால் கலங்காதே! நம்முடைய கஷ்டங்களெல்லாம் ஒழிந்துவிட்டன. கண்மணி,

நம்முடைய கலியாணத்தை முடித்தது உன் தந்தைகூட அல்லவென்று சொல்லுவேன். அந்த உத்தம சீலரான சேனாதிபதிதான் அரசரிடம் சொல்லி நம்முடைய கலியாணத்திற்கு யாதோர் ஆக்ஷேபணையும் அவர் செய்யக்கூடாதென்று மன்றாடிக் கேட்டுக் கொண்டாராம்! நான் அவருக்குச் செய்த ஓர் அற்ப உபகாரத்திற்காக அவர் எனக்கு என் உயிரையே கொடுத்திருக்கிறார். அவர் என்னைக் கடிந்து பேசினபொழுது அவரை நன்றி கெட்டவரென்று எண்ணினேன். அவருடையபெருந்தன்மை இப்பொழுதன்றோ விளங்குகிறது!

(சுலக்ஷணா பிரவேசித்தல்)

சுலக்ஷணா:—வாஸந்திகா, என்னுடன் தனியே யிருந்தால் ஓர் நாழிகை ஓர் யுகத்தைப்போல் தோன்றுகிறதென்கிறாயே! இப்பொழுது ஓர் யுகம் ஓர் நாழிகைபோல் தோன்றுகிறதோ?

வாஸந்திகை:—போடி, சுலக்ஷணா, என்னை யெப்பொழுதும் கேலி செய்வது தானடி உனக்குவேலை.

சுலக்ஷணா:—உன்னைக் கேலிசெய்யவில்லை, எவ்வளவு நாழிகையாயிற்று பார். இன்னும் சற்றுநேரத்தில் அருந்ததேவியை அரண்மனைக் கழைத்து வந்துவிடுவார்களே! அவர்கள் வருவதற்குள் நீ பின்னிக்கொள்ள வேண்டாமா? நகைகளையணிந்துகொள்ள வேண்டாமா? வேறு புடவை யுடுக்க வேண்டாமா? அதற்காகச் சொன்னேன்.

வாஸந்திகை:—நீ சொல்வதும் சரிதானடி. நாம் செல்வோம் வா. (புருஷோத்தமனைப் பார்த்து ஓர் ஜாடை செய்துவிட்டுச் சென்றுவிடல்)

புருஷோத்தமன்:—(தனக்குள்) என் கண்மணி! என் ஆருயிர்த் தலைவி!

காட்சி முடிகிறது.

---

## அங்கம் V.

### களம்—4.

**மகாராணியின் சிறைச்சாலை. காலம்—மாலை.**

இராஜகுமாரன்:—அம்மா, அம்மா, அப்பா வருவா வருவான்னு அடிக்கடி சொல்ரியே! அப்பா எப்போ அம்மா வருவா? அப்பாவெ நான் பாக்கணும்மா.

துருவதேவி:—அப்பா, குழந்தாய்! குமாரகுப்தா! என் கண்மணி (உச்சிமோந்து) என் செல்வமே! உன் அப்பா உன்னைப் பார்க்க வருவார். அவர் இன்றைக்கும் வரலாம்; நாளை வந்தாலும் வரலாம்; அல்லது பல வருஷங்கள் கழித்தும் வரக்கூடும் உன் அப்பாவைப் பார்க்க வேண்டுமென்று ஆசையாயிருக்கிறதா? (கண்ணீர் பெருக தனக்குள்) ஐயோ! ஜகதீசா!

(சிறைச்சாலையின் கதவை யாரோ தட்டுதல்)

லீலாவதி:—(தனக்குள்) இந்நேரத்தில் இங்கு யார் வரக்கூடும்? (யோசித்தல்) : (கதவை யாரோ மறுபடியும் தட்டுதல்) யார் அங்கே?

சேனாதிபதி:—(வெளியிலிருந்து) மகாராஜா விஜயம் செய்திருக்கிறார்கள். தயவு செய்து கதவைத்திறக்கவேண்டும்.

லீலாவதி:—(துருவதேவியைப்பார்த்து) அம்மணி, இப்பொழுது தான் தாங்கள் தைரியமா யிருக்கவேண்டும். மகாராணியாரே, தங்கள் கஷ்டங்களெல்லாம் முடியுங் காலம் சமீபித்துவிட்டது. இவ்வளவு காலத்திற்குப் பிறகு அரசர் இங்கு விஜயம் செய்திருப்பது தங்களை மீட்டி யாண்மனைக் கழைத்துச் செல்வதற்குத்தா னென்பது நிச்சயம். அம்மணி தாங்கள் சந்தோஷமாய்த் தங்கள் கணவரைச் சந்திக்க வேண்டும். ஆனால் இளவரசர் இங்கிருக்கக்கூடாது. தன் தந்தையைப்பார்க்க வேண்டுமென்று இளவரசர் எவ்வளவு ஆசைப்பட்டாலும், சற்றுநேரம் கழித்துத்தான்

அவ்வாசையைத் தீர்த்துக்கொள்ள வேண்டும். தாங்கள் மாத்திரம் தைரியமா யிருங்கள்.

(சென்று கதவைத் திறந்துவிட்டு இராஜகுமாரனைத் தூக்கிக் கொண்டு சிறைச்சாலையின் உள் அறைக்குட் சென்றுவிடல். சந்திரகுப்தனும், வாத்ஸல்யனும், சேனாதிபதியும் புடைசூழப் பிரவேசித்தல்)

சந்திரகுப்தன்:—ஹே! துருவதேவி! என் குற்றமற்ற செல்வமே! என் கண்மணி! உன்னை——

துருவதேவி:—பிராணநாத! நமஸ்கரிக்கிறேன்!

சந்திரகுப்தன்:—(கண்களில் கண்ணீர்ததும்ப) என தரிய கண் மணி! துருவதேவி! ஓர் காரணமுமின்றி உன்னை அநியாய மாய் இவ்வளவுகாலம் வருத்திவிட்டேன்! என் பிரியநாயகி! நான் உனக்கிழைத்திருக்கும் கொடிய தீமைகளை யெல்லாம் பொருட் படுத்தாது என்னைக் கண்டவுடன் பயபக்தியுடன் வணங்குகின்றனையே! என்னே உனது பக்தி!

"அலங்காரமன்னன்" என்ற மெட்டு. தாளம் - சாப்பு.

பல்லவி.

மாசிலாத மாதரசே — என்செய்வேன்
வன்சொல்லால் வஞ்சித்தேனே.

சரணங்கள்.

1. பாரினிற்சிறந்த மாதென்பதை முற்றும்
காரிகையே நான்மறந்தே யுனை இந்தக்
காரிருள் கொண்ட சிறைச்சாலையில் வைத்தேன்
வீரியமோ சௌரியமோ யாதென்று சொல்வேன் (மாசிலா)

2. பாதகன் வார்த்தையைப் பேதமையால் நம்பித்
தாதையிலா ஓராணைதையென் றெண்ணினேன்
ஆதவன் மேற்றிசைப் போதருமுன் உன்னைக்
காதலியே கோலமுடன் ஆலயம் சேர்ப்பேன்! (மாசிலாத)

ஹே! துருவதேவி! நீ இந்தச் சிறைச்சாலையி லிருந்து என் னென்ன கஷ்டங்களையெல்லாம் அனுபவித்தாயோ? எவ்வா

றெல்லாம் வருந்தினுயோ! விதிவசத்தின் கொடுமையாலும் என் மூடத்தனத்தாலும் நான் கனவிலும் தீங்குசெய்ய நினைக்காத மிகவும் அபிமானமுள்ளவர்களை யெல்லாம் அநியாயமாய்த் தண்டித்து விட்டேன்! என் சகி! நான் மதியின்றிச் செய்தகாரியம் உன்னைச்சிறைசெய்ததுமாத்திரமன்று. அநியாயத்திற்கும்மேல் அநியாயமாக அனேக காரியங்களைச் செய்துவிட்டேன். என் உத்தம அமைச்சனை வாத்ஸல்யனையும் உன்னைச் சிறைசெய்ததுபோலவே சிறை செய்து விட்டேன். இக்காரியங்களுக்காகக் கடவுள் என்னையும் தண்டியாமலிருக்கவில்லை. ஹே துருவதேவி! நீ இந்நகர் இராணியென்பதை மறந்து, ஓர் உயர்குலப் பெண்ணென்பதையும் மறந்து, நான் ஓர் காரியத்தைச் செய்யுமுன் தீர ஆலோசித்தே செய்யவேண்டுமென்பதையும் மறந்து, இவ்விதக் கஷ்டங்களை யனுபவிப்பதே உனக்கு அசாத்தியமாயிருக்குமென்பதையும் மறந்து, இவ்வாறு மதிகெட்ட காரியம் செய்துவிட்டேன். அதற்கெல்லாம் காரணம் நான் எனக்கே துரோகம் நினைத்தவனிடம் முழு நம்பிக்கை வைத்ததே.

ஆனல், கண்மணி, நீ அவைகளெல்லாவற்றையும் மறந்துவிட வேண்டும். மறுபடியும் நீ முன்போல் இந்நகர் இராணியாகி, என் பிரியநாயகியாக, வெகு வைபவத்துடனும் சுகத்துடனுங் காலங்கழிக்க வேண்டும். ஏதோ நடந்தது நடந்துவிட்டது. அதைத் திருத்த ஒருவராலும் முடியாது. ஆனல், நீ ஓர் நிமிஷமேனும் இனி இச்சிறைச்சாலையி லிருக்கக்கூடாது. நீ இந்நகர் அரசியன்றே? வெளியில் பட்டாளம், துருப்புகள், வாத்யகோஷங்கள், நவரத்னப் பல்லக்கு எல்லாம் தயாராயிருக்கின்றன. ஆகையால் உடனே புறப்பட்டு அரண்மனைக்குச் செல்வோம் வா. (தனக்குள்) குழந்தையைக் காணுமே! (உரக்க) கண்மணி, நம் குழந்தையை நான் பார்க்கக் கூடாதா? அவ்வளவு துர்ப்பாக்கியனுய் விட்டேனு? குழந்தை எங்கே?

(லீலாவதி இராஜகுமாரனை யெடுத்துக்கொண்டு பிரவேசித்தல்)

இராஜகுமாரன்:—(துருவதேவியைப் பார்த்து) அம்மா, அம்மா, என்னைத் தூக்கிவச்சிக்கோ அம்மா! (துருவதேவி கண்ணீர் சொரிந்துகொண்டு குழந்தையை யெடுத்துக் கொள்ளல்) அம்மா, நீ ஏம்மா அளரே? நீ அளுதா எனக்கும் அளுகே வருதம்மா.

துருவதேவி:—(கண்ணீர் ததும்ப) அப்பா, குழந்தாய்! குமார குப்தா! என் செல்வமே! நீ இப்பொழுதுதானே உன் பிதா எப்பொழுது வருவாரென்று கேட்டாய். என் கண்ணே, இவர்தான் உன் பிதா. உன் கையிலிருக்கும் பம்பரத்தை யென்னிடம் கொடுத்துவிட்டு உன் தந்தையை வணங்கு.

இராஜகுமாரன்:—அப்பா, அப்பா, (அருகில் அணுகி) நீ ஏன் அப்பா முந்தியே வல்லே? என்னைத் தூக்கி வச்சிக்கோ அப்பா! எனக்கு இன்னொரு பம்பரந் தா அப்பா.

சந்திரகுப்தன்:—(அரசிளங் குமாரனைப் பார்த்து) என் கண்மணி, குழந்தாய், உன்னைப்பெற நான் என்ன பாக்கியம் செய்தேனோ? உன்னைக் கண்டால் ஸ்ரீ கிருஷ்ணபகவானே அவதாரமெடுத்து வந்தாற்போ லிருக்கிறது! குழந்தாய் (தூக்கி வைத்துக்கொள்ளல்) என் செல்வமே, நீ இனி அரை நிமிஷமேனும் இப் பாழடைந்த சிறைச்சாலையி லிருக்கக்கூடாது! வாருங்கள் எல்லோரும் அரண்மனைக் கேகலாம்.

(ஓர் சேவகன் பிரவேசித்தல்)

சேவகன்:—மகாராஜ், மத்ரதேசத் தாசரிடமிருந்து ஓர் தூதர் அரண்மனைக்குச் சற்றுமுன் வந்தார். மகாராஜா இவ்விடம் விஜயம் செய்திருப்பதை யறிந்து இக்கடிதத்தை மகாராஜாவிடம் கொடுக்கும்படி சொன்னார். தான் மகாராஜாவின் பேட்டிக்காக அரண்மனையில் காத்திருப்பதாகத் தெரியப்படுத்தச் சொன்னார்.

சந்திரகுப்தன்:—(கடிதத்தைப் பிரித்துப் படித்தல்)

"மகா-ள-ள-ஸ்ரீ சந்திரகுப்த மகாராஜாவுக்கு மத்திரதேசத்து மன்னன் விக்கிரமகேது எழுதிக்கொண்ட லிகிதம்.

மகாராஜ்,

நான் என் துரதிருஷ்டத்தால் என் சத்துருக்களால் தோற்கடிக்கப்பட்டு என் நாடிழந்து காந்துறைந்த காலத்தில் என்

செல்வப் புதல்வியான துருவதேவியைத் தாங்கள் தயவுடன் தங்கள் இராணியாக அங்கீகாரம் செய்து கொண்டீர்களென்று கேள்விப்பட்டு ஆனந்தசாகரத்தில்மூழ்கிப் புளகாங்கிதனுனேன். பகவத் கிருபையால் நான் இப்பொழுதுதான் சில அரசர்களி னுதவியால் என் சத்துருக்களை வென்று என் இராஜ்ஜியத்தை மறுபடியும் அடைந்திருக்கிறேன். இப்பொழுது கொஞ்சம் இராஜ்ஜிய காரியம் அதிகமா யிருப்பதால் வெகு சீக்கிரத்தில் என் பத்தினியுடன் புஷ்பபுரம் வருகிறேன். மற்றவை நேரில்,

தங்களன்புள்ள,
விக்கிரமகேது.
மத்ரதேசத்துமன்னன்."

ஹா துருவதேவி! எல்லாம் உன் தூய்மையையே வெளிப் படுத்துகின்றன! எல்லாம் சுபமாகவே முடிந்துவிட்டது. ஹே! ஜகதீசா என்னே உன்மாயை! எல்லாம் ஈசன் செய லே! மனிதர்களுக்குள்ள அற்பபுத்தியைக்கொண்டு என்ன செய்யமுடியும்? என்னருமைத் துருவதேவி, வா! என் கண்மணி, குமாரகுப்தா, வா! எல்லோரும் அரண்மனைக் கேகலாம்! ஹே, சேனுதிபதி, இந்நகரிலுள்ள சிறைச்சாலை களை யெல்லாம் திறந்துவிட உததரவு செய். இன்றைய தினம் நம் இராஜ்ஜியத்தில் ஒருவராவது கிலேசப்படக் கூடாதன்றோ! வாருங்கள் செல்லலாம். அரண்மனைக்குச் சென்று ஓர் சுபமுகூர்த்தத்தில் வாஸந்திகையைப் புரு ஷோத்தமனுக்குப் பாணிக்கிரகணம் செய்து மகிழ்வோம். வாருங்க ளெல்லோரும் செல்லலாம்.

(எல்லோரும் செல்லல்: வாத்திய கோஷங்கள் முழங்குதல்)

**காட்சி முடிகிறது.**

சுபம்! சுபம்! சுபம்!

**மங்களம்.**

*வாழ்க அந்தணர், வானவர், ஆனினம்;*
*வீழ்க தண்புனல்; வேந்தனும் ஓங்குக;*
*ஆழ்க தீயதெலாம்; ஹர நாமமே*
*சூழ்க வையகமும்; துயர் தீர்கவே.*

**முற்றிற்று.**

# நூலாசிரியர் பின்னுரை.

தமிழபிமானிகள் அனைவர்க்கும் வந்தனம். இக்கதையை சுமார் ஆறு வருடங்களுக்குமுன் எழுதிமுடித்தேன். ஆனால் தமிழபிமானிகள் போற்றுவார்களோ அல்லவோவெனும் அச்சத்தால் இதுவரை இதை வெளியிடத்துணியவில்லை. என் நண்பர்கள் பலருடைய கோரிக்கைப்படி இப்பொழுது வெளியிட்டுள்ளேன். இதுவே எனது முதல் புத்தகமாதலால் குற்றங்குறைகளில்லாமலிரா. அத்தகைய குற்றங்குறைகளைக்கொள்ளாது அன்பர்கள் குணங்களையே கொள்ளவேண்டுமாய்க் கோருகிறேன்

இப்புத்தகம் பெரியோர், சிறியோர், ஆண், பெண், அனைவர்க்கும் பயன்படும்படி சுலபமான நடையில் எழுதப்பட்டிருப்பதுடன், அதில் அனேக அரிய நீதிகளும் புகட்டப்பட்டிருக்கின்றன. பள்ளியில் பயிலும் மாணவர்கள் இதனைப்படித்துப் பயனடையவேண்டுமென்பதே என் முக்கிய கருத்து.

இக்கருத்துடனேயே இந்திய சரித்திரத்தில் மிகவும் கீர்த்தி வாய்ந்த சந்திரகுப்த மன்னனைப்பற்றியும், அவர் காலத்து நாகரீகத்தைப்பற்றியும், மற்றுமுள்ள அவர் காலவர்த்தமானத்தைப் பற்றியும் இப்புத்தகத்தில் விரிவாக ஆங்காங்கு எடுத்துரைக்கப்பட்டிருக்கின்றது. கதையும் மனதைக் கவரக்கூடியதாகவே இருக்குமென்று நம்புகிறேன்.

என் அன்பார்ந்த சகோதரரான ஸ்ரீமான் அம்பா சங்கர ராவ் B. A., அவர்களுடைய முயற்சியாலேயே இப்புத்தகத்தை அச்சிடத்தொடங்கியது. மாணுக்கர்களுக்கு இப்புத்தகம் மேன்மேலும் பயன்படக்கூடியதாக இருக்கவேண்டுமெனும் எண்ணத்துடன் அன்னவர் இப்புத்தகத்தைப்பற்றி ஆங்கிலபாஷையில் ஓர் ஆராய்ச்சியும் (Criticism) குறிப்புகளும் (Notes) எழுதினர். ஆனால் புத்தகம் வெளிவருமுன் ஷை என் அருமைச் சகோதரர் விண்ணுலகம் ஏகிவிட்டார். அவருடைய ஞாபகார்த்தமாகவே இப்புத்தகத்தை வெளியிட்டுள்ளேன்.

இங்ஙனம்,

நூலாசிரியன்.

## NOTES.

**1. Introductory:—**

The one historical incident round which the plot is woven is Chandragupta's "advance to the Arabian Sea through Malwa and Guzarat and his subjugation of the Peninsula of Sourashtra or Kathiawar which have been ruled for centuries by a Saka Dynasty—the Western Satraps." The wars which added these remote provinces to the Gupta Empire should have lasted for about 12 or 13 years. This period was however not one of continued struggle. It was only a period of struggle for supremacy between the Gupta monarch and the Western Satrap. *cf.* text— "*சில வருடங்களுக்குமுன் நமதரசருக்கும் ருத்திர சிம்ஹனுக்கும் நடந்த போரில்*"........etc. (Act I, sc. 1, page7); also "*முன் நம்முடன் போர்புரிந்து தோல்வியடைந்த பொழுது ருத்திரசிம்ஹன் பழிக்குப்பழி வாங்குவதாகச் சபதம் செய்தது எனக்குத்தெரியும்.*" (Act II, sc. 1, page 33); and again, "*முன் தோல்வியடைந்த ருத்திரசிம்ஹன்*.........etc. (Act II, sc. 3, page 45).

The struggle eventually ended in the overthrow of Rudrasimhan and the annexation of the provinces ruled by him, to the Gupta Empire.

**2. Act I, sc. 1.—**

In this scene, the keynote of the play, namely, the failure of Kamalasanan's schemes, is struck at the very beginning. *cf:*—"*நீ சொல்லுமாறு செய்தால்தான் ஓர்கால் அக்காரியம் கைகூடாவிட்டாலும் எங்கள்பேரில் குற்றம் சாட்டமாட்டாய்*" (page 2); and also, "*நீ பேசுவதைப் பார்த்தால் ஏதோ நான் எடுத்துக்கொண்டிருக்கும் காரியம் நமக்குச் சாதகமாக முடியாமல் ஒருவேளை பாதகமாக முடியவுங்கூடும் போலிருக்கிறதே.*" (page 3).

3. Page 7, line 1.—மன்னனும் ருத்திரசிம்ஹன் etc— The later Western Satraps seem to have been completely Hinduised under the influence of New Hinduism. The word Rudra (which is the name of Siva) occurring in their names (as in Rudrasimhan for instance) is significant.

4. Page 7, line 28.—"சந்திரகுப்த மன்னர் அவனுக் கிணைத்தவரா? etc. *cf.*, *Vincent Smith:* "A strong and vigorous ruler, well qualified to govern and augment an extensive empire...... He was fond of depicting himself on his coins as engaged in successful personal combat with a lion after the old Persion fashion." *cf.*, ***Marsden:*** "Chandragupta, great warrior that he was, has been shown in the picture enlarged from one of his coins as an archer with a bow in his right hand." Please also vide text on page 8. "நமது அரசரோ படைக்கலப் பயிற்சிகளில இணையற்றவர்." Vide also Introduction.

5. Page 8, line 11.—அன்னியர்களான சாக்கியர்கள் நடையுடை பாவனை எல்லாவற்றிலும் நாகரீகமற்றவர்கள். vide, Note No. 14.

6. Page 9, line 15.—"துருவதேவி வாஸ்தவத்தில் ஓர் இராஜகுமாரி அல்லள்" etc: The real parentage of Druvadevi is lost in the obscurity of the distant past. For purposes of the play, the author makes her the daughter of one Vikramaketu who, at the time of the commencement of the play, happens to be in vanquishment and exile.

7. Page 17, line 22.—"வண்டிக்காரப் பயல்கள் வாடகை ஜாஸ்தி கேட்டார்கள்" Pushpapura continued to be a rich and populous city throughout the reign of Chandragupta. The words in the play indicate that there was

much traffic and constant communication between the capital and the other towns of India.

8. Page 25, line 29.—வழியில் எத்தனையோ சத்திரங்களிருக்கின்றன: *cf, Fa Hien's Account of Pataliputra in Vincent Smith :* "The people were rich and populous and seemed to emulate each other in the practice of virtue. Charitable institutions were numerous; rest-houses for travellers were provided on the highways."

9. Page 26, line 1.—திருடர்கள் பயமும் ஒழிந்துவிட்டது:—*cf., Vincent Smith :* "Fa Hien never has occasion to complain of being stripped by brigands. Probably India has never before been governed better, after the oriental manner than it was during the reign of Vikramaditya, *cf.,* also ***Marsden*** "The roads were quite safe for travellers."

10. Page 30, line 23.—மகாலக்ஷ்மியையொத்த மகாராணி:—Leelavathi's comparison of her mistress to the Goddess Lakshmi should have borne much significance in the Gupta age. In the Gupta period Buddhism grew feebler and feebler and Hinduism grew stronger and stronger. To spread this New Hinduism far and wide, temples (with images of Gods in them) which gave to religion "a local habitation and a name" were built all over India. Just as the earliest images now found in India are those of Buddha, so the earliest image that has been found of a Hindu god is that of Sri or Lakshmi, the Goddess of good fortune. This shows that the worship of Lakshmi ought to have been very common. Besides, according to the Hindu faith, the ruling king is held to be the incarnation of Mahavishnu; and on this faith all the subjects of a king pay homage to him as the

personification of the Divine Power. It is therefore but fitting for Leelavathi to bestow on the king's wife the appellation of the consort of Vishnu. Again, Chandragupta himself was a worshiper of Vishnu and Lakshmi is the consort of Vishnu.

11. Page 35, line 14.—கு. ச. 88ஆவு. The letters கு. ச. denote குப்த சகாப்தம். The Gupta Era commences from 320 A.D. and historians are fairly agreed on this point.

12. Page 42, line 18.--நரபலி கொடுக்கக்கூடாதென்று etc.—There is no warrant in history to say that Chandragupta did put an end to human sacrifices. But it is not too much to be expected of such an enlightened monarch. *Fa Hien* in his account of the Gupta Empire says "Chandragupta was capable of bestowing on his people the benefits of orderly government in sufficient measure to allow them to grow rich in peace and prosper abundantly...... The merciful teachings of Buddhism influenced the lives of all the classes. Chandragupta, though he was a staunch worshipper of Vishnu, was yet an admirer of Buddist principles.

13. Page 47, line 25. சாக்கிய சத்திரபதி :—It is a historical fact that the Saka rulers styled themselves Satraps after the old Persian fashion. The word Satrap is a Greek form of the Persian Kshatrapa—the viceroy or ruler of a province or Satrapy.

14. Page 69, line 12.—இந்தச் சாக்கியர்களிடத்தில் etc., *cf, Vincent Smith:*—" The motives of an ambitious king in undertaking an aggressive war against a rich neighbour, are not far to seek. But we may feel assured that differences of *race, creed* and *manners*

supplied the Gupta monarch with special reasons for desiring to suppress the *impure foreign* rulers of the west.

15. Page 69, line 17.—*அவனைச் சேனையுடன் அனுப்பிவிட்டு* etc. This shows that 'no greater hunter after glory (than Chandragupta) breathed.'

16. Page 71, lines 10 to 16.—*பரதேசிக் கோலத்துடன்..........ஸ்ரீமந் நாராயணமூர்த்தியைத் தரிசித்துவிட்டு* etc :—*cf, Vincent Smith* "Chandragupta Vikramaditya, although tolerant of Buddhism and Jainism, was himself an orthodox Hindu, specially devoted to the cult of Vishnu." The system of going on pilgrimages dressed as a beggar is surely a surviving relic of Buddhist custom. This shows that while New Hinduism was fast growing stronger and stronger, Buddhism was not altogether extinct. Buddhist principles still governed the hearts of the people to a certain extent. Vide also Note 11.

17. **Act III, sc. 4.**—

This is one of the most interesting and finished scenes in the play. Note the dramatic irony throughout this scene.

Another point to be appreciated is the gradual growth of Kamalasanan's ambition. In the beginning his ambition is not personal. He only wants that his son should be the successor to the great Gupta monarch. Besides, though the means adopted by him to bring about this end are not fair, he wants the succession to be brought about only in a strictly constitutional manner. It is only when his attempts become futile and he is thwarted at all quarters does he become furious. It is only then that 'vaulting ambition' of a personal nature seizes him

with a fury and drives him to adopt a blind and desperate course. Vide Introduction: "As in most cases, chances and circumstances give rise to jealousy and hatred and the pursuit of ambition becomes more passionate and even thoughtless."

18. **Act III, sc. 5**:—One noteworthy feature in this scene is that Purushottaman rightly works out the ruin of Kamalasanan's hopes. Moral justice and poetical justice alike require that the son of Vathsalyan should in some measure, be the avenger of the wrongs done to Vathsalyan.

19. Page 110 line 15 *நானோர் பிரயாணி*.—*cf, Vincent Smith:* They (the people) were not troubled with passport regulations.........those who want to go away may go; those who want to stop may stop.

20. Page 113 line 28 *நமது சந்திரகுப்த மன்னருக்கு* etc. Vide Note 4.

21. Page 114 line 8 *அசோக மகாராஜாவால் கட்டப் பட்ட அரண்மனை* etc. *cf, Vincent Smith:* On his first visit to Pataliputra, the traveller *Fa Hien* was deeply impressed by the sight of Asoka's palace which was at that time still in existence, and so cunningly constructed of stone that the work clearly appeared to be beyond the skill of mortal hands and was believed to have been built by spirits in the service of the Emperor."

22. Page 114 line 13 *புத்த சமயத் தோர்களுடைய மடங்களிரண்டையும்* etc:—Vide *Fa Hien's Account:* "Near a great Stupa, also ascribed to Asoka, stood two monasteries, one occupied by the followers of the Mahayana and the other by those of the Hinayana sect......... Buddist monasteries were liberally endowed by royal grants and the monks received alms without stint."

23. Page 114 line 16 சந்திர குப்தருடைய தலைநகர் அழகாயிருக்கக் கேட்கவும்வேண்டுமோ etc :— Pataliputra was a beautiful city at the confluence of the Sone and the Ganges. It "continued to be a magnificient and populous city throughout the reign of Chandragupta and was apparently not ruined until the time of the Hun invasion in the 6th century." Note also that the author retains Pataliputra as the capital of the Gupta Empire throughout the play while history speaks of a change of capital from Pataliputra to Ayodhya. Pataliputra is referred to in the play as Pushpapura or 'the city of the tumpet flower.' History says that Pataliputra was founded in the 5th century B.C. by Udaya of the Saisunaga Dynasty.

24. Page 129 line 20 அரண்மனை ஜோஸ்யர்களும் அரசர் இறந்திருக்க முடியாதென்றும் etc :— The Gupta period was one of Hindu Renaissance. Arts, Learning science all were given an impetus and they flourished brilliantly. Chandragupta II himself was a great patron of learning.

25. Page 131 line 29 குமாரகுப்தனையும் அடைய :— Vide *Vincent Smith:* "A son of Vikramaditya by one of his queens Druvadevi was Kumaragupta." There is no warrant in history of the circumstances of Kumaragupta's birth in prison. It is for the purposes of fiction that the author makes Druvadevi the second wife of Chandragupta, and Kumaragupta her son born in prison. Besides, the name *Kumaragupta* is admirably suited to the circumstances of his birth as mentioned in the play. It is most natural to expect Druvadevi to call her son born in prison as her kumara or son with the Dynastic title Gupta added as suffix (Kumara—Gupta)

in the absence of any name given to the child with religious ceremonies as per Hindu custom.

26. Page 132 line 6 விக்கிரமாதித்யனெனும் பட்டத்தை etc: This title has long been associated with the kings of Ujjain. Chandragupta adopted this title after his overthrow of Rudrasimhan. It means the sun of Power. *cf, Vincent Smith:* 'He (Chandragupta) loved sounding titles which proclaimed his martial prowess.'

27. Page 137 line 19 அவனது வலது கரத்தைத் துண்டித்துவிடவோ etc: *cf, Vincent Smith.* Persons guilty of repeated rebellion suffered amputation of the right hand. But such penalty was exceptional and judicial torture was not practised.

28. **Act V, sc. 3:**—Note that a light, gay scene intervenes scene 2—a scene full of feeling and tragedy, and the last scene—a scene full of pathos; this gives the readers an opportunity to have breathing time to get over the effects, produced on the mind, of Kamalasanan's heart-rending soliloquy before enjoying the painful pleasure of the queen's and the yuvarajah's pathetic reclamation.

**R. A. RAO.**



சீக்கிரம் வெளிவரும்

# "சந்திர வர்மா."

ஓர் இனிய தமிழ் நாடகம்.

*R.* நாராயணசாமி ருவ், B. A.,

இயற்றியது.